ஜனனி பதினைந்து வருஷங்கள் சிட்சை விதிக்கப் பட்டாள். ஆனால் அவள் ஆஸ்பத்திரிக்கு அனுப்பப் படவேண்டியவளா, சிட்சைக்கு அனுப்பப்படவேண் டியவளா என்று சரியாய்த் தீர்மானிக்க முடியாமலே போயிற்று. வாயடைத்துப் போய்விட்டதால், கடைசிவரை மணவறையில், அவளுக்கும் அவள் கணவனுக்குமிடையில் என்னதான் நடந்ததென அறிய முடியாமல் போயிற்று. வைத்தியர்கள் அவளைப் பரீட்சை பண்ணிப் பார்த்து, மூளையில் ஏதோ அவளை அழுத்திக்கொண்டு இருக்கிறது என்று சொல்லிவிட்டார்கள்.

ஜனனி, ஆஸ்பத்திரியிலும் சிறையிலுமாகக் காலத்தை மாறி மாறிக் கழித்தாள். ஆனால் எங்கும் அவளால் ஒருவருக்கும் இம்சை இல்லை. சாப் பாட்டை எதிரே வைத்தால் சாப்பிடுவாள். அவ ளுக்குப் பசிக்கிறது என்று யாராவது சொன்னால் தான் அவளுக்கே தெரியும். நன்னடத்தை காரண மாக, மூன்று வருஷச் சிட்சை ரத்தாயிற்று. ஆயினும் அவளுக்குப் போக்கிடம் இல்லாததால்— (அவளை வளர்த்த குடும்பம் பூண்டுகூடத் தெரியாமல் போய் விட்டது)—ஆஸ்பத்திரியில்தான் இருந்தாள்.

இன்னமும் வெகு நாள் கழித்துத்தான் கொஞ்சம் கொஞ்சமாய், கொச்சை கொச்சை யாய், பேச்சு வந்தது. முன் நினைவு சில சமயம் இருக்கும்; சில சமயம் இருக்காது. ஆகையால் பேச்சுக்களில் தொடர்பும் இருக்காது. "என்னில் இருக்கும் நான், உன்னில் இருக்கும் நான், நீ இல்லாத நான்! நீயே இல்லாத நீ—" என்று என்ன என்னவோ பிதற்றிக்கொண் டிருப்பாள்.

ஆனால் நெற்றிக் குங்குமத்தையும் தாலிச் சரட் டையும் ஒரு நாளும் அழிக்க மறுத்து விட்டாள். "சரியாய்ப் போச்சு! பைத்தியங்களா, அவர் செத்துப் போனார் என்று யார் புரளி பண்றது? அவரில் இருந்த 'நீ'ன்னு செத்தது! அவரில் இருக் கிற 'நான்' தான் என்னிக்குமே இருக்கே! நான்

அவரோடு தினம் பேசிக் கொம்மாளமடிச்சுண்டு தான் இருக்கேன். நான் நித்திய சுமங்கலி—எனக்கு அமங்கலமே கிடையாது."

இப்படித் தனக்குத் தானே கையை நீட்டி நீட்டி மிகவும் உற்சாகமாகப் பேசிக் கொண்டிருப்பாள். எப்போதும் சந்தோஷமாய்ச் சிரித்த வண்ணமே இருப்பாள்.

கடைசியில் விடுதலையானாள். உடம்பு தேவலையாயிற்று என்றல்ல; அவளால் இனி ஆபத்தில்லை, இம்சை பண்ணாத பைத்தியமென்று.

அவளுக்குச் சாப்பாட்டுக்கும் குறைவில்லை. ஏனெனில் அவளுக்குப் பிக்ஷையிட்ட வீடுகள் அனைத்தும் திடீரெனச் செழித்தன. அவள் கை நீட்டி வேண்டுமென்று கேட்டோ, அல்லது தானாகவோ ஏதாவது சாமானைப் பெற்ற கடைகளுக்கு அன்றைய வியாபாரம் வெகு மும்முரமாய் நடக்கும். ஆகையால் அவளுக்கு அன்னமிடவும், கேட்டதையும் கேளாததையும் கொடுக்கவும் 'நான் நான்' என்று ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டனர். அவள் கையால் ஒரு முறை உடலைத் தடவினால் போதும்; தீராத நோய்கள், அவ்வுடலிலிருந்து பொட்டென உதிர்ந்து போகும்.

இருந்தாலும் பைத்தியம்—!

இப்படியே ஜனனி வெகு காலம் கொண்டு கிழமாக ஜீவித்திருந்தாள். உடல் சுருங்கி, பல் லுதிர்ந்து தலை மயிர் வெண்பட்டாய் மின்ன.........

அப்புறம் ஒருநாள் ஒரு மரத்தடியில் அவள் மத்தியான்ன வேளையில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாள். மத்தியான்னம் பிற்பகலாயிற்று. பிற்பகல் மாலையாயிற்று. மாலை இரவாயிற்று. இரவு காலையாயிற்று. காலை பகலாயிற்று. அவள் மூக்கிலும் வாயிலும் எறும்பும் ஈயும் தாராளமாய்ப் புகுந்து புறப்பட்டுக் கொண்டிருந்தன.

ஆனால் அவள் எழுந்திருக்கவே இல்லை.

# யோகம்

காலம் காலமாய், கற்பாந்த காலமாய் அவ்விடத்தில் நடமாடியவை காற்றும், மழையும், மண்ணும், மணலுமே. மரமும் செடியும் அவையவை விதை விழுந்த இடத்தில் முளைத்து, வளர்ந்து, சளைத்து மறுபடியும் கிளைத்தன. வானளாவியனவெல்லாம் கூனிக் குறுகிக் குன்றி மறுபடியும் தோன்றின. காற்று சுழல்கையில் அதனுடன் உதிர்ந்த சருகுகள் சுற்றித் தம்மைத் தாமே துரத்தி அலைந்தன. இரவியும் இரவும் மாறி மாறி வந்து போயும், கற்பாந்த காலமாய், காலம் அவ்விடத்தில் வரையே இல்லாது போயிற்று.

மனிதனின் அடிச்சுவடு படாமலே கற்பாந்த காலம்...

ஆயினும் நாளடைவில், இயற்கைக்கும் மனித னுக்குமிடையே நடந்துகொண் டிருக்கும் யுத்தம் அங்கும் பரவியது.

என்றோ ஒருநாள், எவனோ ஒருவன் எவரெவ ரையோ கூட அழைத்துக்கொண்டு அங்கு வந்தான். பார்வையில் படும் வெயிலுக்கு அடைப்பாய் ஒரு கையின் விரல்களை, புருவங்களையொட்டிறைப்போல் சேர்த்து வைத்துக்கொண்டு, மேட்டின்மேல் நின்று சுற்றுமுற்றும் பார்த்தான். கண்ணுக்கு எட்டிய வரையிலும், அதற்கு அப்பாலும் மரங்கள் ஓங்கி நின்றன. கூட வந்தவர்களுக்கு அதையும் இதை யும், அங்கும் இங்குமாய், இன்னொரு கையால் சுட்டிக் காண்பித்தான்.

"சரி, காட்டைக் கழித்தெறியுங்கள்! ரோட் டைப்போடலாம்" என்றான்.

ஆகவே அன்றோ, அதற்கடுத்த நாளோ, மாத மோ, வருடமோ ஆட்களும் யந்திரங்களும் அவ்வி டம் வந்து சேர்ந்தன. வானளாவியவற்றை யெல் லாம் காலடியில் வெட்டி வீழ்த்தின. காலடியில் இருந்தவற்றைக் களைந் தெறிந்தன.

அன்று இரவு வந்தபொழுது, கூலிகள் அங்கே தங்குவதற்குப் போட்டிருந்த சிறு சிறு கூடாரங்களி னின்றும் பொறி விளக்குகள், இருளைக் குத்துக் குத் தெனக் குத்தின.

வேலை நடந்து கொண்டிருக்கையிலேயே, கூடா ரங்கள் மறைந்து குடிசைகள் தோன்றின. நாளடை வில் குடிசைகளுக்குப் பக்கத்திலும் ஒதுக்கத்திலும் வீடுகளும் முளைத்தன.

மேட்டு நிலத்தில் ஒரு ரோடும் வளைந்து வளைந்து ஓடியது.

மனிதன் தான் கட்டிய ரோட்டைத் தானே திறந்து வைத்தான். அவர்களுள் 'பெரிய' மனிதன் ஒருவன், தான் ரோட்டைத் திறந்து வைத்ததற்கு

அறிகுறியாய், தன் வண்டியை அந்த ரோட்டின் மேல் விட்டுக்கொண்டு சென்றான்.

அந்தப் 'பெரிய' மனிதன், மற்ற மனிதர்களை விட இரண்டோர் அங்குலம் குட்டையாய்த்தான் இருந்தான். வலியால் துடிக்கும் அவன் வயிற்றுள், உணவு எல்லோரையும்விட ஒரு பிடி குறைவாய்த் தான் இறங்கியது.

ரோட்டைத் திறந்து வைத்த பிறகு, வேளை வந்து அவன் செத்த பிறகு, முன்னுக்கு வருவதற்காக முறுக்கான வயதில் அவன் இழைத்த பல காரியங்களின் பலனாய், போகிற காலத்தில் புழுத்துப்போன உடல் வேக, மற்றப் பிணங்களைவிடக் கட்டையும் முட்டையும் இரண்டு அடுக்குகள் குறைவாய்த்தான் பிடித்தன.

ஆனாலும், அதனால் 'பெரிய' மனிதனுக்கு அடையாளமாய் மனிதன் தனக்குத் தானே ஏற்படுத்திக்கொண்ட நியமங்கள் மாறவில்லை.

காலம் கடந்தது.

பின்னால் வந்தவர் போனவர்களுக்கும், அந்த ரோட்டு பிடிக்கவில்லை. அதை அழித்தார்கள்.

இச்சமயம் அந்த மேட்டு நிலத்தில் இட்ட ரெயில் தண்டவாளம் கிடுகிடுக்க ஒரு புகை வண்டி 'சுர்'ரென்று சீறிக்கொண்டு வளைந்து வளைந்து வெகு வேகமாய் ஓடியது.

ஒரு நாள்:

அளவுக்கு மிஞ்சிய வேகந்தானோ, அல்லது தண்டவாளத்தில் பாராதுபோன பழுதின் காரணமோ, அல்லது மனிதன் தனக்குள் தான் ஒற்றுமையின்றி இடும் பல சண்டைகளில், ஒரு தரத்தவர் தண்டவாளத்தில் பாதியைப் பிடுங்கி எறிந்ததனாலோ, ஓடிக்கொண்டிருந்த வண்டித்தொடர் திடீரென நிலைதவறி, இரையுண்ட மலைப்பாம்பைப் போல் அப்படியே புரண்டு சாய்ந்தது.

ஏக நாசம். உயிர்ச் சேதம்!

தந்தியிலும் தபாலிலும் ஒலியிலும் செய்தி பறந்தது. அப்புறம் அந்த ரெயில் பாதை உருப்படவில்லை. அதையும் அழித்தார்கள். இருக்கிற தண்டவாளத்தையும் பிடுங்கி எறிந்தார்கள். 'கிராவல்' கற்களை நாலு புறங்களிலும் வாரி இறைத்தார்கள்.

அழித்ததை இழைத்து, திரும்பவும் இழைத்ததை அழித்து...

அப்புறம் அந்த இடத்தில் ஆள் நடமாட்டம் குறைந்து போயிற்று.

அந்த மேட்டு நிலத்தையே அகழ் மாதிரி வெட்டிப்போட்டு விட்டதால், இதுவரை தாழ இருந்த நிலம் மேடாகி விட்டது. சரியான காலத்திலும் காலமல்லாத காலத்திலும் மழை பெய்து, அந்தக் குழிந்த நிலத்தில் ஒரு குட்டை கூடத் தேங்கியது. அதன் கரையில் மரங்களும் செடிகளும் தளிர்த்தன. ஆட்டையும் மாட்டையும் குட்டையில் குளிப்பாட்டினர். அவசரத்துக்குக் குளிக்கவும் குளித்தனர். குடிக்கவும் குடித்தனர். இன்னும் அசுசியான காரியங்களுக்கு அந்த ஜலத்தைப் பயன்படுத்தி, அதன் பலனையும் அநுபவித்தனர்.

பிறகு ஒரு கோடை வந்தது. அதன் கொடுமையில் அந்த வட்டாரத்திலேயே கருப்புக் கண்டது. ஓலைக் குடிசைகள் வெயிலின் வெப்பத்திலேயே பற்றி எரிந்து போயின. பயிர் பச்சைகள் பட்டுப் போயின. வைசூரியும் வாந்தி பேதியும் ஊரையும் உயிர்களையும் சூறையாடின.

குட்டையில் ஜலம் வறண்டது. அதன் கெட்டிப்பட்டுப்போன வயிற்றில் பாளம் பாளமாய் வெடித்திருந்தது. அதில் ஒரு கல்லின் கூழை மண்டை, வளையிலிருந்து ஓணான் எட்டிப் பார்ப்பது

போல், எட்டிப் பார்த்தது. உள்ளங்கையில் ஒரு சொட்டு விளக்கெண்ணெய் பரவும் பரிமாணத்திற்கு, வழவழவென்று ஓர் அசட்டுச் சிவப்பு நிறம்.

பிறகு மழை பெய்தது. நேரம் தப்பி நேர்ந்து, கொஞ்சநஞ்சம் தப்பிய பயிர்களில் தேங்கிக் கதிர்களை அழுக அடித்தது.

ஆனால் அந்தக் குட்டையில் மாத்திரம், இந்தத் தடவை என்னவோ ஜலம் தேங்கவில்லை. துரோகம் பண்ணப்பட்டவனின் அடிவயிறு போல் பூமி கொதித்துக்கொண்டு, அத்தனை ஜலத்தையும் உறிஞ்சிக்கொண்டது.

பூமி அந்த இடத்தில், வயதுப் பெண் ஒருத்தியின் அடிவயிறு போல் தாழ்ந்து இறங்கி மறுபடியும் மேட்டில் ஏறியது.

சின்னதும் பெரிதுமாய்ச் சிதறிக் கிடக்கும் பல கற்களுக்கிடையில் அந்தக் கூழாங்கல்லின் வழுக்கை மண்டை அசிங்கமான ஒரு ரத்தக் கட்டி போல் முடிச்சுக் கட்டிக்கொண்டிருந்தது. வெள்ளையும், கறுப்பும், சாம்பல் வர்ணமுமாய் இருக்கும் அத்தனை கற்களுக்கிடையில், அதன் சொட்டையும் சிவப்பும் சட்டெனத் தெரிந்தன. கொஞ்சம் வேடிக்கையாய்க்கூட இருந்தது.

பள்ளத்தின் விளிம்போரமாய் ஒரு பையன் கூழாங்கல் ஒன்றைக் காலால் பந்தாடிக் கொண்டே விளையாடியவண்ணம் வந்தான். அவனுக்கு என்ன தோன்றிற்றோ, காலால் எற்றிக்கொண்டுவந்த கல்லைக் கையில் எடுத்து, தான் நின்ற இடத்திலிருந்து சிவப்புக் கல்லைக் குறிபார்த்து அடித்தான்.

"கல் குறிமேல் பட்டால், இந்தத் தடவை பரீக்ஷை தேறுவேன். படாமல் போனால்—"

எறிந்த கல் குறிமேல் 'லொட்'டென்று அடித்தது. இரண்டு நெருப்புப் பொறிகளும் பறந்தன.

பையனுக்குச் சந்தோஷம் தாங்கவே முடிய வில்லை. கொம்மாளம் போட்டுக்கொண்டு ஓடினான். அவன் கொக்கரிப்பு எதிரொலிகளைக் கிளப்பிற்று.

*　　　*　　　*

பொழுது சாய்ந்தது.

மேல்தட்டு இல்லாத ஒரு கட்டைவண்டி வீட்டை நோக்கி 'லொடக் லொடக்' கென்று கள் குடித்தவன் மாதிரி ஆடியபடியே புழுதியை எழுப் பிக்கொண்டு மேட்டின்மேல் சென்றது.

அதில் ஒரு 'ஜோடி'. புருஷன் வண்டியை ஓட்டினான். பெண்சாதி, அங்கு ஒருவரும் இல் லாததால், காலை நீட்டிக்கொண்டு கொஞ்சம் அடக் கக் குறைவாகவே படுத்துக்கொண் டிருந்தாள். இருவருக்குமே சற்று மதுமயக்கம்.

"ஏ புள்ளே, மேலே பாரு, நகம் மாதிரி கீறி விட்டிருக்குது மூணாம்பிறை, பாத்தியா? சொருக்குப் பையிலே கையை வெச்சுக்கிட்டுப் பாரு; அதிலே இருக்கிற துட்டெ தொட்டுகிட்டுப் பாரு."

"இங்கே என்ன துட்டு இருக்குதாம்? இருந்த ரெண்டணா பில்லையிலே, சந்தையிலே ஓரணாவுக்கு மூலாம்பழம் வாங்கி முழுசையும் வழிச்சு வாயிலே போட்டுக்கிட்டே. இன்னிக்கு ஒனக்குச் சோத் தோடெ கொட்டறதுக்கு அரையணாவுக்கு முள் ளாங்கி வாங்கியாச்சு. இன்னும் அரையணாவுக்குப் புகையிலெ, அதுவும் உபயோகமத்த புகையிலெ—"

"உன்னெ கள்ளுக்கடைக்கி ஓட்டினாப் போல இருக்கிற கடையிலெ வாங்கசொன்னா, காப்பி ஓட்டலுக்குப் பக்கத்துலேருக்கிற கடையிலே வாங்கினே. கஷ்டப்பட்டு சம்பாரிச்ச காசைக் கரியாக்கறதுலே மணி—"

அவள் முழங்கையை ஊன்றிக்கொண்டு படுத் திருக்கும் நிலையிலிருந்து, சாய்ந்திருக்கும் நிலைக்கு நிமிர்ந்தாள்.

"யாரு கஸ்டப்பட்ட காசு? நீயா, நானு? காரமே யில்லாத புகையிலெ, தூ!"

"அட! இவ்வளவுதான் துப்புவியா? இன்னும் இதுக்குமேலேயும் துப்புவியா? இதோ நான் துப்பறேன் பாரு; எச்சில் எவ்வளவு தூரம் பாயுது பாரு."

இருவரும் அந்தப் பள்ளத்துள், வழியெல்லாம் மாறி மாறித் துப்பிக்கொண்டே சென்றனர். வண்டி மேட்டிலிருந்து இறங்கி அந்தண்டை மறைந்தபிறகு அந்தக் கல்லின்மேல் ஒரு கொத்து எச்சில் வழிந்திருந்தது.

இரவும், அதில் அங்கும் இங்குமாய்ச் சுடர்விடும் நக்ஷத்திரங்களும் பொத்தல் கண்ட குடைபோல் பள்ளத்தாக்கின் மேல் கவிந்தன. நிச்சப்தம்; பிறகு அருகிலிருக்கும் சுடலையினின்று ஒரு நரியின் ஊளை; மறுபடியும் மௌனம்.

பொழுது புலரும் வேளையில், மேட்டில் இருந்த மரங்களுள் ஒன்றிலிருந்து உதிர்ந்த ஒரு பூக்கிண்ணம் கிரீடம் போல் அந்தப் புதைந்த கல்லின் மண்டைமேல் கவிழ்ந்து உட்கார்ந்திருந்தது.

* * *

**ப**ருவங்கள் மாறின. காலத்தின் போக்கில் என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. அந்தப் பள்ளத்தின் பக்கவாட்டில் ஓர் ஊற்றுக் கண்டது. குளுகுளு வென்று பளிங்கு போன்ற ஜலம் மடுவின் அடிவயிற்றிலும் அதிலிருக்கும் கற்கள் மேலும் பாய்ந்தது. ஓடிய ஜலம் அந்தப் புதைந்த கல்லை நன்கு குளிப்பாட்டி, சுற்றி ஒட்டிக்கொண்டிருந்த சேற்றையும் மண்ணையும் பறித்துக் கொண்டு போயிற்று. கல்லின் மண்டை அகன்றது.

நாளடைவில், ஓடும் ஜலம் கொஞ்சம் ஒதுங்கி, அங்கு எங்கோ ஒரு புரையுள் மறைந்து, அரை

மைலுக்கு அப்பால் ஒரு சிறு வாய்க்காலாய் வெளிப் பட்டது.

பல நாள் மலடி ஒரு நாள் தன் வயிற்றில் வித்துத் தங்கியதை உணர்ந்ததுபோல், அந்தப் பள்ளம் திடீரென்று ஒரே புஷ்பச் செடி மயமாகப் புளகித்தது. திடீரென்று அதில் சொரிந்த அழகு, 'இதென்ன' வென்று கண்ணைக் கசக்கிக்கொண்டு நோக்கும்படி இருந்ததே யொழிய, கண்டவுடன் நம்பக்கூடியதா யில்லை.

வசந்தம் அங்கே தங்கி விளையாடியது.

* * *

பிற்பகலில் பாதி கழிந்திருக்கும். வெயில் கூட அங்கே தெரியவில்லை. இளந்தம்பதிகள் இருவர் அங்கு வந்தனர். அவன் வெள்ளைக் 'குடுத்தா' உடுத்திருந்தான். அவள் பட்டுப் புடைவை கட்டி யிருந்தாள். மண வாழ்வின் மணம் இன்னமும் இருவரிடமும் கமழ்ந்து கொண்டிருந்தது. அவளு டைய மை தீட்டிய விழிகளில் அவனை வெற்றி கொண்ட வெறி கூத்தாடியது. இருவரும் ஒருவரை ஒருவர் ரகசியமாய்ப் பார்த்துக்கொண்டு, ஒருவரில் ஒருவர் மகிழ்ந்து கொண் டிருந்தனர். நெஞ்சத் துடிப்பைப்போல் பட படத்துக்கொண்டு அருவி ஜலம் ஓடுவதைக் கொஞ்ச நாழிகை இருவரும் பார்த்துக் கொண்டிருந்தனர். அவள் அந்தச் சிவப்புக் கல்லின்மேல் ஒரு காலை வைத்துக்கொண்டு சின்னச் சின்னக் கற்களாகப் பொறுக்கி ஒவ்வொன் ருய் அந்த ஜலத்தில் போட்டாள்.

அவன் கீழே உட்கார்ந்து, அவள் கல்மேல் ஊன்றிய காலைப் பெயர்க்க முயன்றான். அவள் காலை இன்னும் அழுத்திச் சிரித்தாள். அம்மி மிதித்தது அவளுக்கு ஞாபகம் வந்தது போலும்!

அதற்குள், அங்கே ஜலத்துள் துள்ளிய ஒரு மீன் குட்டியின் மேல் அவன் கவனம் பாய்ந்தது.

அவன் கவனம் தன்னை விட்டு மாறுவது அவளுக்குப் பிடிக்கவில்லை. புன்னகை புரிந்தவண்ணம் அவன் மடியில் அவள் சாய்ந்தாள். குளிர்ந்த காற்று அவர்கள் முகத்தை ஒத்தியது. அவனுடைய குனிந்த பார்வை கனிந்தது. உதடுகள் மௌனமாய் என்னவோ வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டு அசைந்தன.

“உம்? என்ன திட்டறேள்?” மெதுவாய் ஒரு கை அவன் முதுகைத் தடவியது.

“இப்படியே, இப்பவே இறந்து விட்டால் எவ்வளவு நன்றாய் இருக்கும் என்று யோசிக்கிறேன்.”

“இப்பத்தான் சாவைப்பத்தி நினைக்கிறதா? இது மாதிரி பேசாதேங்கோ.”

“ஏன், ஒரு நல்ல கட்டத்தில் முடிவடைந்து விடுவது நல்லதில்லையா?”

“அப்போகூட நீங்கள் ஏன் சாகணும்? நான் போனாலும் போறேன். நீங்க ரெண்டாவது ஒண்ணு கட்டிண்டு சௌக்கியமா இருங்கோ. ஜாதகப்பிரகாரமே நான்தான் உங்களை முந்திப்பேனும். எனக்கே ஆயுசு கட்டைதானும்.”

“ஆயுசைப்பற்றி என்ன? அதுவா பெரிசு? இருக்கும்வரை அன்போடு இருக்கவேணும். அது தான் பெரிசு.”

“ஆமாம், எத்தனை பேர் கட்டிண்டதேமுதல் சண்டை போட்டுண்டு, ரெண்டுபேர்லே ஒத்தர் எப்போடா சாகப்போறான்னு காத்துண்டில்லை!”

அவன் புன்னகை புரிந்தான். “வாஸ்தவம். உனக்குத் தெரியாத விஷயமே இல்லை அல்லவா?”

அவளுக்குப் பெருமிதம் விம்மியது. இன்னும் சௌகரியமாய் அவன் மடியில் புரண்டு படுத்துக் கொண்டாள். “எனக்கு எல்லாம் தெரியும். பின்னே

என்ன, என்னை அசட்டுக் காமாக்ஷின்னு நெனச்சுண்டேளா?"

திடீரென்று:

"ஆனால் நாம்ப அப்படி இல்லையே!"

"எப்படி?"

"அறுபது நாழியும் சண்டைபோட்டுண்டு!"

"சரியாப் போச்சு. ஓம் என்று ஒரு மந்திரம் சொல்லியாகல்லே—"

"நாம் எல்லாம் அப்படி இருக்க மாட்டோம். நான் உங்களைப் பார்த்தப்புறம் உங்களையேதான் வரிப்பேன்னு அம்மாவோடு சண்டித்தனம் பண்ணிச் சாதிச்சுண்டிருக்கேனுக்கும்! உங்களுக்கும் என் மேல் அப்படித்தானே?"

"இப்போ என்ன அதைப்பத்தி?"

மடியில் படுத்துக்கொண்டே அவள் தலையைப் பலமாக ஆட்டினாள். அதுவும் ஒரு கவர்ச்சியாய்த்தான் இருந்தது. "ஒண்ணுமில்லே; நான் சொல்றேன். நான் செத்துப்போனால், நீங்க ரெண்டாந் தடவை கல்யாணம் பண்ணிக்க மாட்டேளே? நான் தெய்வமாயிருந்து பார்த்துண்டு இருப்பேன்."

"ஏன், பிசாசாக இருக்கக்கூடாதோ?"

அவன் கிண்டலைக் கவனியாமலே அவள் பேசிக்கொண்டே போனாள். "நான் செத்துப்போன இடத்திலே ஒரு கோரி கட்டுவேளா?"

"மும்தாஜ் மஹாலாக்கும்!"

அவள் குரலில் ஏமாற்றம் தொனித்தது. "ஆமாம், நம்ம ஜாதி பொசுக்கற ஜாதி; புதைக்கிற ஜாதியில்லே. போனால் போறது. நான் போனப்புறம் என்னிக்காவது நெனைச்சுக்கக்கூட மாட்டேளா?"

"சரி சரி, கொஞ்சம் சமத்தாயிரு."

"சொல்லுங்கோன்னா—!"

"நீ செத்துப்போன பிறகு நான் இரண்டாந் தாரம் கட்டிக்கொண்டு எப்படி நடப்பேன் என்பதைப்பற்றி இப்பொழுது தர்க்கம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டாம். நீ உயிரோடிருக்கையில் நாம் இருவரும் பிரியாமல் இருப்பதைப்பற்றி யோசனை பண்ணுவோம். இன்னும் ஒரு வாரத்தில் வந்து உன் அம்மா உன்னைக் கூட்டிக்கொண்டு போவதாய்ச் சொல்லி யிருக்காளே, அப்பொழுது போகாமல் இரேன்."

அவள் யோசனையாய் நகத்தைக் கடிக்க ஆரம்பித்தாள்.

"இப்பொழுதுதானே ஒரு மாதத்துக்கு முன்னால் போய்விட்டு வந்தாய்? அடிக்கடி இப்படிப் பிரிந்து கொண்டிருந்தால் நாம் எப்பொழுது ஓட்டுவது? உனக்கும் உன் தாய்மேல் ஆசை இருக்கும்; அவளுக்கும் பெண்மேல் இருக்கும்; இல்லையென்று சொல்லவில்லை. இருந்தும் உன் புது வாழ்வுக்கு நீ பழக வேண்டாமா? இன்னமும் இந்தப் பிறந்த வீட்டுச் சபலத்தை அடக்கிக் கொள்ளச் சக்தி யில்லாவிட்டால் கல்யாணம் பண்ணிக் கொள்ளுவானேன்?"

அவள் எழுந்து உட்கார்ந்துவிட்டாள். முகம் ஒரு தினுசான மருட்சியில் வெளுத்துவிட்டது. அவன் வார்த்தைகள் அவள் மூளையில் என்ன வேலை செய்தனவோ, தெரியவில்லை; அடிக்கடி கை நகத்தால் அழுந்த வாரியிருக்கும் மயிரைக் கீறிக்கொண்டாள். அவள் முகத்தில் புகுந்துவிட்ட ஒரு சிறு கபடு, அதற்கு ஒரு குறுகுறுப்பையும் தனியழகையும் கொடுத்தது.

அவள் அவன்மேல் வைத்திருந்ததைவிட, அவன் அவள்மேல் வைத்திருக்கும் ஆசையின் மிகுதி அவன் தன்னையும் மறந்து அவளைக் கெஞ்சும் குரலிலேயே வெளிப்பட்டது.

"அன்றொரு நாள் சொன்னையே, ஞாபகம் இருக்கிறதா?"

"என்ன?" என்னும் வினவில் அவள் புருவங்கள் — பென்ஸிலால் கீறியதுபோல், சுத்தமாய் வளைந்த புருவங்கள்—உயர்ந்தன.

"சீதைக்கு ராமர் இருக்கும் இடந்தான் அயோத்தி—"

அவள் முகத்தில் அசட்டுப் புன்னகை தோன்றிற்று.

"சொல்லுக்கு அலங்காரமாய்ச் சொல்லிவிட்டால் ஆகிவிட்டதா? கொஞ்சமாவது காரியத்தில் நடத்திக் காண்பிக்க வேண்டாமா? அதற்கு உனக்கு வயசாகவில்லையா? நாம் இருவரும் சந்தோஷமா யிருக்கிறதே இன்னமும் நாலைந்து வருஷங்கள். பிறகு எனக்கும் வயசாகிவிடும். உனக்கும் இரண்டு குழந்தைகள் பிறந்துவிடும். பிடுங்கல்களும் அதிகரித்துவிடும். பொறுக்காமல் நானே ஒருநாள், 'பிறந்த வீடு போய்த் தொலை' என்பேன்!"

அவனுடைய தமாஷ் அவளுக்கு ஏறவில்லை.

"என்ன சொல்லுகிறாய்?"

அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. பக்கத்துப் புதரில் ஆடிக்கொண்டிருந்த ஒரு பூவைப் பறித்து அதை இதழ் இதழாய்ப் பிய்க்க ஆரம்பித்தாள். அவளுடைய அழுத்தமான மௌனம் அவன் பொறுமையை வெகுவாய்ச் சோதித்தது. தவிர, அவள் பதில் சொல்லத் தேவையேயில்லை. அவன் ஆசையையே கசக்குவது போன்று அந்தப் பூவை இதழ் இதழாய்ப் பிய்த்துக் கொண்டிருக்கும் அந்த இரக்கமற்ற காரியமே போதுமான பதில். சகிக்க முடியாத வேதனையில் அவன், "நீ வேணுமானால் பிறந்தகம் போ; அந்தப் பூவை மாத்திரம் பிய்க்காதே" என்று கத்தினான்.

திடுக்கிட்டு அவள் நிமிர்ந்தாள். சரசரவென்று கண்கள் நீரால் நிறைந்தன.

"இல்லே, நான் போகல்லே—"

"இல்லே, போய்க்கொள்—"

இனி அவள் போனாலும் போகாவிட்டாலும், அவன் அவளைப் பிரியத்தால் கட்டி இணைக்க முயலும் முயற்சியில் தோல்விதான். தன் உரிமையைச் செலுத்தி அவள் கீழ்ப்படிதலை வற்புறுத்த அவன் விரும்பவில்லை. மனமார்ந்த சம்மதத்துடன் கூடிய ஒத்துழைப்பையே அவன் விரும்பினான். அந்த மட்டுக்கும் அவன் பிரியத்திற்குத் தோல்விதான்.

"நேரமாய் விட்டது; எழுந்திரு, போகலாம்" என்றான், சற்று நேரம் கழித்து.

"இதுவரையில் எவ்வளவு சந்தோஷமாயிருந்தோம்! அந்தச் சந்தோஷத்தை நீங்கதான் கெடுத்தேள்" என்றாள், சின்னக் குழந்தை மாதிரி உதட்டைப் பிதுக்கிக்கொண்டு.

"சரி வா, போகலாம்" என்றான். எதை வேணுமானாலும் அவன் ஒப்புக்கொள்ளத் தயாராயிருந்தான். இப்பொழுது அவன் மனத்தில் அவ்வளவு அசதி.

அவன் மார்பின்மேல் சாய்ந்துகொண்டு அவள் விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள். அவளைச் சமாதானப்படுத்தும் முறையில் அவள் முதுகை மெதுவாய்த் தட்டினான். லாயக்கற்ற பாத்திரத்தின் மேல் பாசம் வைத்துவிட்டால் தனக்கும் சுகமில்லை; அதற்கும் சுகமில்லை; சுற்றும் இருப்பவர்க்கும் சுகமில்லை. இப்படி ஒன்றுக்கொன்று ஒவ்வாத இரு சுபாவங்களுக்கு முடிச்சு ஏற்பட்டு விடுகிறதே, அது தான் கடவுள் சங்கற்பம்.

"வா வா, போகலாம். நம்மைத் தேடப் போறா!"

* * *

ஒரு நாள்: தாடியும் மீசையும், காகிதமும் பென்ஸிலுமாய் ஒருவன் அங்கே வந்தான். பென்

வலில் நுனியை அந்தச் சிவப்புக் கல்லில் தீட்டிவிட்டுக் கொஞ்சம் எட்டப்போய், சௌகரியமாய் உட்கார்ந்துகொண்டு எழுத ஆரம்பித்தான்.

"வாழ்க்கை ஓயாமல், தன்னைத்தானே திரும்பத் திரும்பத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. நடந்ததேதான் நடந்துகொண் டிருக்கிறது.

"இருந்தும் வாழ்க்கை இன்னதுதான் என்று ஒரு முடிவு கட்ட இயலவில்லை. ஒரு நிச்சயத்துக்கு வருவதற்குள் அதற்கு நேர் முரணாக இன்னமும் அதுவரையில் புலன்படாத பல அம்சங்கள் தலைகாட்டுகின்றன. வாழ்க்கை பிடிபட மறுக்கின்றது.'

"ஒவ்வொரு சமயம், வருஷங்கள் விரைவது தெரியவில்லை. இன்று தள்ளாமையா யிருந்தாலும் ரத்தத் திமிரில் துள்ளி விளையாடியதும் தூக்கியெறிந்து பேசியதும் நேற்று மாதிரி இருக்கின்றன.

"ஒவ்வொரு சமயம் ஒரு நாள் நகர்ந்து போவது நரக வேதனையாக இருக்கிறது.

"வாழ்க்கையின் பெரிய அதிசயம் யாதெனில், சகல ஜீவராசிகளும் அதன் அதன் பிறப்புக்கும் பிழைப்புக்கும் முடிவிற்கும் ஆதாரமாய் ஒன்றுடன் ஒன்று பிணைந்திருப்பதே. அதன் அதன் வாழ்க்கையையும் தனித் தனியாய்ச் சோதித்தால் தம்முள் தாமே நிறைந்திருப்பினும், எல்லாமே உலகத்தின் வாழ்க்கையின் ஒரே கோவையில் அடங்கியவைதாம். சம்பவங்கள் தனித்தனியாயும், ஒன்றுக்கொன்று சம்பந்தமற்றவையாயும் அறுந்து தொங்கினாலும் எல்லாவற்றிலும் ஒரு காவியத் தொடர்பு ஊடே மறைந்திருக்கிறது.

"ஆயினும் அவன் அவனுக்கு அவன் அவன் பெருமையும் துக்கமுந்தான் பெரியவை. 'எல்லாம் நான் போனாலன்றோ தெரியப்போகிறது!' — ஒவ்வொருவனுக்கும் இதே எண்ணந்தான். உலகம் தன் இஷ்டப்படியோ, அல்லது தான் எதிர்பார்த்த படியோ நடவாததால் அதை விட்டுப்போவதற்கும்

அதே சமயத்தில், தான் போன பிறகு உலகம் எப்படி இருக்கிறது என்பதைப் பார்ப்பதற்காக, அதில் இருப்பதற்கும் ஆசை.

"அவனவன் எதைக் கஷ்டமென்று பார்க்கிறானோ அதனின்று விடுதலை வேண்டாதவனே இல்லை. இந்தக் கடவுள் தன்மையை மனிதன் வேண்டுவது நியாயமே. ஆனாலும் அவனுக்குக் கடவுளுடன் கலக்க விருப்பமில்லை. போட்டிக் கடவுளாய் ஆகத் தான் விரும்புகிறான். வெறும் மாமிசபர்வதமாக வளர்ந்த ஒரு திமிரினாலேயே நல்லவர்களுக்கு நல்லவனாகவும் பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவனாகவும் தான் இருப்பதாகப் பாவித்துக்கொண்டே நல்லவர்களையும் பொல்லாதவர்களையும் கண்டுவிட்ட மேதாவியாய்த் தன்னைத்தானே நினைத்துக்கொண்டு, கடவுளே செய்யத் திணறும் காரியத்தைத் தான் செய்ய முன்வந்து, அவன் காரியமே அவன் கழுத்தை அறுப்பது அவனுக்குத் தெரிவதில்லை.

"உலகத்தில் காக்கப்படுவனவற்றைவிட, கடவுள்கள் அதிகமாகிவிட்டன. கூழாங்கற்கள் எல்லாம் தெய்வமாய்விட்டன; தெய்வம் கல்லாகி விட்டது.

"மனிதனுக்கு மனிதன் இப்படித் தான் முழுவதன் ஒரு பாகம் என்று தெரிந்தும், எல்லாமே தன்னால்தான், தானேதான் எல்லாம் என்று—"

இந்தச் சமயத்தில் ஒரு காற்று அடித்து அவன் கைக்காகிதத்தைப் பிடுங்கி அடித்துக்கொண்டு போயிற்று. அவன் எட்டிப் பிடிக்க முயன்றான்.

ஆயினும் அவன் கைக்குத் தப்பி அது சிவப்புக் கல்லின்மேல், ஆணியால் அறைந்தாற்போல் ஒட்டிக் கொண்டு படபடவென்று இறக்கை மாதிரி அடித்துக்கொண்டது.

அதற்குள் அவனுக்கும் சோம்பல் வந்துவிட்டது. "நானும் என்ன, சொன்னத்தையே தானே சொல்லிக்கொண் டிருக்கிறேன்!" என்று முணு

முணுத்துக்கொண்டு, அதிருப்தியுடன் அந்த இடத்தை விட்டு அகன்றான்.

இலைகள் பலபலவென உதிர்ந்தன. ஒன்றாயும், இரண்டாயும், கொத்துக் கொத்தாயும், திரையிட்டாற்போலேயும் உதிர்ந்தன. இலைகளும் சருகுகளும் நிலத்தையும் நிலத்தில் கிடந்தவற்றையும் ஜமக்காளம்போல் மூடின.

அந்தக் கிழவி அங்கு வந்து எவ்வளவு நேரமாய் உட்கார்ந்திருந்தாள் என்றே தெரியவில்லை. மூப்பேறிய உடலில் புடைவை உடுத்திய மாதிரியே இல்லை. உடலுக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லாமல் தொங்கின மாதிரியே இருந்தது. முழங்காலைக் கட்டிக்கொண்டு, குந்திட்டமாதிரி எங்கேயோ முறைத்துப் பார்த்தபடியே அசைவற்று உட்கார்ந்திருந்தாள். தள்ளாமையால் தலைமாத்திரம் கழுத்தின்மேல் நிலையற்று லொடலொடவென்று ஆடிற்று.

இரவு இறங்கும் வேளைக்குக் கவலை தேங்கிய முகத்துடன் சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு அங்கு ஒருவன் வந்தான். அவளைக் கண்டதும் காணாததைக் கண்டதுபோல் அவளிடம் ஓடினான்.

"எங்கெங்கெல்லாம் உன்னைத் தேடுவதம்மா? வா."

"நான் வரல்லை."

"என்னம்மா, நீ இப்படிப் பண்ணினால்?"

"எனக்கு இனிமேல் உன்கிட்டே ஜோலி இல்லை."

"அம்மா!"

"சீ! என்னை இனிமேல் அம்மா அம்மான்னு கூப்பிடாதே!"

"ஐயையோ!"

"இந்த வேஷம் எதுக்குடா? பெத்த வயிறு கொதிக்கப் பார்த்தவனெல்லாம் இதுவரை உருப் பட்டதில்லே. ஊருக்கெல்லாம் மேருவாயிருந் தாலும் எனக்கு நீ பிள்ளைதானேடா? நான் இல்லாட்டா நீ இல்லே. இந்தக் காலத்திலேயே எல்லாம் கைமேலே பலன், ஞாபகம் வெச்சுக்கோ! நீ எனக்குச் சரியா யிருந்தால்தான் உன் பிள்ளை உனக்குச் சரியா யிருப்பான். ஆனால் எனக்கு இந்தக் கதி வரவேண்டாம்!"

"அம்மா!"

"டேய், எல்லாரும் பிள்ளை பெத்தாலும் நான் உன்னைப் பெத்ததற்கு ஈடாகாது. எத்தனை தவங் கிடந்திருப்பேன்! எத்தனை அரசமரம், கோயில் குளம் சுத்தியிருப்பேன்! எத்தனை கோபுரவாசற் படியை நெய்யால் மெழுகி யிருப்பேன்! இடது கையால் சாப்பிட்டிருப்பேன்! உனக்காகப் பிள்ளைப் பூச்சிகூட முழுங்கி இருக்கேண்டா. என் ரத்தத் தின் ரத்தம் நீ, சதையின் சதை நீ. நீ எனக்கு ஒரே பிள்ளையாய் வாய்ச்சு, எனக்கு நீ துரோகம் பண்ண லாமா? அதுவும் இத்தனை நாள் நல்ல பிள்ளையாய் இருந்துட்டு இப்போ கல்லைத் தூக்கிப் போடலாமா? நல்ல பிள்ளைக்கு அடையாளம் கல்லைத் தூக்கிப் போடுவது, கல்லைத் தூக்கிப் போடுவது." வலிப்பு வந்தவள்போல் அவள் பாட ஆரம்பித்துவிட்டாள். ஆத்திரத்தின் வேகத்தில் இருந்த ஒன்றிரண்டு பற்களினின்று ரத்தம் கொட்டியது.

"ஆரம்பத்திலேயே நீ இப்ப இருக்கிறமாதிரி இருந்திருந்தேன்னு, சீ, தத்தாரி, நமக்குக்கொடுத்து வைச்சது இவ்வளவுதான், என்னு தப்பியெறிந் திருப்பேன். மற்றத் தாய்மார் போல் இல்லைநான்! 'உன் பிள்ளையா இப்படிப் பண்ணினான், உன் பிள்ளையா?' என்று என்னை எல்லாரும் துக்கம் விசாரிக்கறப்போ எனக்கு எப்படி இருக்கு, தெரியுமா?"

திடீரென்று கிழவி அழ ஆரம்பித்துவிட்டாள்.

"இத்தனை நாள் நான் என் புருஷனைப்பத்தி நினைக்கல்லே. உன்னைப் பார்த்து எல்லாத்தையும் மறந்திருந்தேன். ஆனால் இப்போ அவனை நினைக்கிறேன்; சபிக்கிறேன், இப்படி என்னை விட்டுட்டுப் போயிட்டானேன்னு; உழைக்கிறதெல்லாம் உழைச்சுப்பிட்டு, உன் சமாசாரத்தை எப்படியோ தெரிஞ்சுண்டு, உன் கையை எதிர்பாராமல், முன்னாலேயே செலவு பெத்துண்டுட்டாரே, உங்கப்பா கெட்டிக்காரரா, நான் கெட்டிக்காரியா? நீயே சொல்லு."

அவன் பிள்ளை கண்களில் கண்ணீர் தளும்புகிறது. சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் தவிக்கிறான்.

"அம்மா, இப்படி யெல்லாம் சொல்லாதேம்மா—" கிழவி கண்ணைத் துடைத்துக் கொள்கிறாள்.

"வாஸ்தவந்தாண்டாப்பா; நான் என் சொல்லணும்? இப்போ ஒரு காரணமும் இல்லாமலே நான் அநுபவிக்கறது போறுதுன்னு என் வாயால் உன்னை ஏன் சபிக்கணும்? கலி இப்பவே முத்திப் போச்சு. கலி முத்தித்துன்னா பகவான் அவதாரம் பண்ணுவார். அப்போ அவர் பார்த்துக்கறார். இப்பவே அவதாரம் பண்ணிண்டிருக்காரோ, என்னவோ! உன்னைப் பார்த்தாலும் என் வயிறு ஒட்டிக்கிறது, இப்படி என் வாயாலே நீ கேக்கணுமான்னு. எரிச்சல் தாங்காத சமயத்தில் கத்தறேன், ஓயறேன்; கத்தறேன், ஓயறேன். இப்படித்தான் நான் சாகற வரைக்கும் இருக்கப்போறதோ, என்னவோ— வா, வா உனக்காச்சு, எனக்காச்சு..."

* * *

திடீரென்று எப்படி முன் அறிகுறியில்லாமல் அந்த ஊற்றுக் கிளம்பியதோ அதே மாதிரி வறண்டு போயிற்று. மறுபடியும் கற்களிலும் மணலிலும்

கொதிப்பு ஏறத் தலைப்பட்டது. கானலில் மடு திரைப் படம்போல் நடுங்கிற்று.

ஒரு நாள் காலை, ஒரு பிணம் மேட்டில் ஒரு மரக்கிளையிலிருந்து தொங்கிற்று. அக்கிளையின் நிலையும், அதனின்று தொங்கிக் கழுத்தை முறித்த கயிற்றின் உரமும், காலடியில் உருண்டிருந்த சிறு முக்காலியும் இறந்தவனின் முன்னேற்பாட்டை விளக்கின.

இரவின் மிருகங்கள், வாய்க்கு எட்டியவரையில் கால்விரல்களைக் கடித்துப் பாதங்களைக் கூழையடித்திருந்தன. சுவரில் விளம்பரம் ஒட்டியது போன்று, பிரித்த கடிதம் ஒன்று அவன் மார்புப் புறத்தில், சட்டையோடு குண்டூசியால் குத்தி விட்டிருந்தது. அதில் அவன் தற்கொலைக்குக் காரணத்தை விளக்கியிருந்தான்:

> "என் பிணத்தைப் பார்ப்பவர் முக்கியமாய் இந்தக் கடிதத்தைப் பார்க்க வேண்டும்.
>
> "எனக்கு உலகத்தில் வேண்டாத பேர், வேண்டிய பேர் உண்டு. ஆனால் அவர்கள் மேல் சந்தேகம் வேண்டாம். இது என் காரியமே.
>
> "ஒன்பது வருஷங்களாக எனக்கு வயிற்று வலி. நான் பண்ணிக்கொள்ளாத வைத்தியம் இல்லை. ஆயினும் குணம் இல்லை. ஒவ்வொரு சமயமும் தொப்புளைச் சுற்றி வலி திருகுகையில் நான் ஒன்பது சாவுகள் சாகிறேன். அதுவும் ஒரு நாளா, இரண்டு நாளா? ஒன்பது வருஷங்கள்!
>
> "என்போன்ற 'கேஸ்'கள் சாவைத் தேடினால் அது விடுதலையை வேண்டியே ஒழிய, பயங்கொள்ளித்தனத்தால் அல்ல. ஆகையால் நான் இறந்த பிறகு என்

ஆவியைத் தேவதூதர்கள் கொண்டு போய் ரக்ஷகரின் சந்நிதானத்தில் நிறுத்தும் சமயத்தில் கன்னிமாதாவும், தேவ குமாரனும் எனக்காக லோகபிதாவிடம் மன்றாட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். ஆமேன்.''

அப்புறம் அதிக நாள் அந்தப் பக்கம் அண்டுவார்கூட இல்லை. எட்ட இருந்து பார்க்கையில் அந்த இடமே, அதன் புதுத் தனிமையாலோ, அல்லது பயங்கரத்தால் சிலிர்த்துக்கொண்டதாலோ, முன்னிலும் பெரியதாய்த் தோன்றிற்று. செவிநுட்பத்தில் கற்பனை படைத்த சிலர், உச்சி வேளையிலும் இரவிலும், 'அப்பா, அம்மா, வலி பொறுக்க முடியவில்லையே!' என்றெல்லாம் குரல்கள், அந்த மடுவிலிருந்து வெளிவருவதாகச் சத்தியம் செய்தனர்.

ஆயினும் காலம் மாற்றாத காரியம் எது? நாளடைவில் மடுவிலிருந்து வருவதாகக் கூறப்படும் ஓசைகள், தாமே கொஞ்சம் கொஞ்சமாய் அடங்கிக் கடைசியில் அற்றுப் போயின. மறுபடியும் ஆள் நடமாட்டம் அங்கே தொடங்கிய பொழுது அந்தப் பள்ளத்தில், முழங்கால் உயரத்துக்கு இலைகளும் சருகுகளும், காற்று அடித்துச் சேர்ந்திருந்த குப்பையும் நிறைந்திருந்தன. அந்தச் சிவப்புக் கல் கூடத் தலை தெரியாமல், அந்தக் குப்பையுள் முழுகிப் போயிற்று.

* * *

"ஏன்னடி இவ்வளவு அவசரமாய் என்னை இங்கே கூட்டிண்டு வந்தே? காரியமெல்லாம் அப்படி அப்படியே கிடக்கு. இன்னும் கொஞ்ச நேரமாச்சுன்னா, ஆபீசிலிருந்து அவர் வந்துடுவார். நீ கூப்பிட்ட அவசரத்தைப் பார்த்துட்டுக் கையை அப்படியே முன்றானையிலேயே துடைச்சுண்டு வந்துட்டேன். என்ன விசேஷம்? என்னடி, மூஞ்சி

யெல்லாம் வெளுத்திருக்கு? ஏண்டி அழறே? என்ன, என்ன?''

மற்றவள் விக்கினாள். "எப்படி ஆரம்பிக்கற துன்னு தெரியல்லே. நான் ரெண்டு மாசமா ஸ்நானம் பண்ணல்லே.''

"என்ன!''—நெருப்பைத் தொட்டுவிட்டவள் போல் இருந்தது அவள் குரல்.

"என்னைக் கோவிச்சுக்காதே. நான் சொல் றத்தை முழுக்க வாங்கிக்கோ. ஐயோ! நான் என் னடி பண்ணுவேன்! இந்தச் சமயத்தில் நீதான் என் அடைக்கலம். மாபாரதமாய் வந்திருக்கறதுக்கு நீதான் ஒரு வழி சொல்லணும். இன்னிக்கு நேத்திக்கு இல்லே நம்ம சிநேகிதம். ஐயோ! மூஞ்சியைத் திருப்பிக்காதேயேன்.''

"அட அசடே, நான் ஒண்ணும் மூஞ்சியைத் திருப்பிக்கல்லே. என்னதான் இருந்தாலும் எனக் குத் தூக்கிவாரிப் போடாதோ? எனக்குக் கைகால் பறக்கறது. மார் படபடக்கறது. சரி; சொல்லு. இது என்ன? எப்படி? யாரு? உன் குடும்பம் ரொம்ப ஒசத்தியாச்சே அம்மா? எப்படி இது நேர்ந்தது உனக்கு?''

"எங்கே ஆரம்பிக்கறதுன்னு தெரியல்லே. ரெண்டு மாசத்துக்கு முன்னாலே பள்ளிக்கூடத்திலே ருந்து திரும்பிவந்துண்டு இருந்தேன். கொஞ்சம் முன்னேரத்திலே பள்ளிக்கூடம் விட்டுட்டா. நான் இந்த வழியாகத்தான் போற வழக்கம். ரெயில்வே ஸ்டேஷனுக்கும் ஆத்துக்கும் இது கொஞ்சம் குறுக்கு வழி.

"அன்னிக்குக் கொஞ்சம் வெயில் ஜாஸ்தி. இங்கே வந்ததும் இதோ இதே மரத்தடியில்தான் நிழலுக்கு ஒதுங்கினேன். காற்று சுகமா அடிச்சுது.

"ஒவ்வொருத்தர் கிட்டேயும், வயசு எத்தனை யானாலும் ஒரு குழந்தைச் சேஷ்டை எப்பவுமே

ஒளிஞ்சுண்டிருக்கும்னு நினைக்கிறேன். இங்கே இத்தனை சருகுகள் உதிர்ந்திருக்கே, இதைப் பார்த்ததும் என்ன தோணித்தோ தெரியல்லே, அதிலே போய்ப் படுத்துப் புரண்டேன். அதுக்குத் தகுந்தாப்போல என் பளுவடியிலே, அதுவும் மெத்தை மாதிரிதான் மெதுவாய் அமுங்கிற்று.

"ஒரு காஞ்ச இலையைக் கையில் எடுத்துப் பார்த்தேன். நரம்புகள் கொடி கொடியாய் ஓடியிருந்தது, கைரேகை மாதிரி. உடனே என் கையைப் பார்த்துண்டேன். புருஷர்களுக்கு வலக்கை, பொம்மனாட்டிகளுக்கு இடக்கையைப் பார்த்துச் சொல்றதாமே?

"இந்தக் கைரேகையைப் பார்த்து, நடந்தது நடக்கப் போகிறது எல்லாம் சொல்லலாமாமே? உடனே என் வாழ்க்கையில் நடந்ததையெல்லாம் நெனைச்சுண்டேன். இந்த மனசு போறபோக்குத் தான் என்ன!

"நான் இதுவரை என் ஆம்படையானைப்பத்தி அதிகமா நெனச்சதில்லே. அவர் போறப்போ எனக்கென்ன பிரமாத வயசா? அக்ரமம்! அக்ரமம்! ஆனால் வயசாக ஆகத்தானே ஒவ்வொண்ணுத் தோணறது? போனதுதான் போனாரே, ஒரு குழந்தையையாவது அடையாளமா வெச்சிட்டுப் போனாரா? அதுக்குப் பாலூட்டுகையில், அதன் மூலம் அதன் பசியை ஆத்தி, அத்தோடு எனக்கு இருக்கும் எத்தனையோ பசிகளும் ஆறியிருக்கும்.

"இப்போகூடத்தான் கேக்கறேன்: என்னைப் போல இருக்கிறவா கதிதான் என்னிக்குமே விடியாக்கதி. இந்த லோகத்தில் இப்பவும் வாழாவெட்டிகள் எத்தனை பேர், உயிரோடிருக்கிற ஆம்படையானை விட்டுப் பிரிஞ்சிருக்கா? பிரிஞ்சிருக்க முடியறது, கலியாணத்துலே நாலு பேருக்கு நடுவிலே பண்ணிக் கொடுத்த சத்தியத்தை யெல்லாம் மறந்துட்டு? அத்தோடு கொண்டவனையும் தூத்திண்டு ஊரிலேயும் எப்படி வளைய வர முடியறது?

"என் மாதிரிப்பேர் மனசைத் திருப்ப, எவ்வளவுதான் படிச்சாலும் பாஸ் பண்ணினாலும், என்னதான் அறிவை வளர்த்தாலும், இந்த உடலும் கூட வளர்றதேடி! இந்த உடல் என்கிறது அவ்வளவு லேசாயிருக்கா? அதுவே நம் கட்டுப்பாட்டுக்கு வந்த பாடில்லே. அதுக்குள்ளே, எங்கேயிருக்குன்னு கூடத் தெரியாத இந்த மனசைப் பத்தி நாம் என்ன அறியப்போறோம்!

"திடீர்னு என்னென்னவோ தெரியல்லே; எனக்கு ஓரே அழுகையா வந்துடுத்து. அதுக்குக் காரணங்கூடத் தெரியல்லே. முகத்தைக் கையில் புதைச்சுண்டு விக்கி விக்கி அழுதேன். என்னைத் திடீர்னு ரெண்டு கை வாரி அணைச்சுது. யார் இன்னு கண்டதும் பஞ்சிலே நெருப்பு வெச்ச மாதிரிதான் ஆயிடுத்து.

" 'ஐயோ என்னைத் தொடாதேங்கோ' ன்னு ஒரு கத்தல்கூடத் தொண்டையிலேருந்து எழும்பல்லே. என் துக்கமும் ஓரே வெறியாயிடுத்து. அவ்வளவுதான், தப்பு யார்மேலேன்னு சொல்லுவேன்! யார்மேலேன்னு சொல்வேன்!"

"யார் அந்தப் பாவி, ஆள் ஏமாந்த சமயம் பார்த்துப் பயன் பண்ணிண்ட பாவி—என் பயப்படறே? அந்த ஆசாமி யார்? உனக்குத் தெரிஞ்சவனாய்த்தான் இருக்கணும். உன் மனசுக்கு ஒப்பியவனாயுந்தான் இருக்கணும். இல்லாட்டா, அவன் உன்னைத் தொட்டவுடனே அப்படி அறிவிழந்திருக்க மாட்டே. எனக்கு இதிலெல்லாம் கொஞ்சம் அநுபோகம் உண்டு. எனக்கு நாலு பெத்திருக்கு, செத்திருக்கு பார்; யாரு, சொல்!"

ஆனால் அவள் சிநேகிதி பதில் பேசவில்லை. திக்பிரமை பிடித்தவள்போல் இருந்தாள்.

"சொல்லேண்டி; இது விளையாடற சமயமில்லே. வெறுமனே என் தாலிச் சரட்டைத்தொட்டு நெருடிக்கிண்டிருந்தால் என்ன அர்த்தம்?"

ஆயினும் பதில் வரவேயில்லை. மீறிடும் அழு கையை அடக்கிக்கொண்டு அந்தப் பெண் மற்ற வளின் மாங்கல்யத்தைப் பிடித்து, அவள் கண் ணெதிரில் ஆட்டிவிட்டு அவள் மடியில் அப்படியே சாய்ந்தாள்.

"ஆ என்ன !"

அவள் செய்கையின் அர்த்தம், அவள் மனத்தில் விடியும் பயங்கரம், ஏதோ இது வரை கவனித்துக் கொண்டிருந்த புகைப்படலத்திலிருந்து திடீரென்று ஒரு பூதம் திரண்டு உருவாகித் தன்னை விழுங்க வருவது போன்றிருந்தது.

மேட்டுக்கு அந்தண்டை இருவர் பேசிக் கொண்டு போகின்றனர். அவர்கள் பேச்சுவாக்கில் சில வார்த்தைகள் காற்றில் மிதந்து வருகின்றன :

"நல்லது பொல்லாது ரெண்டுக்கும் சாக்ஷியாய், அந்தக் கடவுள் ஒருத்தன் இருந்துக்கிட்டுத் தானே வாரான் ?"

* * *

**வா**னத்தில் ஒவ்வொரு சமயம், நீலத்தில் பொன் விளைந்தது; ஒரு சமயம் கறுப்பில் வெள்ளி விளிம்பு கட்டியது. மாலைகளில் சிவப்பில் செம்பு அடித்திருந்தது.

ஒரு நாள் மாலை அங்கு ஓர் 'அப்பா', 'அம்மா', 'பாப்பா' மூவர் உலாவ வந்தனர். அப்பா ஒரு மரத் தடியில் உட்கார்ந்து, கையோடு கொண்டுவந்திருந்த ஒரு புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தார். அவ ருக்கு இந்த லோக சிந்தனையே இல்லை ; புத்தகத் தில் அவ்வளவு சுவாரஸ்யம்.

அத்தனைக்கு அத்தனை 'அம்மா'வுக்குக் குடும் பத்தைப் பற்றித்தான் சிந்தனை. கைக்கு எட்டிய வரைக்கும் அங்கு ஒரு மரத்தின் இலைகளைப் பறித்து மடியில் கட்டிக்கொண் டிருந்தாள். ஏதோ இரண்டு வேளை சாப்பாட்டுக்காவது தைத்துப் போடலாம் அல்லவா ?

பாப்பா கொஞ்சம் துடி. குடுகுடுவென்று பள்ளத்தில் ஓடி, அந்தச் சருகுமெத்தையில் தொப்புத் தொப்பென்று குதித்து விளையாடிக்கொண்டிருந்தது.

"அம்மா அம்மா! இதைப் பாரேன்; இங்கே ஒண்ணு!"

"சும்மா இருடா—"

"இங்கே வாயேன்; வான்னா வா—"

அம்மா சலித்துக்கொண்டே போனாள்.

"அட இதென்ன! இங்கே வந்து பாருங்கோன்னா!"

அவள் குரலின் ஆச்சரியம், அப்பாவைத் தட்டி எழுப்பியது. அப்பா சாவகாசமாய்ப் போனார். அந்தச் சருகுக் கூளங்களிலிருந்து ஒரு சிவப்புக் கல்லின் வழுக்கை மண்டை எட்டிப் பார்த்தது. அவருக்கும் விந்தையாய் இருந்தது. அதைச் சுற்றியிருந்த சருகுகளையும் குப்பையையும் கையால் பறித்துத் தள்ளினார். அப்பாவுக்கு ஒத்தாசையாய், குழந்தை காலால் முன்னும்பின்னுமாய்க் குப்பையை உதைத்துத் தள்ள ஆரம்பித்தான்.

"சும்மாயிருடா பயலே, விஷமம் பண்ணாமே!"

பையனா சும்மா இருப்பான்? திடீரென்று 'வீல்' என்று கத்திக்கொண்டு காலைக் கையால் பிடித்துக்கொண்டு துடித்துக் கீழே விழுந்தான். "ஐயோ ராஜா!" என்று அம்மா அலறிப் புடைத்துக்கொண்டு குழந்தையை அப்படியே இரு கைகளிலும் வாரினாள். ஆனால் அதற்குள் குழந்தைக்கு மயக்கம் போட்டு விட்டது.

இலைகளில் சலசலவென ஒரு சப்தம்.

அப்பா திக்பிரமை பிடித்து நின்றார். உதறும் கரங்கள் அவரையும் அறியாமல் கூப்பின.

அவர் குப்பையைப் பறித்து வழி பண்ணின இடத்தில் ஒரு முழ உயரத்திற்கு ஒரு சுயம்புலிங்கம் எழும்பியிருந்தது.

# புற்று

**கா**லை வைத்த பிறகுதான் அது வழுக்கிய தினுசிலிருந்து, வந்தது ஆபத்து என்று உணர்ந்தான். உடனே காலை எடுத்துவிட மூளையிலிருந்து காலுக்குத் தந்தி பறக்குமுன், புறங்காலில் அடி விழுந்துவிட்டது. ஒரு துள்ளுத் துள்ளிப் பத்தடி தூரம் அப்பால் போய் விழுந்தான். வயலில் அறுத்து விட்டிருந்த கதிரின் முளைகள் உடல் முழுவதும் முள்ளாய்க் குத்தின. அவன் மிதித்த இடத்திலிருந்து 'புஸ்' ஸென ஒரு சீறல்! அவ்வளவுதான். விஷயம் மிஞ்சிவிட்ட தென்று உணர்ந்தான்.

ஆனால் சமயபுத்தி ஓடிவிடவில்லை. அவசர அவசரமாய்ச் சட்டைப் பையில் தேடினான். விஷம் 'கிர்' ரென்று ஏறிக்கொண்டு வந்தது. எப்பொழுதும் கையுடன் இருக்கும் பேனாக்கத்தி இன்று ரயில்வே ஸ்டேஷனில் விட்டிருக்கும் கைப்பெட்டியில் மாட்டிக்கொண்டு விட்டது. உள்ளே நம்பிக்கைச் சுவரில் நாலு கற்கள் இடிந்தன. இருந்தும் கடுமையான சந்தர்ப்பங்களிலே உழன்று பழகியதால், அவ்வளவு சீக்கிரம் தன்னைத்தான் கைவிடத் தோன்றவில்லை. மறுபடியும் பைகளில் தீப்பெட்டியைத் தேடினான். கடித்த விடத்தைச் சுட்டு எரித்து விடலாம் என்று ஒரு எண்ணம். சிகரெட் பெட்டியிலிருந்து சிகரெட்டுகள் அந்தி யிருட்டில் வெண்மையாய்ச் சிதறின. தீப்பெட்டியில் ஒரே ஒரு குச்சி தான் இருந்தது. சபித்துக்கொண்டு இரு முறைகள் கிழித்தான்; இரண்டு பொறிகள் தாம் தெறித்தன. சுடர் உடனே குதிக்கவில்லை. மருந்து கிழிப்பதிலேயே உதிர்ந்துவிட்டது. உள் சுவர் தரை மட்டமாய் இடிந்தது. ஓடிப்போய் ஊரையும் பிடிக்க முடியாது; ரயிலடிக்கும் திரும்ப முடியாது. சம தூரத்தில், இரண்டுக்கும் வெகு தூரத்தில் மாட்டிக் கொண்டோம் எனக் கண்டுகொண்டான். விஷம் ஏறிக்கொண்டே வருகிறது.

"எங்கே யிருக்கிறோம்?"—சுற்றுமுற்றும் நோக்கினான்.

"எங்கே யிருக்கிறோம்?"

"எங்கிருந்து வந்தோம்?"

"எதற்காக வந்தோம்?"

"எங்கே போகிறோம்?"

"இனி வரப்போவது என்ன?"

சில சமயங்களில் மனத்தில் ஒரு எண்ணம் எழுந்ததும், சமயமும் சம்பந்தமுமற்று, அதை யொட்டி, அதே மனத்தில் வாக்குத் தொடர்கள்

எழுகின்றன. எழுந்ததும் அவைகளே எண்ணங்களாகவும் மாறி, தாமே தம்மைத் தனித்தனித் தொடர்புகளுடன் பெருக்கிக்கொண்டு விடுகின்றன.

"எங்கிருந்து வந்தாய்?"—திடீரென்று அவனுள்ளிருந்து ஏதோ பிரிந்து, எதிரில் நின்றுகொண்டு, அவன் கேள்வியை அவனையே திருப்பிக் கேட்பதை உணர்ந்தான். உடனே அவனுக்கிஷ்டத்துடனோ, இஷ்டமில்லாமலோ, அக் கேள்விக்குப் பதிலை அவனிடமிருந்து, அது பன்னிப் பன்னிக் கேட்கும் முறையிலேயே கட்டாயப் படுத்திற்று.

"எங்கிருந்து வந்தாய்?"

"புற்று! புற்று! புற்று!"—ஒரே வார்த்தை அவன் கண்ணெதிரில் மாறி மாறிச் சுற்றி வந்தது. அதன் சப்தம் எதிரொலித்துக்கொண்டேயிருந்தது.

"புற்று! புற்று! புற்று! நீ புற்று! நான் புற்று! எல்லாம் புற்று! உலகமே புற்று! புற்று, புற்று!"

"அடே உன்னைப் புத்துக்குப் பால் வாத்துப் பெத்தேண்டா!"—இங்கு அவன் தாயின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான்.

"அடே, என் வயிறு திறந்த வேளை என்ன வேளையடா?"

சின்னப் பையனாயிருக்கையில், துஷ்டப் பையனாயிருக்கையில், கெட்ட சகவாசம் பண்ணிப்பண்ணி ஊர்ச் சண்டையை எல்லாம் இழுத்துக்கொண்டு வீட்டுக்கு வருகையில், அவன் தாய் கஷ்டம் தாங்காமல் இப்படிச் சலித்துக் கொள்வாள். இதைக் கேட்டுக்கேட்டு அலுத்து ஒரு நாள், "எந்தப் புத்துக்குப் பால் வார்த்தாய், அம்மா?" என்று இடம் கேட்டுத் தெரிந்துகொண்டு — என்ன ஆச்சரியம்— தன்னையே சின்னப் பையனாய், இதே இடத்தில், அதோ மரத்தடியில் ஓங்கி வளர்ந்திருக்கும் புற்றை, அதற்குச் சற்றுத் தொலைவில் மேட்டு நிலத்தில்

கவிழ்ந்து படுத்துக்கொண்டு சுவாரஸ்யமாய்க் கவனிப்பதைக் கண்ணெதிரில் கண்டான்! கிழிந்த அழுக்குச் சட்டையுடனும், அரை நிஜாருடனும், இடுப்பில் செருகிய கவணுடனும், முழங்கையை நிலத்தில் ஊன்றி, மோவாயைக் கையில் ஊன்றி, புற்றில் என்ன நேரப் போகிறதெனச் சுவாரஸ்யமாய்ப் பார்த்துக்கொண் டிருந்தான்.

ஆனால் அவன் என்ன நினைத்தானோ, எதுவும் நேரவில்லை! ஒரே நிசப்தம்தான் நிலவியது. சுற்றுமுற்றும் வயல்களும், ஏரிக்கரை மேட்டில் இருபுறமும் பனை வரிசைகளுக்கிடையில் ஒற்றையடிப் பாதையும், களத்து மேட்டில் வைக்கோற் போரும்............

கொஞ்ச நாழிகை காத்திருந்தான்; பிறகு கையும் காலும் சும்மாயிருக்கவில்லை. அதுவும் கையில் கவண் இருக்கையில்! உருண்டைக் கல்லாய் ஒன்று பார்த்துப் பொறுக்கி, குறி பார்த்து லேசாய் அடித்தான். மண் கொஞ்சம் உதிர்ந்தது. உள்ளிருந்து படத்தை விரித்துக்கொண்டு ஒரு தலை எட்டிப் பார்த்தது. கண்களில் சிந்தும் பச்சைக் குரூரத்தையும், அதன் பட்டை நீட்டிய அழகையும், பிளந்த நாக்கையும் கண்டு அதிசயித்து நின்றான். கொஞ்சநேரம் அவனைச் சிந்தித்துவிட்டுத் தலையை உள்ளுக்கிழுத்துக் கொண்டது. ஆனால் அவன் இயற்கைச் சேஷ்டை போகவில்லை. இன்னொரு கல்லை விட்டெறிந்தான். சீறிக்கொண்டு அது எழுந்ததுதான் அவனுக்குத் தெரியும்; அங்குப் பிடித்த ஓட்டம், வீட்டுக்கு வந்து, கதவைத் 'தடா' லென்று சாத்தித் தாளிட்ட பிறகுதான் நின்றது. உடல் நாய் போல் இரைத்தது. அன்றைக்கு அவனுக்குச் சாதம்கூட வேண்டியில்லை. தூக்கத்தில் கூட உளறினான்.

பிறகு அடிக்கடி, அல்லது அப்போதைக்கப் போது, அது அவன் கனவில் வந்துகொண்டிருந்தது.

ஒரு சமயம் தலையைப் பிடித்துக்கொண்டிருக்கும்; அல்லது ஆடிக் கொண்டிருக்கும்; அல்லது உடம்பை முறுக்குப் போல் சுற்றிக்கொண்டு, ஒரு முழ உயரத்திற்குத் தலையை மாத்திரம் தூக்கி அவனையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருக்கும். ஒவ்வொரு சமயம் அவனுடனேயே படுக்கையில் குளிருக் கடக்கமாய், ஒட்டிக்கொண்டு படுத்திருக்கும். அவன் கண்களிலோ, வாயிலோ முத்தமிட்டு, முகத்தை நக்குவது போலுமிருக்கும். திணறித் திணறி அதனின்று விடுபட முயன்று விழிக்கையில், உடல் முழுவதும் வேர்வையில் குளித்திருக்கும்.

ஆனால் காலை வெயில் உடலில் படவேண்டியதுதான்; மறுபடியும் மனத்தில் தைரியம் பிறந்து, பல்லைக்கூட விளக்காமல் விளையாட ஓடிப்போய் விடுவான். அவனுக்கு வீடு பிடிக்கவில்லை. சுற்று முற்றும் இருப்பவரையும் பிடிக்கவில்லை. முக்கியமாய் ஸ்திரீகளைக் கண்டாலே பிடிக்கவில்லை. ஒன்று அவனை ஒரே குழந்தையாகவே நடத்தினார்கள்; அல்லது எதற்குமே மதிக்கவில்லை. இப்பொழுது திடீரென ஒரு பழைய சம்பவம் அவன் கண்முன் நின்றது. செத்துக்கொண்டிருக்கையில்கூட, அதை மறுபடியும் மனத்திரையில் பார்க்கையில் சிரிப்பு வந்தது.

தன் வீட்டுக்கு நாலு வீடு தாண்டி ஒரு வீட்டில், அந்த வீட்டுப் பையனுடன் அவன் விளையாடிக் கொண்டிருந்தான். சவுக்காரக் கட்டியைத் தண்ணீரில் கரைத்து, துடைப்பக் குச்சியை அதில் தோய்த்து, மறு நுனியில் ஊதி, கொப்புளங்கள் உண்டாக்கிக் களித்துக் கொண்டிருந்தான். அடிக்கடி கிணற்றுக்குப் போய், இன்னும் கொஞ்சம் சோப்பைக் கரைத்துக் கொண்டு திண்ணைக்கு வருவான். அந்தாத்து மாமா திண்ணையில் இன்னும் நான்கு நண்பர்களுடன் சீட்டாடிக் கொண்டிருந்தார்.

திடீரென்று அந்தாத்து மாமி, வாயிலும் கன்னத்திலும் அடித்துக்கொண்டு உள்ளிருந்து ஓடி வந்தாள். "ஐயோ என் வைரத் தோட்டைக் காணுமே!"— மாமி உளறியடித்தாள். "ஐயோ பாவி என்ன பண்ணேன்?" உடனே கூட்டம் கூடிவிட்டது.

"ஸ்னானம் பண்ணறத்துக்காகக் கழட்டிக் கிணத்தடியிலே வச்சேன். தலையைத் துவட்டிண்டதும் மாட்டிக்கலாம்னு சமயலறைக்குப் போய்ப் புடவையை மாத்திண்டு வாரத்துக்குள்ளேயே மாயமாய்ப் போயிடுத்தே, இதென்னடியம்மா அக்கிரமம்!"

"வாசக்கூட்டி. எங்கே?"

"அவ அப்பவே போயிட்டாளே!"—திடீரென்று அவள் பார்வை அவன்மேல் விழுந்தது. ஒரே பாய்ச்சலாய் அவன்மேல் பாய்ந்தாள். "இந்தக் குருக்களாத்துப் பையன்தான் கிணத்தடிக்குச் சும்மா வந்திண்டிருந்தான்—"

மாமா கண்களில் பொறி பறக்க அவன் பக்கம் திரும்பினார். "அட பயலே! நிஜத்தைச் சொல்லு!"

பையன் திகைத்தே போனான். "எனக்கொண்ணும் தெரியாதே—"

"அவன் இடுப்பு முண்டை அவிழுங்கள்—எங்கேயாவது மறைச்சு வச்சிருப்பான்—"

"பேசாமெ ரெண்டு புளியமலாறு கொண்டு வாருங்கள் — முற்றத்தில் உலத்தியிருக்கே— வீறு வீறுன்னு வீறினா, பையன் பேசாமெ தோட்டைக் கக்கறான்—பாம்பு மாணிக்கத்தைக் கக்கற மாதிரி—"

இதற்குள் ஒருவர் பிரியமாய், அவனை மடியில் வைத்துக்கொண்டு மிகவும் சாமர்த்தியமாய், "சொல்லுடா கண்ணா, எங்கிட்ட மாத்திரம் சொல்— பெப்பர்மிண்டு வாங்கித் தரேன். எங்கே ஒளிச்சு வச்சிருக்கே? உனக்கு என்னத்துக்கு அது—?

உனக்கு வேறே சாமான் எல்லாம் வாங்கித் தரேன்—''

"எனக்கு ஒண்ணும் தெரியாது—எனக்கு ஒண்ணுந் தெரியாதே—!" முள்ளிலே மாட்டிக்கொண்ட ஆட்டுக்குட்டியின் அபலைக் குரல் மாதிரி யிருந்தது அவன் கத்தல். கண்கள் பயத்தால் சுழன்றன.

நகையைக் கெட்டுப் போக்கின மாமி, உடம் பெல்லாம் ஆட்டிக்கொண்டு ஆத்திரத்துடன் அவனிடம் வந்தாள். "ஒண்ணுமே தெரியாதாடா உனக்கு—குழந்தைக்கு ஒண்ணு தெரியுமோ! வாயில் விரலை வச்சால் கடிக்கத் தெரியுமோ?" என்று சொல்லிக்கொண்டே, அவன் வாயில் விரலை வைத்தாள். அவ்வளவுதான்; பையன் ஆத்திரத்துடன் விரலைக் கடித்துவிட்டான். அவனுள் உறங்கியிருந்த ஏதோ ஒரு உணர்ச்சியை அவள் அனுவசியமாய்த் தட்டி யெழுப்பிவிடவே, அது உடனே அவனையும் மீறித் தன்னைத் திருப்தி செய்துகொள்ள ஆரம்பித்து விட்டது.

அவன் முதுகில் அறைமேல் அறை விழுகிறது. முகத்தைக் கைகள் பிராண்டுகின்றன. கண் இமைகளில்கூட ஒரு நகம் பதிந்து எரிகின்றது. தலைமயிரை யாரோ பிடித்து உலுக்குகின்றார்கள். இருந்தும் கடியை விடமாட்டேன் என்றான். 'வீல் வீல்' என்று கத்திக் கொண்டு, அவன் வாயில் கொடுத்த விரல் மேல் அவள் அங்கங்கள் முழுவதும் நெளிவதைக் காணக் காண, அவன் உடலில் ஒரு பயங்கர இன்பம் பரவியது.

கடைசியில் மிருக பலத்தில் அவனை அவளிடமிருந்து பிய்த்தெறிந்தார்கள்.

இந்தச் சமயத்தில் அந்த வீட்டு மாமா, தொப்பை குலுங்க, கையில் ஒரு கிண்ணத்துடன் உள்ளிருந்து ஓடிவந்தார். "ஏண்டி, சமையலறையில் நெய்க் கிண்ணத்திலே போட்டுட்டு, கிணத்தடியிலே தேடினா அகப்படுமா? உன் சந்தம்

தெரிஞ்சு ஒரு தடவை நான் போய்த் தேடினேன். தோட்டை வாங்கினவனுக்குன்னு அதன் கவலை! போட்டுக்கிறவளுக்கு என்ன?''

எல்லோரும் 'திருதிரு'வெனத் திருட்டுக்களை சொட்ட ஒருவரை யொருவரும், அவனையும் பார்த்து விழித்தனர். குருக்கள் வீட்டுப் பைய னுகையால், ஏழைப் பையனுகையால், அவனை இத்தனை அடி அடித்துவிட்டு, இத்தனை சொல் சொல்லிவிட்டு, இப்பொழுது என்ன செய்வதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. ஆனால் அவனுக்குத் தாங்க முடியவில்லை. திடீரென்று மாமா முகத்தில் கொத்து எச்சிலைக் காறி உமிழ்ந்துவிட்டு, பீறிட்டு வரும் அழுகையுடன் வீட்டுக்கு ஓடியே வந்து விட்டான். ஆனால் அங்கு மாத்திரம் எந்தக் கை அணைக்கிறது? மானம் போன ஆத்திரத்தில் அம்மா அவனை முதுகில் இரண்டு அறை வைத்து, அறையுள் தள்ளிக் கதவைச் சாத்தினாள்.

சாப்பாடுமில்லாமல், தூக்கமுமில்லாது, செய் யாத குற்றத்திற்குப் பட்ட அவமானத்தில் இரவு முழுவதும் பொருமிப் பொருமி, அவனுள் என்ன நேர்ந்ததோ, அன்று மறுநாள் முதல் மெய்யாகவே திருடத் தலைப்பட்டான்.

ஆத்திரத்துக்காகத் திருட்டு; முதலில் சின்னச் சின்னத் திருட்டு; சிங்காரத் திருட்டு; சாமான் களுக்காகத் திருட்டு; பிறகு திருட்டுக்காகத் திருட்டு; அந்தச் சமயத்து நெஞ்சுப் படபடப் பும், இரத்தம் உடலில் குதித்துப் பாயும் ஆனந்தத் திற்காகவும் திருட்டு!

போகப்போக வெறும் திருட்டுடன் அவன் பழக்கங்கள் நிற்கவில்லை. புதுப்புதுப் பழக்கங்கள்; புதுப்புது இன்பங்கள். இன்பத்தின் புதுமை; புது மையின் இன்பம். அதுவும் பிறருக்கு இழைக்கும் துன்பத்தின் இன்பம். அவன் செய்கைகளால் பிறர் படும் சங்கடத்தைப் பார்க்கப் பார்க்க, அவனுக்கு

அவர்கள் மேல் இருந்த கரிப்பு அதிகரித்துக் கொண்டுதான் போயிற்று. நாளடைவில் அவன் மார்புள் ஏதோ கனமாய் இறங்கி, பிறகு அங்கே கெட்டிப்படுவது போல்கூட அவனுக்குத் தோன்றியது. துளித் துளியாய், படிப்படியாகத்தான்—ஆனால் நிச்சயமாய்.

அவனை ஒருவராலும் அடக்க முடியவில்லை.

"ஐயோ, நீ எனக்கு ஒரே பிள்ளைடா! உங்கப்பா கூட இப்போ இல்லேடா. என் பேரைக் கெடுக்காதேடா. நான் கண் மூடுகிறவரையிலுமாவது சரியாய் இரேண்டா—" என்று கண்ணீர் வழிந்தோட, அம்மா மன்றுடுவாள். இருந்து இருந்து, தவங்கிடந்து ஒரு பிள்ளையைப் பெற்றாள் என்றாலும், பையன் பிறந்த ராசி, குடும்பம் திடீரென க்ஷீண தசையடைந்துவிட்டது. கணவன், திடீரென ஜுரம் அடித்து, நடுத்தர வயதிலேயே காலமானார். இருக்கும்போதே வருவாய் வெகு சொற்பம். இருந்தும், பையனுக்கு வயது வந்ததும் மலையைப் பெயர்த்துவிடப் போகிறான் எனும் அபார நம்பிக்கை. அதன் ஒரே தூண்டுதலில், படாத கஷ்டங்கள் எல்லாம் பட்டு, மானத்தையும் அவனையும் காப்பாற்றி வந்தாள். ஆனால் பையன் வழியே தனி வழியாய்ப் போய்விட்டது. சுவாமி பாடே வேளா வேளைக்கு நைவேத்தியமில்லாமல், தகராறாய்ப் போய் விட்டது. பையன் சோற்று மூட்டையை மரக்கிளையில் எங்கேயாவது தொங்க விட்டு விட்டு, சகாக்களுடன் கூத்தடிக்கப் போய்விடுவான். வீட்டில் சாப்பாட்டுக்கு அந்த மூட்டை வந்தாக வேண்டும். தெய்வம் எப்பொழுது கண் திறக்குமோ என்றுகூட இல்லை—பையனுக்கு வீட்டுப் பக்கம் எப்பொழுது மனந்திரும்புமோ என்று அம்மா, கண்ணில் உயிரை வைத்துக்கொண்டு, காத்துக் கிடப்பாள்.

அப்படியே அவன் இஷ்டப்பட்ட சமயத்தில் வீட்டுக்கு வந்தவனையும், கனிவாகவோ கண்டன

மாகவோ ஒரு வார்த்தை கேட்டுவிட முடியுமா? அவன் சீறி விழுகையிலேயே நாடி ஒடுங்கிவிடும். "சுவாமி, நீதான் கண்ணைத் திறக்க வேண்டும் — குழந்தையைக் கொடுத்தே—கூட அவனுக்குக் குணத்தைக் கொடு—"

மிடிவாயும், பிள்ளைக் கவலையும் பட்டுப் பட்டு, அவளுக்கு வயதுக்கு மீறிய கிழம் விழுந்து விட்டது. இதைத் தவிர ஆசாரம், சீலம் எல்லாம் அதிகம். தானாய் நேரும் பட்டினிகள் தவிர, நாள் கிழமை யென்று உபவாசம் இருப்பாள்—எல்லாம் பிள்ளைக் காக. 'பிள்ளைக்கு நல்ல புத்தி வரணும். பிள்ளைக் குக் கல்யாணம் ஆகணும். பிள்ளை குலம் வளர ணும்.' — ஆனால் அவள் சாமியை வேரோடு பிடுங்கப் பிடுங்க, அது அவள் விஷயத்தில் கடுமையாய்த்தா னிருந்தது. தரித்திரம்தான் பிடுங்கி யெடுத்தது. அப்பளமிட்டு, இலை தைத்து விற்கும் நிலையிலிருந்து மாறவே முடியவில்லை.

ஆனால் அவள் பையனுக்கு யார் பெண் கொடுப் பார்கள்? எதை நம்பிக் கொடுப்பது? குணத் தையா, குடும்ப சம்ரக்ஷணையிலும் கௌரவத்திலும் இருக்கும் பொறுப்பிற்கா, படிப்புக்கா?

பையன் என்னவோ ராஜா மாதிரிதான் இருந் தான். ஒற்றை நாடித் தேகம். நெருப்புச் சிவப்பு. நடை, நடையா யிருக்காது; ஏதோ காற்றில் மிதப்பது போலத்தான் இருக்கும். அதன் அழகு அவ்வளவு லாகவம். உடை பாவனைகள் எல்லாம் அப்படித்தான். கோவில் குருக்களாய் இருப்பதால், 'கிராப்பு' வைத்துக்கொள்ள முடியவில்லை. மயிரை நீளமாய் வளர்த்து மேல் நோக்கி வாரிவிட்டிருந் தான். கஞ்சிக்கு 'லாட்டரி'யா யிருந்தாலும் நல்ல உடைதான் உடுத்துவான். கண்களின் ஒளி ஊடு ருவும். அவனுடைய கத்திப் பார்வைக்குப் பயந்தே அண்டை வீட்டார் எல்லோரும் தங்கள் பெண்டிரை அடைகாத்து வந்தனர்.

அவன் தெருவழியே போகையில், பெண்கள், வீட்டு ஜன்னல் வழியே ஆசையுடன் திருட்டுப் பார்வை பார்ப்பார்கள். அதுவும் அவனுக்குத் தெரியும்; தெரியாததுபோல், ஒரு அலட்சியப் புன்முறுவலுடன், மிதந்துகொண்டே போவான். இத்தனைக்கும் அவன் அவர்களை நாடிச் சுற்றியதில்லை. ஆனால் ஊரில் மற்றக் காலிகளைவிட அவனிடம் தான் பயந்தார்கள். அவனுக்கும் அவன் சஹாக்களுக்குமே வித்தியாசமிருந்தது. அவர்களுக்கே அவனிடம் ஒரு எல்லைக்கு மேல் நடுக்கந்தான். அவனிடம் ஒரு நெருங்க முடியாத தன்மையும், அடிப்படையான குரூரமும் இருந்தன. ஏதோ கத்தியோடு பழகுவது போல்தான்! அதை எவ்வளவு அன்போடு அணைத்தாலும் அதற்கு வெட்டத்தான் முடியும்; அதன் இயல்பே அதுதான். அவனுக்கு அவனைப்பற்றியே அநாவசியமாய் இருந்தது. அவன் எதற்கும் தயாராய் இருந்தான். அதனால் அவன் மற்றக்காலிகளை விட அபாயகரமானவனாய் இருந்தான். கருணை என்பதே அவனிடமில்லை.

அவன் தாயின் வேதனையோ, மற்றவர்கள் வேதனையோ, அவனைப் பாதித்த மாதிரி தெரியவில்லை. அவனுடைய முறையீடும், மற்றவரின் முறையீடும், ஏதோ பாறையின் மீது மோதும் அலைகளின் வியர்த்தமாய் இருக்கும். அசைந்துகூடக் கொடுக்காத அப்பாறையே போல, அவனுடைய மௌனமும் அச்சத்தை விளைவித்தது. தவறிழைத்தவனின் மௌனமாயிலாது, அது அலட்சியத்தின் மௌனமாயிருந்தது. மார்மேல் கையைக் கட்டிக்கொண்டு எங்கேயோ பார்த்துக் கொண்டிருப்பான். ஜலத்துள் அமுங்கிய குடம்போல், அவன் தன்னுள் மூழ்கிக் கிடப்பான்.

"என்னடா உன்கிட்டத்தானே சொல்றேன், இப்படிப் பண்ணலாமாடா?" என்று அவன் தாய் எரிந்து விழுந்தால், "ஊம் ?— என்னம்மா சொல்றே ?" என்று விழித்தெழுவான். அதுவரை

என்ன யோசனை பண்ணிக் கொண்டிருந்தான் என்று கேட்டால், அவனுக்கே தெரியாது. முகத்தில் சுளிப்பு என்று இல்லாவிட்டாலும், அதில் சிரிப்பு என்றும் இல்லை.

ஆனால் எந்தப் புற்றுக்குப் பால் வார்த்து அவனைப் பெற்றெடுத்தாளோ, அப்புற்றின் வழி அவன் போகையில், அதைப் பார்க்கையில், எரிமலையின் சுண்டிய கற்குழம்பு தனக்குள் தளைப்பதுபோல் அவனுள் ஏதோ அசைந்து கொடுக்கும். கொஞ்ச நாழியாவது அங்கு நின்று அதைச் சிந்தியாமல் போகமுடியவில்லை.

அப் புற்று முன்பைவிட இப்பொழுது மிகவும் வளர்ந்து விட்டது. உயரமும் அதிகம். சிறுசிறு மண் குன்றுத் தொடர்கள் ஓங்கி நின்றன. அவைகள் தாமே வளருந் தன்மைதான் என்ன? அவைகளின் உள் பக்கம் எப்படி யிருக்கும்? எதுவரை தான் போகும்? அதன் உள் இருள் எவ்வளவு ஆச்சரியமானதாய் இருக்கும்? அந்த உள் இருளுடன் ஐக்கியமாய்விடின்— !

மண்டையை வெடித்துக்கொண்டு கிளம்ப முயன்றாலும், அதற்கு மேல் இடமில்லாததால் யோசனை எட்ட மறுத்துவிடும். பெருமூச்செறிந்து திரும்புவான்.

போகப் போகக் குருக்கள் பையன் சமாசாரம் தாங்கக் கூடியதாயில்லை. திடீரென்று ஒரு நாள் ஒரு கூட்டம் திரண்டு அவன் வீட்டு வாயிலையடைந்தது, ஏக இரைச்சலுடன். அப்பொழுது அவன் வீட்டில் இல்லை. தாய்தான் இருந்தாள். அரவங் கேட்டு, அடுப்பங்கரையிலிருந்து கைச் சாமானோடு ஓடிவந்தாள். குழம்புக்குப் புளியைக் கரைத்துக்கொண் டிருந்தாள். கும்பலைப் பார்த்ததும் வயிற்றில் புளியைக் கரைத்தது. கூட்டத்தின் திரண்ட கோபாவேசத்தில், அவ்விடத்தில் ஆடிய காற்றே விறுவிறுத்தது.

ஆரவாரத்திலிருந்து ஒரு குரல் பிரிந்து வந்தது. அதன் சப்தம் அவள் மேல் மோதியது.

"பெரியம்மா—இனிமேல் உங்கள் பையன் கோவில்படி தாண்டினால், நாங்கள் காலை ஒடித்துப் போட்டு விடுவோம்—உங்கள் பையனை நீங்கள் இனி பார்த்துக் கொள்ளுங்கள். பிறகு எங்களைக் குறை சொல்ல வேண்டாம்—"

"ஐயோ இப்போ என்ன நடந்துடுத்து?"

கையில் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு வாசற் குறட்டில், ஒண்டியாய் அவர்கள் எதிரில் நிற்கையில், அவளைப் பார்க்கப் பரிதாபமா யிருந்தது.

"உங்கள் பையனும் இன்னும் நாலு சோம்பேறி களுமாய்ச் சேர்ந்து, நேற்று ராத்திரி, எருவுக்காகக் கழனியில் மடக்கிவிட்டிருந்த ஆட்டு மந்தை யிலிருந்து ஒரு ஆட்டுக்குட்டியைப் பிடித்து, ஏதோ வெங்காயம், வேர்க்கடலை, பலாக்கொட்டை சுடுவது போல், நடுவயலில் குழியை வெட்டி நெருப்பை மூட்டிச் சமைத்துச் சாப்பிட்டுவிட்டார்களாம். இந்த அக்கிரமம் எங்கே அடுக்கும்? பிராமணப் பிள்ளையாய்ப் பிறந்துவிட்டு இந்த மாதிரி பண்ணிப் பிட்டு, கோவிலில் மணியாட்ட வந்துவிட்டால், ஊர் உருப்பட்டுவிடுமா?"

அவளுக்கு உடல் பரபரத்தது. "இன்னிக்கு எனக்காச்சு, அவனுக்காச்சு. நான் கவனிச்சுக் கறேன். நானே உங்களுக்குச் சொல்கிறேன். அவனைக் கோவிலில் சேர்க்காதீர்கள். இன்றையி லிருந்து பூஜைக்கு வேறு ஏற்பாடு பண்ணிக் கொள் ளுங்கள்."

அவன் வீட்டுக்கு வருகையில் அவள் பூஜையில் உட்கார்ந்திருந்தாள். கட்டுக் கட்டாய் விபூதி யணிந்து, துல்லியமான வெண்மை யுடுத்தி, சிவப் பழமாய் மணையில் உட்கார்ந்திருந்தாள். எதிரே, கோலத்தின்மேல் பூஜை சம்புடம் இருந்தது.

"அடே! இங்கே வா—"

யாசம் வெச்சாங்களே—எல்லாரும் தோத்தாங்க. எல்லாரும் ஜெயிச்சாங்க. தோத்தவனும் கஷ்டப் பட்டான்; ஜெயிச்சவனும் சொகப்படல்லே. என்னவோ காரியம் சாதிக்கிறப்போல, சண்டை போட்டதிலே கொறைச்சலில்லே, நாள் பாத்த திலே கொறைச்சலில்லே — பலி போட்டதிலே கொறைச்சலில்லே—அரவான் பலி !'

"—கொர்—கொர்—ர்—"

'மொதல்லே புளைக்கிற வளியைக் கண்டுட்ட மாதிரி குளந்தையைப் பலி வெச்சோம். அப்புறம் அதுக்குமேலே ஓசத்திக் காரியம் பண்றப்போல சண்டையிலே போய் சேர்ந்தாச்சு. இனிமேல் தப்ப முடியாது. கைநாட்டுக் கொடுத்தாச்சு. நாளை மத் தியான வண்டிக்குப் புறப்படணும். அப்புறம் அந்த வண்டியிலே எங்கேபோய் தள்ளுறுனோ. போவாமே இருந்தோம்னு நாளைக்கு கைக்கு விலங்கோடே வந்துடுவான். பூட்டுமேல் பூட்டு. புளைக்கற வழி என்ன? சாவுற வழிதான்.

'சண்டைக்குப் போய் சேந்த சமாசாரத்தை இவகிட்டெ சொல்லலே. அது வேறே பாக்கி யிருக்குது. குளந்தையைப் புதைச்சுட்டு வந்தப்புறம் இருக்குது அந்த ரகளை.

'ஆனல் சண்டையிலே போய்ச் சாவறதுக் குன்னு ஒரு சாவு பாக்கியில்லே ; இப்போ நான் செத்துப் போயாச்சு. உசிரோடு இருக்கிறது உசி ரில்லே, உடல்தான். இதுவும் மடியறது இண்ணைக் கில்லாட்டி நாளைக்கு ; நாளைக்கில்லாட்டி நாளண் ணைக்கி ; அண்ணைக்கியில்லாட்டி அதுக்கு மறு நாள்.'

விடியிருட்டில்தான் குழந்தையின் 'கொர்கொர்' சத்தம் அடங்கியது. அவள் முகத்தை அவன் பார்க்க முடியவில்லை. அவள் கன்னத்தை ஒருதடவை வருடினன். அவன் மனம் நெகிழ்ந்தது. குழந்தையை சுதன் கந்தையில் சுற்றிக்கொண்டு கிளம்பினன்.

வெளியிலும் இருட்டு. ஒரு பீடிப்பொறி மாத்திரம் தெரிந்தது.

"யாரய்யா ?"

"நான்தான் பட்டணம்."—குரலிலிருந்து தன் மேல் சீறிவிழுந்த ஆள் என அறிந்தான்.

"சுடுகாட்டுக்குப் போற வழி எது ஐயா ?"

அந்த நெருப்புப் பொறி எழுந்தது. "நான் காண்பிக்கிறேன், வா—"

'பட்டணம்' காண்பித்த வழியூடே அவன் பின்பற்றிச் சென்றான்.

# பூர்வா

இப்பொழுது அவள் என் கனவில் வந்தாள். ஏளனம் செய்யும் அவள் புன்னகையுடன் என் பின்னால் வந்து என் பேரை என் காதண்டை சொல்லி, என் தோளைத் தொட்ட மாதிரி இருந்தது.

'பூர்வா!' என்று அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தேன். என்னைச் சுற்றி இருட்டுத்தான். கண்ணைத் தேய்த்துக் கொண்டேன். கண்கள் கண்ணீரில் நனைந்திருந்தன. தூக்கத்திலும் என்னையும் அறியாமல் நான் அழுதிருக்கிறேன்.

'டாங்'!—எங்கேயோ மணி ஒன்று அடித்தது.

இனி விடியும் வரையில் தூக்கம் எனக்கு வரப் போவதில்லை. திரும்பத் திரும்ப நினைத்த நினைவு

களே மனத்திரையில் ஆட ஆரம்பித்து விட்டன, முன்னும் பின்னும், பின்னும் முன்னும்.

—ஆடி மூட்டத்தின் அதிகாலையில் சமுத்திரக் கரையோரத்தில் பூர்வாவின் கதை ஆரம்பமாகிறது.

நான் அலைகளைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தேன். "மனிதன் எவ்வளவோ கண்டுபிடிக்கிறான். புதுப் புதுக் கண்டங்களைக் கண்டிருக்கிறான். அநேகமாய் இப்பூமியில் கண்டறிய வேண்டியவைகளை யெல்லாம் கண்டுவிட்டான் என்றே சொல்லலாம். ஆனால், இன்னமும் அவன் இவ்வானையும் நீரையும் சரியாய் அளந்த பாடில்லை என்றே என் அபிப்பிராயம். இன்னமும் இச்சமுத்திரத்தில் அவன் மனத்திற்கும் பார்வைக்கும் எட்டாத ஜந்துக்கள் வேண்டியன புதைந்து கிடக்கின்றன. எனக்கு என்ன தெரியுமா ஆசை? என்றேனும் இக்கரையினின்றும் இப் படியே நடந்து ஜலத்துள் போய் உயிருடனும் நினைவுடனும் இருக்க வழி யாதேனும் இருந்தால், அவ்வுலகத்தைக் காண வேண்டுமென்கிற ஆசை தான்.

"நான் பட்டணம் வந்து பத்து வருஷங்கள் ஆகிவிட்டன. ஆனால் இன்னமும் சமுத்திரம் பார்த்த ஆச்சரியம் எனக்குத் தணிந்த பாடில்லை. எத்தனை பேர் கிறிஸ்துமஸ் லீவு என்றும் பொங்கல் விடுமுறை யென்றும் பட்டணத்துப் புதுமைகளைப் பார்க்க வேண்டுமென்று வருகிறார்கள். பட்டணத் திலும் நாளுக்கு நாள் ஒரு புதுமை இருக்கிறது. ஆனால் அப்புதுமைகளெல்லாம் புளித்து விட்டன. இச்சமுத்திரத்தின் புதுமை எனக்குத் தணிந்த பாடில்லை."

பூர்வா மௌனப் புன்னகை புரிந்தாள். நான் மேலும் பிதற்றிக் கொண்டே போனேன்.

"நான் முதல் முதல் பட்டணம் வந்ததை உன் னிடம் சொன்னேனோ? நான் கிராமத்திலிருந்து ஓடி

வந்து விட்டேன். ஒரு நாள் என் பாட்டி எல்லாக் குழந்தைகளையும் வைத்துக் கொண்டு ஏதோ ஒரு ராஜகுமாரன் கதை சொன்னாள். அவன் யாரோ ஒரு ஜலகன்னியை மணந்து கொண்டானும். அவளை முதன் முதலில் எப்படிப் பார்த்தானென்றால், உச்சி வெய்யில் வேளையில் சமுத்திரத்தில் இருந்து அவள் வெளிப்பட்டுக் கரைக்கு வந்து, வெய்யிலில் காய்ந்து கொண்டிருந்தாளாம். அப்பொழுது அந்த வழியில் வேட்டையாடிக் களைத்து, தொண்டை வறண்டு ஒரு ராஜகுமாரன் வந்தானும். எங்கே பார்த்தாலும் ஜலமாய் இருந்தாலும் உப்புத் தண்ணீர்; தாகத்தினால் தவிக்கிறான். அப்பொழுது இந்தச் சமுத்திர தேவதையைக் கண்டானும். அவன் அவளைக் கண்டு ஆசைப்பட்டானும்......

"இப்படி ஏதோ கதை போகிறது. எனக்கு இப்பொழுது முழுதும் ஞாபகமில்லை.

" 'பாட்டி, எப்படி அந்த ஜலதேவதை கரைக்கு வந்தாள் ?" என்றேன்.

" 'சமுத்திரத்திலிருந்து.'

" 'சமுத்திரம் எங்கே இருக்கிறது ?'

" 'பட்டணத்தில்.'

" 'அவள் எப்படி வரமுடியும் ?'

" 'அலையே படகாய், அவள் கையே துடுப்பாய்.........!'

" 'படகு என்றால் ? அலையென்றால்? துடுப்பு என்றால் ?'

" 'சனியனே! தூங்கறத்துக்குக் கதை சொன்னேனு ? நீ குறுக்குக் கேள்வி கேக்கறத்துக்குக் கதை சொன்னேனு ? திரும்பிப் படுடா கழுதை—'

"என்ன எனக்குத் தோன்றிற்றே தெரியவில்லை; அடுத்த நாள் காலை நான் அலமாரியிலிருந்து இரண்டு கை நிறையச் சில்லறையை அள்ளி மடியில்

கட்டிக் கொண்டு ஒருத்தருக்கும் தெரியாமல் பட்டணம் கிளம்பிவிட்டேன். எங்களூர் ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டரை எங்கள் வீட்டுக்குத் தெரியும். அதனால் அடுத்த ஸ்டேஷனுக்கு நடந்து போய் வண்டி ஏறினேன். 'எந்த இடத்திற்கு டிக்கட்' என்று கேட்டான். 'சமுத்திரத்திற்கு' என்றேன். இப்பொழுது சிரிப்பாய் வருகிறது.''

பூர்வா அவளுடைய புரியாப் புன்னகை புரிந்தாள்.

"பட்டப் பகலில் ஒரு படகடியில் படுத்துக் கொண்டு காத்துக் கொண்டிருந்தேன். அலைகள் மலைகள் போல் எழும்பி, சிகரத்தில் நுரையைக் கக்கின. நுரைமேல்.........''

"பூர்வா! பூர்வா!''

பூர்வாவின் செவியில் என் வார்த்தைகள் ஏற வில்லை. அங்கு மீன்பிடித்துக் கொண்டிருந்த ஒரு செம்படவனின் செய்கைகளில் அவள் கவனம் நழுவி விட்டது.

கடற்கரையில் எங்கள் மூவரைத் தவிர வேறு யாரும் இல்லை. வெகு நிதானமாய் அவன் ஒரு நண்டைத் தூண்டிலில் ஏற்றி ஜலத்தின் மேல் வீசி எறிந்துவிட்டு, யோகத்தில் ஆழ்ந்த மூர்த்தி போல் அசைவற்று மௌனமாய் மீனின் வருகைக்குக் காத்துக்கொண்டு நின்றான். அவ்வளவு தூரத்தில் இருக்கும் முள்ளில், மீன் மாட்டிக் கொண்டது அவனுக்கு எப்படித் தெரிந்ததோ! 'கரகர' வென்று இழுக்கும் கயிற்றின் நுனியில் ஒரு சாண் நீளத்துக்கு ஒரு மீன் துடித்துக்கொண்டு......

அதைக் கழற்றி, இடையில் கட்டியிருக்கும் ஓலைக் கூடையில் போட்டுக்கொண்டான். கூடைக்குள் படபடவெனச் சப்தம். திடீரென்று பூர்வா அவனை அணுகிக் கூடையைத் திறந்து காண்பிக்கச் சொன்னாள். அவன் ஏதோ முணுமுணுத்தான்.

"பார்த்தால் பார்ப்பாரு மாதிரி இருக்குதே!" என்று சொன்னான் போலிருந்தது.

கூடைக்குள் இரண்டு மீன்கள் கூடை வாயை எட்டி எட்டி உயிர் மூச்சுக்குத் தாவித் துடித்துக் கொண்டிருந்தன. போய்க் கொண்டிருக்கும் உயிரில் மலர்ந்து போன அழகிய விழிகள். ஒன்றுடன் ஒன்று இடித்துக் கொண்டு, 'ஆவ் ஆவ்' என்று வாயைத் திறந்தவாறு மூச்சுக்குத் தவித்துக் கொண்டு...........

திடீரெனப் பூர்வாவின் தலை கிறுகிறுத்துக் கண்களில் ஒளி மங்கியது. நான் தாங்கிக் கொண்டிரா விட்டால் அப்படியே கீழே விழுந்திருப்பாள். அவள் உதடுகள் என் செவியில் உராய்ந்தன. காற்றின் அசைவைப் போல் அவள் வார்த்தைகள் சப்த மற்றுப்போயின.

"நான் இரண்டு மாதங்களாய் ஸ்நானம் பண்ணவில்லை......"

நினைவு மங்கிய அவள் உடலை நான் தாங்கிக் கொண்டு நின்றேன். அவ்வலைஞன் என்னைப் பார்த்து மிரள மிரள விழித்துக் கொண்டு நின்றான். அவன் கையில் ஏந்திய தூண்டிலில் ஒரு நண்டு கழுவில் ஏற்றப் பெற்று, கால்களை உதைத்துக் கொண்டிருந்தது. எங்கள் மௌனத்தில் சமுத்திரம் பேரிரைச்சலாய் இருந்தது. அலைகள் எங்கள் கால்களைக் கழுவின.

* * *

நான் வீடு திரும்பும் வேளையில் கையெழுத்து மறைந்து விட்டது. பூர்வா வாசற் புறத்துத் தாழ்வாரத்தில் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டிருந்தாள். நெற்றி மயிரில் இரண்டு பிரியும், மேலாக்கும் மாலைக் காற்றில் மெதுவாய் அசைந்தன. அவள் கண்கள் மூடியிருந்தன. சந்தடி செய்யாமல் அவள் பக்கத்தில் போய், 'பூர்வா' என்று கூப்பிட்டேன். அவள் தூங்குகிறாளா, அல்லது

சிந்தனையில் ஆழ்ந்திருக்கிருளா என்று தெரிய வில்லை. எங்களைச் சுற்றி ஒரே அமைதி. செடி களிலும் மரங்களிலும் இலைகள் சலசலத்தன.

நான் தாழ்வாரத்தின் சுவரின் மேல் அமர்ந் தேன். பூர்வா எனக்குப் புரிந்த பாடில்லை. இம் மாதிரி படுத்துக் கொண்டிருப்பதில் அவளுக்கு ரொம்பவும் விருப்பம்.

சோம்பேறியா?

ஆயின் அப்படியும் தோன்றவில்லை; ஏனெனில், ஒருசமயம் நான் 'டைபாய்டு' ஜுரத்தில் படுத்தேன். இருபத்தொரு நாட்கள் கண்கூடத்திறவாத கடுஞ் சுரம். என் நினைவு எனக்குவந்ததும் என்ஞாபகத்தில் முதலில் உறைத்தது அவள் உருவமே. கவலையின் மிகுதியால் முடியக் கூட மறந்து அவிழ்ந்த கூந்தல் பிரிந்து கழுத்தின் இரு பக்கங்களிலும் சரிந்து என் மார்மேலே விழுந்திருந்தது. இரவும் பகலுமாய் தூக்கத்தில் மூடாத விழிகள். அன்ன ஆகாரம் மறந்ததால் சுண்டிப் போன முகத்தில் கண்கள் அளவினும் பெரியதாய் என்னை வெறித்தன. டாக்டர் என் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார், அவளைச் சற்று அச்சத்துடனேயே பார்த்த வண்ணம்.

"ஸார், இந்தப் பூட்டுக்குப் பிழைத்து விட்டீர்கள். ஆனால் இந்த அம்மா இல்லாவிட்டால் உங்களுக்கு என்ன நேர்ந்திருக்குமோ எனக்குத் தெரியாது. நீங்கள் தப்பர்த்தம் பண்ணக்கூடாது. உங்களைப் பெண்டாட்டியாய்க் கவனிக்கவில்லை; பிசாசாய்த்தான் கவனித்தார்கள். உங்களுக்கு மருந்து கொடுக்கு முன்னால் இந்த அம்மாளுக்கு உடல் தேற மருந்து கொடுக்க வேண்டும் என்று நினைக்கிறேன்......

" பூர்வா, பூர்வா, பூர்வா ! "

நான் பாட்டுக்குக் கூப்பிட்டுக்கொண்டே இருப் பேன். ஆனால் ஒவ்வொரு சமயம் அவளுக்குக் காதே கேட்காது.

செவிடா?

அதுவும் சொல்வதற்கில்லை. ஏனெனில் ஒரு இரவு என்னை அவள் அவசர அவசரமாகத் தட்டி எழுப்பினாள்.

'என்ன?' என்றேன், தூக்கத்தில் கையைக் காலை முறித்துக்கொண்டு. என் கையை அவசரமாய் மடக்கினாள். "உங்கள் தலைமாட்டில் தேள்."

"சும்மா கனவு காணாதே......இந்த இருட்டில் நான் எங்கிருக்கிறேன் என்று என்னாலேயே கண்டுபிடிக்க முடியாதே! உன்னால் முடியுமா, நீ தேளைக் கண்டு பிடிப்பதற்கு? இந்தா, சொல் பார்க்கலாம்—என்கையில் எத்தனை விரலை மடக்கிக் கொண்டிருக்கிறேன்?" என்று வேடிக்கை பண்ணினேன்.

"விளையாடாதீர்கள்...விளக்கைப் போடுங்கள்."

விளக்கைப் போட்டேன். வாஸ்தவமாய் ஒரு சருகுத்தேள் கொடுக்கைப் பாய்ச்சிக்கொண்டு கொட்டத் தயாராய் நின்றது. அதன்மேல் ஒரு அடியைப்போட்டேன். "எனக்குத்தெரியவில்லையே" என்றேன், அவளை வியந்தவண்ணம். "அது விழுந்த சப்தம் கேட்டுத்தான் நான் எழுந்தேன்" என்று முனகிக்கொண்டு பூர்வா திரும்பிப் படுத்தாள். அவள் பேசிக்கொண்டிருக்கையிலேயே நித்திரை அவளை மருவ ஆரம்பித்து விட்டது.

"பூர்வா, அறுபது நாழிகையும் என்ன யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறாய்? எந்தக் கவலையைப் பட்டுக் கொண்டிருக்கிறாய்?"

ஆம்; இவள் இவ்வளவு கவலைப்பட்டாற் போலிருப்பதற்கு என்ன காரணம் இருக்கிறது? என்னைச் சுற்றிப் பார்க்கிறேன். எங்கும் அமைதியைத் தவிர வேறொன்றும் தெரியவில்லை. அடையாற்றில் ஒரு மூலையில் எங்கள் வீடு. நாற்புறங்களும் மதிற் சுவர்கள். தோட்டத்தின் நடுவில் வீடு. வாசற் புறத்து அறைப்பக்கமாய் ஒரு மாதுளை மரம். முத்த

மிட்டுச் சிவந்த உதடுகள் போலப் பழங்கள் செவசெவ என்று அடுக்கடுக்காய்த் தொங்குகின்றன. மரத்தடியில் ஒரு கல் மேடை. எங்கள் தோட்டத்தில் எவ்வளவோ பூச்செடிகள் வைத்தும் மாலை வேளைகளிலோ, சில சமயம் காலை வேளைகளிலோ எதிர்பாராத சமயத்தில் மனத்தைத் திகைக்க அடிக்கும் ஒரு மணம் எங்கிருந்தோ காற்றில் மிதந்து வரும். தோட்டக்காரனைக் கேட்டால் சற்று நேரம் யோசித்துவிட்டுப் பக்கத்துக் காம்பவுண்டில் இருந்து வருகிறது என்பான். ஆனால் பக்கத்துக் காம்பவுண்டில் விசாரித்ததில், அம்மாதிரியான செடியோ, மரமோ அங்கே ஒன்றும் கிடையாது.

வீட்டின் பின்புறத்தில் அடையாறு அழுக்கற்று அமைதியாய் ஓடுகிறது. நிலவில் அது பளிங்காய் மாறிவிடும். தூரத்தில் சமுத்திரத்தின் ஓசை, இரைச்சலற்று, இதமான பேச்சைப்போல் இழைகிறது.

வீட்டுள் என் அறையில் அலமாரிகளில், மனத்திற்கும், சமயத்திற்கும் ஏற்ற புத்தகங்கள் நிறைந்து சுவர்களை மறைக்கின்றன. சோபாவும், மெத்தை நாற்காலிகளும் மலிந்து கிடக்கின்றன. தரையை ஜமக்காளமும், புலித்தோலும், மான்தோலும் போர்த்துகின்றன. இவ்விடத்தில் விசனத்திற்கும் குருட்டு யோசனைகளுக்கும் எங்கே இடம்?

"பூர்வா, பூர்வா!"

கேட்ட கேள்விக்குப் பதில் வராது. என் கூப்பாட்டுக்கு அவளது அர்த்தமற்ற, அல்லது அர்த்தம் நிறைந்த, அல்லது அர்த்தம் புரியாத, ஆனால் கவர்ச்சி மிகுந்த புன்னகைதான் பதில்.

நான் இன்னமும் யோசிக்கிறேன்; நான் அவளை மணந்தேனா, அவள் புன்னகையை மணந்தேனா? முதன் முதலில் நான் அவளைச் சந்திக்கையில்......

என் விவகாரங்களை யொட்டி அவள் பெற்றோர்கள் வசித்துவந்த கிராமத்திற்கு நான் போகும்படி

யிருந்தது. முன்பின் எங்கே, என்ன என்று அநுபவமோ, பார்த்தோ இருந்திருந்தால்தானே? கிணற்றடியில் குடத்தை படியில் வைத்துக்கொண்டு முழங்கையை மடியில் ஊன்றிக்கொண்டு மோவாய்க் கட்டையைக் கையில் தாங்கிய வண்ணம் தரையில் தட்டுத்தடுமாறி ஊறிச் செல்லும் வண்ணாத்திப் பூச்சியைப் பார்த்துக்கொண்டு பொருள் புரியாப் புன்னகையுடன் உட்கார்ந்திருந்தாள். எனக்கு நல்ல தாகம். நான் வாய்திறந்து கேட்குமுன்னர் வீட்டுள்ளிருந்து, "பூர்வா! பூர்வா! என்ன பண்ணிண்டிருக்கே?" என்று ஒரு அசதியான குரல் வந்தது. குடத்தில் ஜலத்தை மொள்ளாமலே அந்தப் பெண் வீட்டினுள் சென்றாள்.

அந்தக் கிராமத்தில் நான் ஒரு வாரம் தங்கும்படி நேர்ந்தது. அவ்வூரிலேயே அவர்கள் வீடு ஒன்று தான் பிராமணர் வீடு. ஆகையால், எனக்குத் தங்குவதற்கும் அங்குதான் ஏற்பாடாயிற்று.

அவர் தகப்பனார் பெரிய சம்சாரி. ஏழெட்டுக் குழந்தைகள். பெரிதும் சின்னதும்—அதில் ஐந்து பெண்கள். ஏழை; என்னதான் பண்ணுவார்! பாவம், ஊருக்கு மணியம் அவருடையது என்றாலும், வருவாய் மிகவும் சொல்பமே. க்ஷாமம் பிடித்த ஊர். சதா வீட்டில் இரைச்சல்; குழந்தைகள் சண்டை போட்டுக்கொண்டே யிருக்கும்; சின்னவர் பெரியவர் என்னும் தாரதரம் இருக்காது. வீட்டுக்கு வேற்று மனிதன் வந்திருக்கிறானே என்கிற லஜ்ஜையைக் கூடப் பொருட்படுத்தாமல் ஒன்றுடன் ஒன்று அடித்துப் புடைத்துக்கொள்ளும். "அப்பா இதைப் பாரேன், அம்மா இதைப் பாரேன்!" அவர் ஒரொரு சமயம் தலையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்துவிடுவார். "இந்தச் சனியன்களை யெல்லாம் எங்கேயாவது தொலைத்து விட்டு 'அக்கடா' என்று ஒரு நாளைக்கு இருக்க மாட்டேனா?" என்று வாய்விட்டே கத்துவார். இந்தப் புயலின் இடையில் பூர்வா கொஞ்சமும்

பதட்டமற்று அவளுடைய அதிசயப் புன்னகை யுடன் வளைய வருவது எனக்கு ஆச்சரியமாய் இருந்தது.

எதிரே உடன்பிறந்தவர்கள் ஒருத்தரை ஒருத்தர் கொலை பண்ணிக்கொண் டிருப்பார்கள். அவள் விலக்கவும் மாட்டாள், சேரவும் மாட்டாள். அவள் மனசைப் பொறுத்தமட்டில் அங்கேயே இருக்கவும் மாட்டாள் என்று நினைக்கிறேன். எதிரே ஆழ்ந்த யோசனையுடன், அமைதியாய் மோவாய்க் கட்டையைக் கைகளில் ஊன்றிக்கொண்டு உட் கார்ந்துகொண் டிருப்பாள். அவள் என்ன கனவு காண்கிறாள் ?

அவள் கனவு காண்பதும், காணும் நிலையும், அவள் புன்னகையும் அவளுக்கு மிகவும் பொருத்த மாய் இருந்தன. அப் பொருத்தம் என் மனத்தைக் கவர்ந்தது ; நான் அச்சமயம் தன்னந்தனி ; தனிக் காட்டு ராஜா. மெதுவாய் ஒரு பொது ஆள்மூலமாய் வார்த்தையை விட்டேன். அவர் பாவம், பிரமித்துப் போனார் ! "அந்தப் பையனுக்குத் தெரியுமா, அந்தஸ்தில் நம்மிருவருக்கும் மலைக்கும் மடுவுக்கும் இருக்கிற வித்தியாசம் ? நான் அன்னக் காவடி ; கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமானாலும் சகலமும் அவனேதான் ஏற்பாடு பண்ணிக்கொள்ள வேண்டும். என்னிடத்தில் ஒரு சல்லிக் காசுகூடக் கிடையாதே " என்றார்.

"எல்லாம் தெரியும் சுவாமி! உமக்கு ஏன் அந்தக் கவலை ! உம்மைத் தேடிக்கொண்டு அதிருஷ்டம் வந்தாலும் கண்ணை ஏன் இப்படிக் கெட்டியாய் மூடிக்கொள்கிறீர்கள் ?" அவரும் அவர் மனைவியும் நன்றி தாங்காமலே கண்ணீர் உகுத்தனர் என்று கேள்வி. ஐந்தில் ஒரு பெண் என்றாலும், ஒரு கனம் குறைந்தது என்றுதான் அவர்கள் நிலையில் அவர்கள் சந்தோஷப்பட முடியும்.

மாதமும் தை. அந்த வாரத்திலேயே ஒரு முகூர்த்தமும் நேர்ந்தது. மணம் நிறைவேறிய

சுருக்கு எனக்கே இப்பொழுது ஆச்சரியமாய் இருக்கிறது. இரண்டாம் நாளிரவு வண்டியேறினோம். முதல் வகுப்பு வண்டியில் நானும் அவளும்தான். வண்டி இருளைக் கிழித்துக்கொண்டு வெகு வேகமாய்ச் சென்றது.

'பூர்வா' என்று கையைப் பிடித்தேன். ஜன்னலிலிருந்து அவள் முகம் என் பக்கம் திரும்பிற்று. என்ன ஜாஜ்வல்லியமான புன்னகை! மோவாய் குழிந்தது. இத்தனிமையில், இந்த நெருக்கத்தில், இம்மங்கிய வெளிச்சத்தில், அவள் முகத்தின் கவர்ச்சி பன்மடங்கு அதிகமாய் எனக்குப்பட்டது.

'மணம் புரிந்துகொண்டபின் மனிதன் நிலை என்னவாகிறது?' என்று இன்னும் என்னைக்கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன். எப்படியிருந்தாலும், அதற்கு முன்னால் இருந்தாற்போல் அவன் இருப்பதில்லை. கால் கட்டு, பொறுப்பு என்பதைப்பற்றி நான் இப்பொழுது பேசவில்லை; அவன் மனநிலை... எப்படியோ அவன் முழுமை அவனிடமிருந்து கழன்று விடுகிறது. அவன் இரு கூறாய்விடுகிறான். ஒரு பாதியை மனைவி பெற்று விடுகிறாள். அவனிடமிருந்து போனது, போனதுதான். அதை அவன் திரும்பிப் பெறும் முயற்சியில் தவிக்கும் தவிப்புத் தான் தாம்பத்திய வாழ்க்கையோ? ஆயினும் அதே மாதிரி தன் பாதியை மனைவி அவனிடம் கொடுக்கிறாளோ? அவனிடமிருந்து அடைந்த பாதியே அவளுடைய கோட்டை. ஆண்களைவிட ஏமாந்த பிராணி இவ்வுலகில் எதுவுமே இல்லை!

அவள் அமைதி முதல் கொஞ்ச நாட்களுக்கு அதன் புதுமையால் ஒரு கவர்ச்சியா யிருந்தது. வெய்யிற் காயும் பூனைக்குட்டிபோல் அவள் சோபாவில் சுருண்டு படுத்துக்கொண்டு புன்னகை புரிந்து கொண்டிருப்பாள். மடியில் ஒரு புத்தகம் கவிழ்த்துப் போட்டிருக்கும். அவள் அதைப் படித்துக் கொண்டிருந்தாளோ? அல்லது பகற் கனவு கண்டு

கொண்டிருந்தாளோ? என்னதான் கனவு கண்டு கொண்டிருப்பாளோ?

அவளுடன் பேசுவதற்கு என்ன இருக்கிறது? மொத்தத்தில் அவள் வீட்டைப்பற்றிப் பேசுவதில் அவளுக்கு விருப்பமில்லை என்று அறிந்தேன். இளமையிலேயே வறுமை பிடுங்கித் தின்னும் வாழ்க்கையைப்பற்றிப்,பிரியமாய் என்ன பேசமுடியும்? ஒரு தடவை,ஆகாரமில்லாத பலவீனத்தில் கிணற்றடியில் மயக்கம்போட்டு விழுந்து விட்டாளாம். மண்டையில் நல்ல அடி. தரித்திரத்தின் கொடுமையால் ஏற்படும் மனக் கசப்புடன், பொறுமையும் பிரியமுமற்ற அக்கஷ்டத்தைப்பற்றி விஸ்தரிக்க அவளுக்கு இஷ்டமில்லை.

"ஆயினும் எல்லாம் நிறைந்திருக்கும் இவ்விடத்தில் நீ ஏன் சந்தோஷமாய் இருக்கக்கூடாது ?"

அவள் உதடு நகை அரும்பு கட்டியது.

"நான் சந்தோஷமாய் இல்லை என்று நீங்கள் என்ன கண்டீர்கள்? சந்தோஷமாய் இருக்கவேண்டுமென்றால் என்ன செய்யவேண்டும் ?"

அவளுடைய அமைதி, அமைதியல்லாது இயற்கையிலேயே அவளுக்குடைய பத்திர சுபாவம் என்று இப்பொழுது காண்கிறேன்.

அவள் பத்திரம் என் மனத்தின் நிம்மதியைக் குலைத்து எனக்கு விஸ்தரிக்க வொண்ணாத ஒரு மனச் சங்கடத்தை இயக்குகின்றது. எங்கள் சுபாவத்தின் மாறுபாட்டால், நாங்கள் அறியாமலே எங்களிருவரிடை எழும்பியிருக்கும் சுவரை நான் தகர்க்க முயன்றதில்லை. நான் அதில் முட்டிக்கொண்டதுதான் மிச்சம். நான் 'கலகல' வென்று ஒரு தோழியை வேண்டினேன் ; கல்லை வேண்டவில்லை. ஆயினும் நான் அவள்மேல் வைத்துவிட்ட பிரியத்திற்கு எல்லையில்லை. அப்பிரியத்தில் என் முழுமையை நான் இழந்துவிட்டேன். அவ்வெதும்பலிலேயே என் அகம் எரிந்தது. ஈடாக அவளுடைய

அம்சத்தை நான் பெறாது என்னை நான் இழந்து கொண்டிருக்கும் சங்கடம் எனக்குத் தாங்க முடிய வில்லை. இயற்கையாகவே என் உடலிலும் மனதுசிம் என்னையும் மீறித் துடிக்கும் உத்வேகம் செலாவணி யாவதற்கு இவள் என் வாழ்க்கையில் புகுமுன்னர் எத்தனையோ வழிகள் இருந்தன.

இப்பொழுதோ?

"ஹேறா, பூர்வா! உன் உடலில் ஓடுவது ரத்தமா அல்லது பானையிலிட்டுக் குளிர வைத்த பச்சை ஜலமா?"

திகைப்பில் அவள் விழிகள் மிரளுகையில் அவளுக்கு எப்படி அவ்வளவு அழகு கொடுக்கிறது?

"நீங்கள் சொல்லுவது எனக்குப் புரியவில்லையே!"

"வாஸ்தவம், நான் என்ன உளறுகிறேன் என்று எனக்குத் தெரியவில்லை."

பாலையில் கானலைக் கண்டு தவிப்பவன்போல் இருக்கிறது என் மனநிலை.

ஒரு தடவை சமையலறையில் மாடப் புரையில் எதையோ தேடுகையில் அவளைத் தேள்கொட்டி விட்டது. வலியினால் வாய்விட்டுக் கத்தமாட்டாளா! கொட்டிய இடத்தைக் கெட்டியாய் அழுத்திப் பிடித்துக்கொண்டு சுவரில் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள். நெறி தோளைக் குடைகிறது. நெற்றியில் வியர்வை முத்துமுத்தாய் அரும்புகிறது. துடிக்கும் வலியில் புருவங்கள் நெரிகின்றன. ஆயினும் வாயினின்று, "அம்மாடி பொறுக்க முடியவில்லையே!" என்ற ஒரு அரற்றல் கூடக் கிளம்பமாட்டேனென்கிறது. அவளை நான் என் தோளில் சாய்த்துக் கொள்கிறேனென்றாலும் என் ஆறுதலுக்குச் சாய்த்துக்கொள்கிறேனே யொழிய, அவள் வேதனைக்குத் தணிப்பாய் இருப்பதாகத் தெரியவில்லை. அவளுக்காக நான் தவிப்பது

என் தவிப்பே; அவள் தவிப்பில் ஒரு பங்கு அல்ல. அவள் தான் எனக்குத் தன்னில் பங்கு தரமாட்டே னென்கிருளே! 'இவள் மனித ஜன்மந்தானு, அல்லது மிருகமா!' என்றுகூட நான் வியப்புறுகிறேன். வேதனையை அவ்வளவு மௌனமாய் அவைகள் தாம் சகித்துக்கொள்ளும்.

* * *

ஆயினும் அவள் இப்பொழுது நெற்றியில் கூந்தலின் இரு பிரியும், மார்பின் மேல் மேலாக்கும் மாலைக் காற்றில் மெதுவாய் அசைய, மூடிய கண் களுடன் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண் டிருக்கும் நிலையை நான் கவனிக்கையில், என்னையும் மீறி என் மனம் பரிதபிக்கிறது.

பாவம், தன்னுடன் போகாது என் வித்தையும் தாங்குகிருள். ஏற்கனவே சற்று நலிந்த உடல். இன்னும் நாளாக ஆக என்னவோ! என் மனத்தை அலசிப் பார்த்துக்கொள்கிறேன். நான் இன்னமும் சில நாட்களுக்குள் தந்தையாவதைப் பற்றி எனது மனத்தில் சந்தோஷமா? பெருமிதமா? ஒரு தினுசில் சிறு அசடு தட்டுகிறது—ஏதோ ஏமாந்து போன மாதிரி; ஆனல் மனத்தில் ஒரு நிம்மதியும் படுகிறது. அக்குழந்தையின் மூலம் அவளிடம் நான் எனது அம்சத்தில் ஒரு பங்காவது பெற்றுவிடுவேன் என்றே நினைக்கிறேன். பிறப்பது பெண்ணுய்ப் பிறந்தால் தேவலை. தன் தாயைவிட என்னிடம் இன்னும் கொஞ்சம் பட்சம் காட்டாதா ?

திடீரென்று அவள் குரல் என் சிந்தனையைக் கலைத்தது. "அந்த வலையன் கூடைக்குள் மீன் ரெண்டு இருந்ததா, மூணு இருந்ததா ?"

"இரண்டுதான் என்று நினைக்கிறேன். இப் பொழுதென்ன அதைப்பற்றி ?"

"அந்தக் குடலைக்குள் அந்த ஜோடி எப்படித் தவித்தது, பார்த்தேளா? எனக்குப் பார்க்கவே சகிக்கவில்லை."

"அதெல்லாம் பற்றி நினைத்துச் சங்கடப்பட்டுக் கொண்டிருக்காதே. மனசில் அதெல்லாம்—"

"—அதோ பாருங்கள்" என்று மறுபடியும் அவள் குரல் குறுக்கே வெட்டிற்று. திகிலின் அதிர்ச்சி கண்ட குரல். எனக்கே புதிதாய் இருந்தது. ஆகாயத்தைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டிருந்தாள். ஆகாயத்திலிருந்து இரண்டு நட்சத்திரங்கள் விழுந்துகொண்டிருந்தன. நிலையினின்று கழன்று சத்தமற்று, சீறிக்கொண்டே இறங்குகையில் அந்தரத்தில் ஒன்று கலந்து ஒரே நட்சத்திரமாய் உதிர்ந்தன. வீட்டுக்குப் பின்புறம் அடையாற்றில் விழுந்திருக்கும்.

அவள் கையை மெதுவாய்ப் பிடித்தேன். அதில் ஒரு சிறு நடுக்கம் இருந்ததோ! "பச்சை மரத்தைப் பார்த்தாயோ?" என்றேன் காதண்டை, மெதுவாய், கேலியாய், மனசுக்குத் தைரியமூட்டும் பாவனையாய். அவள் பெருமூச்செறிந்தாள். என்ன விசனமோ! அறியேன்.

* * *

**ஆவணி...... புரட்டாசி...... ஐப்பசி......**

வெளியில் நல்ல மழை பெய்கிறது. அடையாறு என் வீட்டுக்குப் பின் சுவர் வரையில்கூட எட்டிவிட்டது என்று நினைக்கிறேன். வானத்தினின்று குடம் குடமாய் ஊற்றுகிறது. பகலிலேயே விளக்கைப் போட்டுக் கொள்ளும்படியான இருள் கவிந்தது.

**பூர்வா.**

என் எதிரில் சோபாவில் சாய்ந்துகொண்ருக்கிறாள். அவள் அவயவங்கள் உருண்டு திரள ஆரம்பித்துவிட்டன. உடலிலும் முகத்திலும் ஒரு தனி அழகு பொலிகிறது. மேனியில் ஒரு பள

பளப்பு. அவளுடைய புரியாப் புன்னகையில் முன்னிலும் பன்மடங்கு மயக்கு. பேச்சில்,—எங்கே, அவள் முந்திய அளவுகூட இப்பொழுது பேசுவதில்லை! தன்னுள் தானே மூழ்கிக் கிடக்கிறாள்.

"பூர்வா, கலகலவென்று இரேன். குருட்டு யோசனை பண்ணிக் கொண்டிருக்காதே. பொம்மனாட்டிகள் கர்ப்ப காலத்தில் சந்துஷ்டியாய் இருந்தால் சந்ததியும் நன்றாய் இருக்கும்...... சுறுசுறுப்பாய் இருக்கவேண்டும்......."—நான் சொல்வதெல்லாம் அவள் காதில் விழுந்தால்தானே!

"பூர்வா, பூர்வ ஜன்மத்தில் நீ என்னவாய் இருந்திருப்பாய் என்று யோசித்துக் கொண்டிருக்கிறாயா?" அவள் கண்களில் முதன் முதலாய் ஒரு குறுகுறுப்பும் விந்தையும் தட்டின.

"ஏன் உங்களுக்கு அப்படித் தோன்றுகிறது?"

என்னை உறுத்திய எரிச்சல் திடீரென்று தணிந்தது. அதற்குப் பதில் மனசில் ஒரு சிறு விசனம் புகுந்தது. "ஆம், மிருகங்களுக்குப் பூர்வ ஜன்ம வாசனை யிருக்குமாம். அதனால்தான் அவைகள் ஆகாரம் தின்னாத வேளையில் தம்முள் தாமே ஆழ்ந்திருக்கின்றன. 'ஐயோ, அந்த ஜன்மத்தில் அப்படியிருந்தோமே, இப்பொழுது இப்படியிருக்கிறோமே' என்பது அவைகளின் சிந்தனை போலும்! நீ அநேகமாய் அப்படித் தான் இருக்கிறாய்."

"உம்?" என்று சிரித்துக்கொண்டே எழுந்து உட்கார்ந்தாள். அவளுக்குப் பேசப் பிடித்தமான விஷயம் ஏதோ கண்டுபிடித்து விட்டேனென்று தோன்றிற்று. அதில் ஒரு சந்தோஷம், அவளைச் சுவாரஸ்யப்படுத்தும் விஷயம் ஏதோ ஒன்றேனும் என்னிடம் இருப்பதில் எனக்கு ஒரு சந்தோஷம். மனிதனின் சபலத்தை என்னென்று சொல்வது?

ஜன்னல் கண்ணாடியில் மழைத்தாரை வழிந்தது. அதற்கப்பால் மாரியிருளின் மங்கலில் தோட்டத்தின் மாதுளை மரம், அந்தண்டை மதிற்சுவர், அதற்கு

மப்பால் சற்று மேட்டு நிலத்தின் மேல் ஏறும் வண்டிப் பாதை, அதற்குமப்பால் சவுக்கு மரங்கள், அவைகளின்மேல் மழை மேகங்கள் கவிழ்ந்த வானம், அதற்குமப்பால் தூக்கம் கலைந்து பசிகண்ட சிங்கத்தின் கர்ஜனைபோல் இடியின் குமுறல். இப்போதைக்கு வெக்கையளிக்கும் திணுசாய்த் தோன்றவில்லை.

நான் ஏதோ என் மனத்தில் தோன்றியதைச் சொல்லிக்கொண்டே போனேன். "அவனவன் பூர்வ ஜன்ம வினைக்கேற்ற ஜன்மமெடுக்கிறான்; மறைகிறான். அநேகமாய் ஒருவனுடைய இந்த ஜன்மக் குணாதிசயங்களைக் கண்டே, அவன் பூர்வ ஜன்மத்தில் என்னவாய் இருந்திருப்பான் என்று சொல்லிவிடலாம் என்று நினைக்கிறேன்."

"அப்படியானால் நான் என்னவாய் இருந்திருப்பேன் என்று உங்களுக்குத் தோன்றுகிறது?"

"நீ ஒரு கல்லாய் இருந்திருப்பாய் என்றுதான் எனக்குப் படுகிறது. யாராவது ஒரு மகான் இளைப்பாற உன் கல் ஜன்மத்தில் எப்பொழுதேனும் உட்கார்ந்திருக்கலாம்; அந்த ஸ்பரிச புண்ணியத்தினால் உனக்கு மானிட ஜன்மம் கிட்டியிருக்கும். தெரியுமோ யில்லையோ, அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது!"

எனது தர்க்க நுணுக்கத்தைக் கண்டு அவள் சிரித்தாள்.

"நீங்கள் ?—"

"நானா? என் அப்பா..."

அவள் மிரள விழித்தாள்.

"புரியவில்லையா? நான் என் தாயின் கர்ப்பத்தில் இருக்கையிலே என் தகப்பனார் காலமாய் விட்டார். அது ஒரு அற்பாயுசு நிலை! ஆகையால் நான் பிறந்ததும் என் தந்தைதான் மறுபடியும் என் ரூபத்தில் ஜனித்திருப்பதாக என் தாயாருக்கு எல்லோரும் தேறுதல் சொன்னார்களாம். நானும் நடையுடை

பாவனை எல்லாவற்றிலும் என் அப்பா மாதிரியே...”

நான் என்பேச்சை முடிக்கவில்லை; வயிற்றைக் கலக்கும்திணுசில்ஒரு பெரும் இடிவீட்டின்மேலேயே விழுந்ததுபோல் மளமள வென நொறுங்கியது. “பூர்வா!” ஒரு தாவுத் தாவி அவளை அணைத்தேன். அவள் பயந்து கொள்ளாமல் இருக்கவேண்டுமே! கர்ப்பிணி. அதை யொட்டி ற் போலேயே, அதனினும் பெரிய இன்னொரு இடி. ‘பளீ’ரென்று சாட்டை போல் ஒரு மின்னல்! யுகத்தை யொத்த ஒரு கணநேரம், நாங்கள் இருந்த அறை அதன் வெளிச்சத்தில் ஜ்வலித்து மறுபடியும் முன்னிலும் இருண்டது. அவள் உடல் வெடவெடவென்று உதறிற்று. அவளை நான் தட்டிக் கொடுத்த போதி லும் என் தைரியம் அப்பொழுது சூன்யம்தான்.

“இடித்தது ஒண்ணு? ரெண்டா?” என்றாள்.

“எப்படியிருந்தால் என்ன?”

“சும்மா கேட்டேன்.”

* * *

**கார்த்திகை—**

“பூர்வா, நாளாகிறது, உன் வீட்டு மனுஷாள் யாரையாவது வரவழைக்கட்டுமா? அல்லது உனக்கு உன் பிறந்தகம் போகவேண்டு மென்றிருக்கிறதா?”

“வேண்டவே வேண்டாம்!” அவள் மறுப்பில் ஒலித்த தீர்மானமும், கோபமும், பயமும் எனக்கு ஆச்சரியமாய் இருந்தன. ஆகையால் அத்துடன் அப்பேச்சையும் விடும்படியாய்விட்டது. ஆயினும் அவளிடம் ஒரு சிறு மாறுதலை நான் இப்பொழுது கண்டேன். அவள் மௌனம் வெறும் மௌனமாய் இப்பொழுது இல்லை. அர்த்தமும் காரியமும் நிறைந்த மௌனம். இரண்டுபேர் ஒரு அறையில் ரகசியம் பேசிக் கொண்டிருந்தால், அதைச் சுவரில் காதை வைத்துக் கொண்டு வெளிப்புறமாக ஒட்டுக் கேட்பவனின் மௌனம்; நாடி பிடித்துப்பார்க்கும்

வைத்தியனின் மௌனம். அவள் எதை அப்படி ஒட்டுக் கேட்கிறாள்? பூமாதேவிக்கு நாடி பிடித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாளா? இவள் கவலைகளைப் பட்டுப் பட்டு எனக்கு மண்டைகூட நரைத்துவிடும் போல் இருக்கிறது.

ஒரு நாள் நான்பாட்டுக்கு மௌனமாய் எதையோ படித்துக் கொண்டிருந்தேன். அவள் வழக்கம்போல் எதிரில் உட்கார்ந்து கொண்டிருந் தாள், பெரிதாய்க்கொண்டே வரும் வயிற்றின்மேல் கையை வைத்துக்கொண்டு.

"கொஞ்சம் சும்மாயிருங்கள்—"

நான் விழித்தேன். "நான் சும்மா தானே இருக்கிறேன்."

"உங்களுக்கு ஒன்றும் கேட்கவில்லையா?"

எனக்கு ஒன்றும் புரியவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தேன். "எலியா, பெருச்சாளியா? ஒன்றும் தெரியவில்லையே."

"என் வயிற்றுக்குள் குசுகுசுவென்று யாரோ பேசும் குரல் எனக்குக் கேட்கிறது."

"சீ அசடே!"

"அசடுமில்லை; சமர்த்துமில்லை. நிஜமாய்த்தான்."

"என்ன பேசுகிறது? 'அம்மா பலூன் வாங்கிக் கொடேன்' என்று குழந்தை இப்பவே கேட் கிறதா?"

"உங்களுக்கு எப்பவும் விளையாட்டுத்தானா?"

முதன் முதலில் என் மனத்தில் சிறு அச்சம் கண்டது. அவள் அருகில் சென்று தோள்மேல் கையைப் போட்டுக் கொண்டேன். "பூர்வா, இன் றைக்குச் சினிமாவுக்குப் போவோம். சார்லி சாப் ளின் படம். அவனைப் புரிந்துகொள்ள பாஷை தெரியவேண்டியதில்லை."

"பேச்சை மாத்தாதீர்கள்னு........."

எனக்கு என்ன பேசுவதென்றே தெரியவில்லை.

இந்தப் பாழும் மழை ஓயாதா! இன்னமும் இம்சையாய் 'பிசுபிசு', வென்று தூறிக்கொண்டு தானிருக்கிறது. இதனாலேயே அர்த்தமற்ற இலேசம் ஒன்று வண்டல்போல் மனத்தில் இறங்கி உறுத்துகிறது.

அன்றிரவு படுக்கையில் முனகினாள்.

"என்ன பண்ணுகிறது பூர்வா?",

"வயிற்றைக் குமட்டுகிறது. சங்கடமாய் இருக்கிறது. வாந்தி வரும் போலிருக்கிறது. இதோ வருகிறேன்."

அவளுக்கு மறுக்கும்சப்தம் வெந்நீருள்ளிருந்து கேட்கிறது.

என் பிரிவுத்தனத்தால் அவளுக்கு என்ன பிரயோஜனம்? நானும் தவிக்கிறேன், அவளும் தவிக்கிறாள். இந்நிலையில் நானும் தனியன், அவளும் தனியள்தான்; அவள் படும் கஷ்டத்தை நான் வாங்கிக்கொள்ள முடிகிறதா? அவளால் தான் கொடுக்க முடிகிறதா? இப்படியே தான் சந்ததி உண்டாகிறது; மடிகிறது. பார்க்கப் போனால் யாரால் யாருக்கு என்ன பயன்?

* * *

மார்கழி—

இரவு, தூக்கம் அவளுக்கும் கெட்டுவிட்டது; எனக்கும் கெட்டுவிட்டது. ஒரு பெரும் அசதிதான் கண்ட மிச்சம். டாக்டரைக் கூப்பிட்டுக் காண்பித்ததில் ஒன்றும் கோளாறாய்த் தெரியவில்லை. அவளுக்கு வயிற்றில் இம்சை அதிகரிக்க ஆரம்பித்து விட்டது. ஏழு மாதங்களிலேயே வயிறு நிறைந்து இறங்கிவிட்டது. அடிக்கடி ஒரு பெருமூச்சு, ஒரு இறைப்பு. ஒரு உயிர் இன்னொரு உயிரைத் தாங்

இக் கொண்டிருப்பதென்றால் இலேசாய் இருக்கிறதா?

"என் வயிற்றில் நான் எப்பொழுதும் ஒரு குரலைக்கேட்டுக் கொண்டிருக்கிறேன். ஒரே குரலாய் இல்லை. வெவ்வேறு குரலாய் இருக்கிறது. சுவாமி எந்த ஜன்மாவை என் வயிற்றுக்குள் வைக்கலாம் என்று இன்னும் ஒவ்வொன்றாய் வைத்து வைத்துப் பார்த்து எடுக்கிறாரா? எந்தக் கணக்கில் வைப்பார்? என் வயிறு எவ்வவு கொள்ளுமோ அந்தக் கணக்கில்லையா?"

"அடி பைத்தியமே! அன்னிக்கு என்னவோ சொன்னேன்; அதை வைத்துக்கொண்டு யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறாயா?"

"ஏன் பண்ணக்கூடாது? என் அவஸ்தையிலும் எனக்கு அப்படித்தானே படுகிறது! என் வயிற்றுக் குள்ளேயே ஏதோ சச்சரவும், மனஸ்தாபமும் நடந்துகொண் டிருக்கிறது. யாருக்கும் யாருக்கும் என்று தெரியவில்லை. சுவாமிக்கும், ஜன்மத்துக் குமா?—"

இவள் பேசுவது வேதாந்தமா? விபரீதமா? "பூர்வா, இதெல்லாம் மனப் பிராந்தி. இதற்கெல் லாம் இடம் கொடாதே. நாளைக்குப் போகிப் பண்டிகை. பழையன கழியும்;பொங்கலோடு புதியன பிறக்கும். இனி, தை மாதம், நாட்களெல்லாம் குஷியாய் இருக்கும். பொங்கல் கழியட்டும்; நாம் இருவரும் குற்றாலம் போவோம். நீர் வீழ்ச்சியை நீ பார்த்ததில்லையே? எண்ணெய் தேய்த்துக் கொண்டு அதனடியில் நின்றுவிட்டால் போதும்; சீயக்காய் தேய்த்துக் கொள்ள வேண்டியதில்லை. அவ்வளவு ஜோராய், 'கொட கொட' வென்று கொட்டும் மாலையும் காலையும் அங்கு ரொம்பவும் அழகாய் இருக்கும்..."

நான் இதை யெல்லாம் யாருக்குச் சொல்லிக் கொண்டிருக்கிறேன்? எனக்கா?

தை—

திடீரென்று அவள் படுத்திருந்த கட்டிலி லிருந்து அவள் குரல் கிளம்பிற்று. நான் துள்ளி யெழுந்தேன்.

"வேளை வந்துவிட்டதென்று நினைக்கிறேன். இடுப்பை அப்படி வலிக்கிறது."

அவள் குரல் கூடியவரையில் அமைதியாய் இருந்தபோதிலும் எவ்வளவு தூரம் அவள் அடக்கிக் கொண்டிருக்கிறாள் என்று அதன் அமைதியிலும் ஒருவாறு புரிந்தது. புரிந்த அளவுகூட மனம் சகிக்க முடியவில்லை. காரை ஷெட்டிலிருந்து எடுப்பதற்கு, இதுவரையில் எனக்கு ஆகும் நேரத்தில் பாதி நேரம்தான் ஆகியிருக்கலாம். ஆயினும் இவ்வளவு நேரமாய் எனக்கு எப்பொழுதும் பட்டதில்லை.

வண்டியை முழு வேகத்தில்தான் ஓட்டுகிறேன். ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்கும் மூன்று மைல்தான். ஆயினும், இந்த மூன்று மைல் தூரத்திற்கு முழு வேகத்தில் இப்பொழுதாகும் நேரத்தைவிட, இன்னமும் சுருக்கில், இதைவிடக் குறைந்த வேகத்தில், முந்நூறு மைல் தூரத்தை நான் கடந்திருக்கிறேன்.

அவள் என் பக்கத்தில்தான் உட்கார்ந்திருக் கிறாள். என் மேல் சாய்ந்து கொண்டிருக்கிறாள். சத்தம் வெளிப்படாத வண்ணம் கீழுதட்டை அவள் பற்கள் இறுகக் கடித்து அழுத்திக் கொண் டிருக்கின்றன. அவள் சரீரம் எவ்வளவு மிருதுவாய் இருக்கிறது. என் வண்டி பறக்கிறது; வண்டி யின்பின் அதன் தோகை போலும் ஒரு புழுதி மேகம் அதைத் துரத்துகிறது. இந்நள்ளிரவில் நடு நிலவில் அடையாறு ஒரே வெள்ளித் தகடாய்ப் பிரகாசிக்கிறது. இந்தக் கஷ்டத்திலும் மனத்தில் இவ்வழகு பதியாமலில்லை.

நாளைக்குக் குற்றாலம் போவதாய் இருந்தோம். இப்பொழுது குற்றாலம் எவ்வளவோ தூரம்

எட்டப் போய்விட்டது. குத்தாலமும் வேண்டாம்; எத்தாலமும் வேண்டாம்; வயிற்றைவிட்டுக் கனம் கழிந்தால் சரி.

"என் வயிற்றில் ஏதோ பெரிய யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது. என் அப்பாவும் அம்மாவும் சண்டை போடுகிறமாதிரி—"

வலியின் ஜன்னியில் இப்படிப் பிதற்றுகிறாளா?

அப்பாடா! இதோ ஆஸ்பத்திரி வந்துவிட்டது. அவளை அழைத்துக்கொண்டு உள்ளே போனார்கள். சற்று நேரத்துக் கெல்லாம் நர்ஸ் ஒருத்தி அவள் புடைவையைச் சுருட்டிக்கொண்டு வந்து காரின் பின்ஸீட்டில் எறிந்தாள்.

டாக்டர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். "இப்பொழுதுதான் முதல் தடவையோ?"

பரபரக்க வாசலில் உலாவினேன். இவர்களுக் கெல்லாம் கேலியாகத்தானிருக்கும். இப்பொழுது என் தவிப்பு அதிகமா? அவள் தவிப்பு அதிகமா?

திடீரென்று அவளுடைய வீறல் நிசப்தத்தை வெட்டியது, என் வயிற்றைச் சுருட்டியது. வலி கடைசியில் அவளை வெற்றி கொண்டுவிட்டது. இன்னொரு வீறல். இன்னும் ஒன்று. ஒவ்வொரு வீறலுக்கும் என் இதயம் பாளம் பாளமாக வெடிப்பதை நானே உணர்கிறேன். ஆயினும் வலி அவளைக் கடைசியில் வெற்றி கொண்டதைப்பற்றி எனக்கு உள்ளூறக் கவலை கழிந்தாற் போலவே தோன்றுகிறது. பூர்வாவும் என் மாதிரி, சாதாரணப் பிறவி தான். அவளுக்கும் வலி, உணர்ச்சி எல்லாம் உண்டு. இனி என்மாதிரி அவளும் ஆகிவிடுவாள். இன்னும் கொஞ்ச நேரத்தில் குழந்தை பிறந்ததும் எங்களிருவருக்கும் சந்தோஷம்தான்.

நர்ஸ் வெளியே ஓடிவந்தாள். "டாக்டர்—டாக்டர்!" டாக்டர் பறக்கப் பறக்க உள்ளே ஓடுகிறார். என்னையு மறியாமல் என் உடல் அவரைப் பின்தொடர முயல்கிறது.

"வில்லி!" என்று என்னைப் பிடித்து அவர் வெளியே தள்ளுகிறார். முகத்தைக் கையில் பிடித்துக் கொண்டு வாசற்படியில் உட்காருகிறேன். காது கேட்க வொண்ணாத பேச்சுக்களும் கலவரமும் உள்ளே நடக்கின்றன. ஒரு வார்த்தை மாத்திரம் சம்மட்டி அடித்தாற்போல் உள்ளிருந்து வெளியே கேட்கிறது.

'ஹெமரேஜ்!—'

அப்புறம் என்ன என்று எனக்கு நினைவில்லை. எனக்கு நினைவு வந்த சமயத்தில் டாக்டர் என்னை தோளைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டிருந்தார்.

"தைரியமா யிருங்கோ, ஸார்—நாங்கள் ஒன்றும் செய்வதற்கில்லை. ஹோப்லஸ் கேஸ்; இரட்டைக் குழந்தை—ஆணும் பெண்ணுமாய் வயிற்றிலேயே செத்துப் போய்விட்டன. ஆயுதம் போட்டுப் பிரயோஜனமில்லை—ஹோப்லஸ் கேஸ்—"

நான் ஒன்றும் பேசவில்லை. பேச என்ன இருக்கிறது? எனக்கு அழுகைகூட வரவில்லை. என் கண்கள் காரில் சுருட்டிப் போட்டிருக்கும் அவள் புடைவையை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தன. வெங்காயக் கலர்ப் புடைவை; ஓரத்தில் சிவப்பு பார்டர்; அவள் கலியாணத்திற்கு வாங்கின புடைவை.

கீழ்த்திசை வெளுக்க ஆரம்பித்துவிட்டது.

பூர்வாவின் கதையும் முடிந்தது.

# மஹாபலி

## சாவு

**சா**லையோரத்தில் ஒரு மாமரம். மாமரத்தடியில் ஒரு குளம். குளக்கரையில் ஒருவன் விழுந்து இறந்து கிடந்தான். வியாதியில்லை, வெக்கையில்லை. கைகள் முஷ்டித்திருந்தன. சாவைத் திடீரென்று சந்தித்த பயங்கரத்தில், கண்கள் ஆகாயத்தை அண்ணாந்து நிலைகுத்திப் போயிருந்தன. வாழ்க்கையின் முழு நம்பிக்கையை அந்த வாழ்க்கையின் முடிவு முறியடித்த கோரக் களை முகத்தில் கூத்தாடியது.

போகப் போக, ஒரு காகம் பறந்து வந்து நெற்றியில் உட்கார்ந்து கண்ணைக் கொத்த முயன்றது. பின்னாலேயே ஈக்கூட்டங்களும் எறும்புச்

சாரிகளும் எங்கிருந்தோ புறப்பட்டு வந்து மூக்கிலும் வாயிலும் காதிலும் மொய்க்கத் தலைப் பட்டன. அவன் மார்பில் நிழல் தட்டியது. காகம் மேல் நோக்கி, 'கா' என்று கத்திக்கொண்டு பறந்தது. மேலே ஒரு பருந்து, இரவு போன்ற இறகுகளை அடிக்காது விரித்து, ஆகாயத்தில் செங்குத்தாய் நீந்திக் கொண்டிருந்தது.

அவன் தன் சாவுக்குத் தயாராக இல்லா விட்டாலும், மற்ற ஜீவராசிகள் அவன் மரணத்துக் குத் தயாரா யிருந்தன. அவைகளுக்கு அவன் வாழ்வில் நம்பிக்கை யில்லை. அவைகள் நாசமும் நசிப்பும் தவிர, வேறு எதுவும் அறியமாட்டா. ஆகையால், அவைகள் அவனை அழிக்க ஆரம்பித்து விட்டன.

ஆனால், அதற்குள் சாலையில் நடமாட்டம் ஏற்பட்டது. முதலில் ஒருவன் வந்து பார்த்து விட்டு உளறி யடித்துக்கொண்டு ஓடி, ஒன்பது பேரைக் கூட்டி வந்தான். எல்லாரும் அவனைச் சுற்றி நின்று அவன் இறந்த மர்மத்தை அறிய முயன்றார்கள். ஆயினும் அங்கேயுள்ள புல்லும் பூண்டும், புள்ளினங்களும் தவிர வேறு யார் அதை விளக்க முடியும்?

பிறகு, அந்தப் பிணத்தைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள். இடம் மறுபடியும் வெறிச் சென்று போயிற்று.

கேலியில் நகைப்பது போல், பட்சிகள் 'க்றீச்' சிட்டன; இலைகள் ஓசையிட்டன. ஆனாலும், இளங் காற்று அந்த மாமரத்தை ஊடுருவுகையில், அதனின்று ஒரு பெருமூச்சு கிளம்பியது. மற்ற ஓசை எல்லாம் அச்சங் கண்டு அடங்கியது.

ஏனென்றால், அந்த மனிதன் இறந்த உண்மை யான காரணத்தை அந்த மரம்தான் அறியும்.

# பிறப்பு

அந்த மாமரத்தில்தான் எத்தனை கிளைகள், எத்தனை இலைகள், எத்தனை காய்கள்! அம் 'மா' பெரிய 'அம்மா' தான். பெருங் கிளைகள் அதன் குழந்தைகள். சிறு கிளைகளும், கிளையின் கிளைகளும் இலைகளும் பெரிய பேரன், சின்னப் பேரன், கொள்ளுப் பேரன்மார்களாகும். காய்களும் கனி களும், பெண்களும், பெரிய பேத்திகளும், சின்னப் பேத்திகளும், கொள்ளுப் பேத்திகளுமாகும்.

அது வாழ்க்கையில் மிகவும் அடிபட் டிருந்தது. இதுவரையில் எத்தனை பேர் எத்தனை கிளைகளை வெட்டிக்கொண்டு போயிருப்பார்கள்! உடலையே சீவுவதுபோல், அதன் பட்டையை உரித்துக் கொண்டு போயிருப்பார்கள்! எத்தனை பேர் அதன் பழங்களைப் பறித்துத் தின்றுவிட்டு, சப்பிய கொட்டைகளை அடிமரத்தின் மேலேயே லொட்டு லொட்டென அடித்துவிட்டுப் போயிருப் பார்கள்!

ஒரு வேளை அந்தக் குளமே, அந்த மரம் இரவில் வருஷக் கணக்காய் உதிர்த்த கண்ணீரின் தேக்கந்தானோ என்னவோ! சகல சுக துக்கங்களை யும் அநுபவித்துத் தேர்ந்து, வாழ்க்கையை ஒரு தினுசாய் முடிவுகட்டி, கட்டுச் சரிந்து பழுத்த சுமங்கலி போல் இருந்தது அம் 'மா.' அதற்கு நன்றாய்த் தெரியும், பிறக்கப் பிறக்க அழிவு, அதே மாதிரி அழிய அழியப் பிறப்பு உண்டு என்று. ஆகையால், அதன் இலைகளும் காய்களும் கல்லின் அடிபட்டோ, காலத்தின் மூப்பேறியோ உதிர உதிர, அது இன்னமும் புஷ்பித்துக் கொண்டுதா னிருந்தது. வாழ்க்கையில் அது கண்டது இது தான். அது உளுத்தோ, புரையோடியோ, வெட்டி விறகாயடுக்கும் வரையில் அப்படித்தான் செய்து கொண்டிருக்கும்.

ஆகையால், கனதூரத்திலிருந்து கேட்கும் தந்திநாதம் போல், காற்றில் மிதந்துவரும் மகரந்தப்

பொடிகளை அதன் பூக்கள் ஏற்க மறுக்கவில்லை. மகவே பெறுதிருந்தால் இளமை மாறுமென்று தங்களைத் தாங்களே ஏய்த்துக் கொள்ளும் மாந்தரைப் போல் இல்லை அவை.

ஆகவே அதன் பல பூக்களில் ஒரு பூ, வயிற்றில் ஒரு வித்தை வாங்கிக்கொண்டு, கரு தரித்துக் காயாயிற்று. நான்கு இலைகள், தங்களுடைய அருமைத் தங்கையைப் பையன்களின் கண்ணும் பறவைகளின் பார்வையும் படாமல் மூடிக் காத்தன. அவள் வெகு அழகாயிருந்தாள். நாளடைவில், மணவறையில் மணமகளின் கன்னங்கள் போல், அவள் முகம் சிவக்க ஆரம்பித்தது.

ராஜாளி தன் சிறகுகளை விரித்துக்கொண்டு பாறையினின்று எழுவது போல், காலை வேளையில் கதிரவன் தன் கிரணங்களை வீசிக்கொண்டு கிளம்புகையில், அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்து விளையாட்டாய் ஒரு கிரணத்தை அவள் மேல் பாய்ச்சுவான். அந்தச் சமயத்தில் அவள் ஒரே தங்க மயமாய்விடுவாள்.

வேளை முதிர முதிர, தன் பச்சையையும், தன் அண்ணன்மார் பச்சையையும் தோற்கடிக்கும் வானத்தின் முழு நீலத்தைக் கண்டு அவள் அதிசயிப்பாள்.

மாலை வேளையில், மேகங்கள் வானில் விதம் விதமாய்க் கூடுவதைக் கண்டு அவள் வியப்பாள்.

இரவின் பனியில் அவள் குளிப்பாள். நடுநிசியில் இலைகளைச் சலசலத்துக்கொண்டு மரங்கள் ஒன்றுடன் ஒன்று அளவளாவுவதை அவள் கவனிப்பாள். மின் மினிகள் செடிக்குச் செடி சென்று வம்படிப்பதையும் அவள் கண்டு களிப்பாள். காலாகாலத்தில் அவள் பக்குவமடைந்தாள்.

## வேட்கை

'என்ன? ஏது? எதனால்?' என்ற கேள்விக ளெல்லாம் உதிக்க ஆரம்பித்துவிட்டன.

ஒரு பையன் அவளுக்கு இரண்டு மூன்று கிளை களுக்கப்பாலுள்ள ஒரு காயைக் கல்லாலடித்து வீழ்த்தினன்.

ஏன்?

இரண்டு காகங்கள் ஒரு கிளையின்மேல் 'கா கா' என்று கத்திக்கொண்டு சிறகுகள் உதிரச் சண்டை யிட்டுக் கொண்டிருந்தன.

எதனால்?

ஒரு நாள் மரத்தடியில் இறக்கை யொடிந்து கீழே விழுந்த ஒரு காகத்தை, அதன் சிதைவு காணச் சகிக்காமல், பத்து காகங்கள் ஒன்று சேர்ந்து கொத்திக் கத்திக் கொண்டிருந்தன.

எதனால்?

பின்னும் ஒரு நாள், மரத்தடியில் உச்சி வேளை யில், இரண்டு பாம்புகள் ஒன்றுடன் ஒன்று யோகியின் யோகதண்டம் போல் பின்னிக்கொண்டு, தலையை மாத்திரம் எதிரெதிரே நிமிர்த்திக்கொண்டு, கண்களில் பச்சைக் குரூரம் கொதிக்க ஒன்றை யொன்று ஒருத்து நோக்கின.

ஏனோ?

திடீரென்று இன்னதென்று புரியாமல் எள்ளள வும் சகிக்க இயலாத ஒரு வேதனை அவளைத் தாக்கி யது. அதன் வேகத்தில் அவள் உடலே குலுங்கியது. உயிரே போய்விடும் போலிருந்தது; ஆனால் போக வில்லை. உள் உறுத்தல் மாத்திரம் தாங்க முடியவில்லை. இதுவரை பத்திரமா யிருந்துவிட்டு, இப்போது ஏதோ காலைவாரி விட்டாப்போலிருந் தது. இருந்த இடத்திலிருந்து, மரத்தின் ஆணி வேராகிய தன் பாட்டிக்குத் தந்தி யனுப்பினள். —பேசுவது வேறு பாஷையானாலும், மனிதனி

லிருந்து மரம் வரை மனத்தின் பாஷை ஒன்று தானே!

"மகளே! உனக்கு வேளை நெருங்கிவிட்டது. நான் என்ன செய்வேன்! உன் நாளை எண்ண வேண்டியதுதான். உன் பலிக்கு உகந்த பாத்திரம் வருவது உன் அதிருஷ்டம்" என்ற நம்பிக்கை யற்ற சேதியைப் பாட்டி பதிலாயனுப்பினாள்.

ஆகையால், தான் பலியாகும் நாளில் தன் வேதனை தீர்ந்துவிடும் என்று அந்தக் கனி நம்பிச் சகித்துக்கொண்டு காத்திருந்தாள்.

பலி

சிறு மேகங்கள் பருதியை விழுங்கின. பெரு மேகங்கள் சிறு மேகங்களை விழுங்கின. வானம் ஒரு சமயம் எல்லா மேகங்களையும் சிதற அடித்து விட்டு, நடுவெயிலில் தன் முழு நீலத்தை மின்னிக் கொண்டிருந்தது.

அந்த முழுநீலத்தினின்று ஒரு சிவப்புப் புள்ளி புறப்பட்டதை அம் மாங்கனி கவனித்தது. கவனிக் கையிலேயே, அதன் குடல் சிலிர்த்தது. மஞ்சள் ஏறிய சிவப்பு அதன்மேல் படர்ந்தது. ஆனாலும், அது அருண ஜாலமாயு மிருக்கலாம்.

கவணிலிருந்து எறிந்த கல்போல், அந்தச் செம்புள்ளி வான் முகட்டிலிருந்து கீழிறங்கி வருகையிலேயே பச்சை, மஞ்சள், வெள்ளை, ஊதா என்ற வர்ணங்கள் அதை ஊடுருவி, கடைசியில் ஐந்து வர்ணங்களும் தோய்ந்த பஞ்சவர்ணக் கிளியாய் மரத்தின்மேல் வந்து அமர்ந்தது.

கிளியின் கத்திபோன்ற நீண்ட வால் கிழிலை களில் இடித்தது. கொடுக்கரிவாளை யொத்த தன் மூக்கை இருமுறை தான் அமர்ந்த கிளையில் தீட்டி, தன்னைச் சுற்றி ஒருமுறை நோக்கியது.

காலம் வந்துவிட்டது. அது நுழையும் வேகத்தில் காற்று அடித்து, மாங்கனியை மூடிய இலைகள் ஆடின. அதன் மறைவு குலைந்தது. நடுநிசியில், 'நிக்ஹா'வின் முடிவில், வதுக்களினிடையில் பிடித்த திரை விலகி, மணமகனின் பார்வைக்கு மணமகள் வெளிப்படுவதுபோல் மாங்கனியாள், தன் மணமகனின் திருஷ்டியில் பட்டுவிட்டாள். உள்ளத்தின் கிளர்ச்சியில், இதயமே வெடித்துவிடும் போலிருந்தது.

கிளி 'க்றீச்' சென்று ஒருமுறை சத்தமிட்டு, இறக்கைகளை விரித்து ஒரு தாவுத் தாவி, மாங்கனியைத் தாங்கியிருந்த கிளைக்குப் பாய்ந்து அதன் அருகில் வந்தமர்ந்து, அதைப் பிடித்து இரு கால்களினிடையிலும் இடுக்கியது. பஞ்சுபோன்ற அதன் மார்பு, பழத்தை அழுத்தியது. தன் சகோதரர்களின் பரிவான கவனத்தைத் தவிர வேறேதும் உணராத அந்தப் பழத்துக்கு இந்தப் பிடியின் பயங்கர இன்பத்தைச் சகிக்கமுடியவில்லை. கிளியின் மூக்கு அதை ஒருமுறை இடந்தேடுவது போல் வருடியது. அச்சமயம் அதைச் சூழ்ந்த மகத்தான விபத்தில் மூழ்கி அதற்கு மூர்ச்சையே போட்டுவிடும் போலிருந்தது.

இதுதான் அந்தியென்று அது அறிந்தது என்றாலும், இந்த அந்தியேதான், அது பிறந்து வாழ்ந்து காத்திருந்த பலன் என்றும் கண்டது. இந்தப் பலனேதான் அதன் பயன்; இந்தப் பயனே தான் அதன் பதவியும்.

மாங்கனியின் மார்ப் பக்கத்தில், கிளியின் மூக்கு அரிவாள் போல் விழுந்து கிழித்தது. சாறும் சதையும், ரத்தமும் ஊன்நீரும்போல் அதன் உடலெல்லாம் வழிந்தது. அதன் இதயத்தையே தேடித் தோண்டுவது போல, அந்தக் கனியைக் கிளி குடைந் தெடுத்தது. மரணாவஸ்தையில் உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கையிலேயே, அதன் சத்தை அதன் காலன் உறிஞ்சிக் கொண்டிருக்கையிலேயே,

அதன் உள்ளமாகிய கொட்டையின் முகடு வெளி வருவதை அந்தக் கனி கண்டது. அந்தக் கொட்டையினின்று ஒரு வண்டு பிரண்டு ஓடியது. அதன் உள்ளத்தைக் குடைந்தெடுத்த பூச்சி அதுதான்.

அந்தக் கணத்திலேயே கனியின் ஆவி பிரிந்து போயிற்று. அதன் சவம் கிளையினின்று நழுவித் தரையில் விழுந்தது.

தனக்குப் பலியாகி விடுவதற்கென்றே காத்திருந்த பழத்தை யநுபவித்த பிறகு, கிளி மரத்தினின்றும் பறந்து சென்று வானில் புள்ளியாய் மறைந்து போயிற்று.



சாலையோரத்தில் மாமரத்தடியில் நடந்து வந்த மனிதன் குளக்கரையில் தோல் சறுக்கி விழுந்து மாரடைப்பில் இறந்தான்; அவன் இறந்த மர்மம் இதுதான்.

# கணுக்கள்

—ம்மாவின் மடி நிறையக் காய்; மடி பிதுங்கிற்று. ஆனாலும் அம்மாவுக்குத் திருப்தியில்லை. அவரைப் பந்தலின் இன்னொரு பக்கத்தில் ஏணியைத் திருப்பிப் போட்டாள்.

நாங்கள் பந்தலுக்கடியில் விளையாடிக்கொண்டிருந்தோம். நான், அம்பி, பாப்பா—

எங்கள் தலைக்கு மேல் காய் கொத்துக் கொத்தாய்த் தொங்கிற்று. அதுவும் இந்தத் தடவை சரியான காய்ப்பு! தினம் மாற்றி மாற்றி அவரைக்காய் கறி, அவரைக்கா புளிக்கூட்டு, அவரைக்காய் பொரித்த கூட்டு, அவரைக்காய்ப் பருப்பு உசலி—

அப்பா உள்ளேயிருந்து வந்தார், வழக்கப்படி வலது கையால் இடது விலாவைத் தடவிக்

கொண்டும், தன்னுடம்பைத் தானே பார்த்துக் கொண்டும்.

"ஏண்டி !—"

அம்மா அப்பொழுது தான் ஒரு காலை ஏணி யின் முதல் படியில் வைத்திருந்தாள்.

"என்ன ?"

"ரொம்ப இளைச்சுட்டேனடி ?"

அம்மா முகத்தில் புன்னகை யரும்பிற்று.

"நல்ல நாளும் கிழமையுமா இன்னிக்காவது உடம்பைப் பத்திப் பேசாமல் இருங்களேன். சந்தோஷமாயிருப்போம்."

அப்பாவுக்குத் தன்னுடம்பைப் பற்றி நினைப் பதிலும் பேசுவதிலும்தான் சந்தோஷம். ஏதாவது மருந்து சாப்பிட்டவண்ண மிருப்பார். கண்ணாடி யண்டை போய், கண்ணை இழுத்து இழுத்துப் பார்த்துக் கொள்வார். பக்கத்தில் நாங்கள் யாரா வது இருந்தால், எங்கள் கண்ணையும் இழுத்துப் பார்த்துவிட்டுக் கசப்புடன் உதட்டைப் பிதுக்கிக் கொள்வார்.

'ஊ—ஹூம் ! பிரயோசனமில்லை! வியாதியஸ் தனுக்குப் பிறந்தது வஸ்தாதாய்ப் பிறந்து விடுமா?' என்று தன்னையே கேட்டுக்கொள்வார்.

வியாதியைக் கொண்டாடுவதிலேயே அவருக்கு ஒரு சந்தோஷம். அத்தனைக் கத்தனை அம்மா அவருக்கு எதிரிடை. எதையுமே கொஞ்சமாய்ப் பண்ணவும் தெரியாது ; கொஞ்சமாய்க் கொடுக்கவும் தெரியாது ; சும்மாயிருக்கவும் தெரியாது. தோட்டத் தில் ஏதாவது கொத்திக் கிளறி, நட்டு, வளர்த்துப் பறித்துக் கொண்டிருப்பாள்.

இத்தனை நாளாயும் இப்பொழுது நினைக்கையி லும் என் அம்மாவின் தோட்டம் என் கண்முன் எழுகிறது. ஒரு மூலையில் ரோஜா—அப்பொழுது

தான் பதியம் போட்டது. அதை யொட்டினாற்போல் மல்லிகைச் செடி. கொஞ்சம் எட்டி, தோட்டத்துச் சுவரை யொட்டினாற்போல் மாட்டுக் கொட்டில். அதில் 'கல்யாணி' யென்று நாங்கள் ஆசையாய்ப் பேர் வைத்து அழைக்கும் எங்கள் பசு. சுத்த வெள்ளை. வலது தொடையில் மாத்திரம் உள்ளங்கை அகலத்துக்கு அழகாய் ஒரு கறுப்புத் திட்டு. அதற்கு எட்டியும் எட்டாத தூரத்தில் மூலையில் புத்தப் புதிதாய்க் காளைக் கன்றுக்குட்டி. அதற்கு என்ன பேர் வைப்பதென்று எங்களுக்குத் தெரியவில்லை. ஒரே துடி! துள்ளல்!

பந்தலின் மேல் படர்ந்த அவரையும் புடலும், நல்ல வெயிலில் தரைமேல் அழகான நிழற் கோலங்கள் வரைந்தன.

நாங்கள் எப்பொழுதும் அங்கேதான் விளையாடுவோம். வளர்ந்துகொண்டே வரும் இலைகளைத் தொட்டுப் பார்ப்போம். "தொடாதேங்கோ பிடைகளா! இதோ வந்துட்டேன்—" என்று அம்மா இரைவாள். நாங்கள் சிரிப்போம்.

ஒரு நாள் அம்மா அவரை இலை பஜ்ஜி பண்ணினாள். ருசியா யிருந்ததோ இல்லையோ, தமாஷா யிருந்தது. பஜ்ஜியைத் திறந்தால் நடுவில் இலை மாத்திரம் ஒட்டாமல் தளுக்காய், மினுக்காய், பச்சைப் பசேலென்று.........

இந்தப் பந்தல், இந்தக் கொட்டில்—எல்லாமே அம்மா, தன் கையால், ஒருவர் ஒத்தாசையுமில்லாமல், தானே அமைத்தாள். அவளுக்கே அதெல்லாம் பிடிக்கும்.

இப்பொழுதுகூட அம்மாவின் சிரித்த முகத்தையும் அவளே ஒரு பசுப் போல், கொழ கொழத்த சரீரத்துடன் தோட்டத்தின் நடுவில் பறித்த அவரைக்காய்கள் பிதுங்கும் மடியுடன் நிற்பதையும் நினைக்கையில் தொண்டையை என்னவோ பண்ணுகிறது. சாப்பிடும் சமயமாயிருந்தால் கையிலெடுத்த

கவளம் வாய்க்குச் செல்லாது அந்தரத்தில் நிற்கிறது.

அம்மா பெயர் அன்னபூரணி.

"சொல்லேண்டி!" என்றார் அப்பா, தன் விலாவை அன்புடன் தடவிக்கொண்டே.

"உங்களுக்கு உடம்பு ஒண்ணுமில்லே. போகி சொக்கப் பானையோடே உங்கள் நோயும் போச்சுன்னு நிம்மதியா யிருங்கோ."

"அம்மா, அம்மா! பொள்ளா-பொள்ளா—"

"சரிதாண்டா, போ!" — அம்பியின் அவசரமான அழைப்பைக்கூடச் சட்டை செய்யாமல், அம்மா அப்பாவுக்குத் தைரியம் கூறுவதில் முனைந்திருந்தாள்.

"நல்ல நாளும் கிழமையுமாப் பழசெல்லாம் வேண்டாம். ஓங்க மருந்து சீசாக்களுக்கும் பவுடர் பொட்டலங்களுக்கும் ஒரே முழுக்குப் போட்டுடுங்கோ. உடம்புக்கு ஒண்ணுமே யில்லேன்னு நெனச்சுண்டு வளைய வாங்கோ. ஒண்ணுமே யிருக்—"

"அம்மா, இதெப் பாரேண்டீ — பொள்ளாங்கா!"

"புடலங்காயாவது! காலமில்லாக் காலத்திலே—" என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டே அம்மா திரும்பினாள்.

அம்பி சிரித்துக்கொண்டே சுட்டிக் காண்பித்தான். அவன் கைக்கு ஒரு சாண் எட்ட, நீளமாய்ச் சுண்டு விரல் பருமனுக்கு ஒரு புடலங்காய் தொங்கிற்று. பச்சைப் பசேலென்று அம்பி பக்கமாய் வளைந்து, நிமிர்ந்து, முறுக்கிக்கொண்டு நெளிந்தது.

அம்மாவிடமிருந்து ஏதோ ஒரு விநோதமான சப்தம் கிளம்பி, அவள் மூச்சு கேவிக் கொண்டே

போயிற்று. எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனால் அம்மா மூஞ்சியும் அதிலே சுழலும் கண்ணும் பயமாயிருந்தன.

இன்னமும் அந்தத் தோற்றத்தை என்னால் மறக்க முடியவில்லை. நான் மனம் சஞ்சலித்திருக்கையிலோ, குடும்பத்தில் ஏதேனும் அசம்பவம் நேரவிருக்கையிலோ, முன் அறிகுறியாக அம்மா, என் கனவில், நாங்கள் அன்று அவளைக் கண்ட கோலத்தில் தோன்றி விடுகிறாள். இரு கைகளும் அடைத்த வாயும், வெளுத்த முகத்தில் பயங்கரத்தில் சுழலும் விழிகளும், மடிபிதுங்க அவரைக் காயுமாய் நிற்கிறாள்.

"என்னம்மா, என்னம்மா?" என்று நானும் பாப்பாவும் ஒன்றும் புரியாமல், கூடச் சேர்ந்து கத்துகிறோம். அப்பா, 'உஷ்' என்று எங்களைக் கையமர்த்தினார். பீதியால் நாங்கள் எல்லோரும் ஒண்ணாகி அந்தப் புடலங்காயையே பார்த்துக் கொண்டிருந்தோம். என்ன ஆச்சரியம்! அது தானே கழன்று, தரையில் விழுந்து, உயிரோடு 'சரசர' வென ஊர்ந்துபோய் எட்டியிருக்கும் வாழைக் கன்றுகளிடையில் மறைந்தது.

அம்மா ஒரு தாவுத் தாவி அம்பியை அப்படியே வாரிக்கொண்டாள். எங்கள் கல்யாணி கன்னுக்குட்டியை உடம்பெல்லாம் நக்கிக் கொடுத்து முகர்ந்து பார்ப்பதுபோல், அவள் மூர்க்கமாய், எதையோ தேடுவதுபோல் அம்பியை உடம்பெல்லாம் தடவிப் பார்த்தாள். அம்பிக்கு ஒரே வெட்கமாய்ப் போயிற்று.

"எங்கேயாவது பட்டுதாடா கண்ணே? சுப்ரமண்யா, என் வயத்துலே பாலே வார்த்தயா?" அதற்குள்ளே சமாசாரம் பக்கத்திலே பரவி விட்டது. என்னென்னவோ நினைத்துக்கொண்டு, ஒவ்வொருவராக வர ஆரம்பித்து விட்டார்கள். அம்மாவை உபசாரம் கேட்க ஆரம்பித்து விட்டார்கள்.

"என்னடீ அன்னபூரணி ?"

"என்னடா அம்பி ?"

அப்பா இதற்குள் சமாளித்துக்கொண்டு விட்டார். "ஏண்டா, அம்பிவால்! சங்கராந்தியின் சக்கரைப் பொங்கலையும் வடையையும் கெடுக்க இருந்தையே; எவ்வளவு சாமான் உன்னால் வீணாப் போயிருக்கும்! ஏண்டி, இவன் வாயைப் பிளந்திருந்தால், இவனுக்கு இப்போ புதைக்கிற வயசா, எரிக்கிற வயசா?"

—அம்மா சீறினாள். "போறுமே உங்கள் விகடம்!"

இந்தச் சந்தடியில் கன்றுக்குட்டி தும்பையறுத்துக்கொண்டுவிட்டது. நான் ஓடிப் போய் அதன் வாலைப் பிடித்துக்கொண்டு கல்யாணியிடம் போக வொட்டாது தடுக்க முயன்றேன். ஆனால் அதன் பலம் என்ன, என்பலம் என்ன! அப்பொழுது நான் குழந்தை யில்லையா ?

"விட்டேட்ரு, விட்டேட்ரு!" என்று அம்மா கத்தினாள். ஆனால் அவள் அநுமதி கொடுக்கு முன்னரே அது என்னை மீறிவிட்டது. தாவிக் குதித்துக்கொண்டு தாயின் மடியில் மோதின வேகத்தில் கல்யாணிக்கு உடம்பெல்லாம் அதிர்ந்தது. மடிகூடச் சுளுக்கிக் கொண்டிருக்கும்.

கல்யாணி தன் கன்றுக்குட்டியை நக்கிக் கொடுத்தது. அம்மா அதையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் கண்களில் ஜலம் தளும்பிக் கன்னத்தில் வழிந்தோடியது. என்ன தோன்றிற்றோ, எதிரில் நின்றுகொண்டிருந்த என்னைத் தன்னிடம் இழுத்து அணைத்துக் கொண்டாள். நான் திமிறப் பார்த்தேன். முடியவில்லை.

எண்ணங்கள் போகிறபடி எழுதிக் கொண்டே போனால் எல்லையே இல்லை.

## 2

அம்மா என்னைக் கரும்பு வாங்கிவர அனுப்பினாள்.

சந்தைக்கும் வீட்டுக்கும் மூன்று மைலாவது இருக்கும்.

சாலை வழியெல்லாம் கரும்பைப்பற்றி யோசனை பண்ணிக்கொண்டே போனேன். இப்பொழுதெல்லாமே எனக்கு யோசனைகளெல்லாம் புதிது புதிதாய் வந்தன. அப்போதைவிட இப்போது எனக்கு வயது அதிகமில்லையா?

'கரும்புக்கு இத்தனை கணுக்கள் இருக்கின்றனவே, எல்லாமா தித்திக்கப் போகின்றன? நுனியையும் அடியையும் விட்டு இடைக் கணுக்களில் தான் சொல்லுகிறேன். இந்த இடைக் கணுக்களுள் கூட ஏதோ ஒரு கணுவுள், எங்கோ ஒரு இடத்தில், முழுக் கரும்பின் இறக்கிய இனிப்பெல்லாம் ஒளிந்து கொண்டிருக்கிறது, உடலில் உயிருக்கே காரணமாய் இதயம் இருப்பதுபோல்.

'ஆனால் அந்தக் கணுவை, அதிலும் அந்த இடத்தைக் கண்டுபிடிப்பது எப்படி? அது யாருக்குக் கிட்டும்? கரும்பின் இதயம்; இதயத்தின் கரும்பு!

'சில சமயங்களில் வார்த்தையோடு வார்த்தை சேர்ந்தால், அல்லது மாற்றிப் போட்டால், புதுப்புது அர்த்தங்கள் எப்படி எப்படிப் பிறக்கின்றன! அப்படியும் தம்முள் இன்னமும் ஏதோ ரகஸ்யத்தை அடக்கிக்கொண்டு......உயிரோடு உயிர்கூடி உயிர் பிறப்பதுபோல்—அப்படியானால் வார்த்தைகளுக்கே உயிர் உண்டோன்னோ?'

—இப்படியெல்லாம் எண்ண எனக்குப் பிடிக்கின்றது.

இப்படியெல்லாம் ஏன் எனக்கு எண்ணங்கள் ஓடுகின்றன? பொங்கல் என்று? பொங்கலின்

வெயிலுக்கே மனோகரமானதொரு மங்கல்—ஜாதி நாயனத்துடன் ஒட்டி ஒழுகும் ஒத்துப்போல. அதன் மருட்சியில் வழியில் துள்ளி ஓடும் ஆட்டுக்குட்டி மான்குட்டியாய்த் தோன்றுகிறது. எவனோ ஒருவன் எச்சில் துப்பிக்கொண்டு போகிறான்; முத்தைத் துப்பினாற்போல்தானிருக்கிறது! ஒரே குடும்பத்தின் பல ஆட்கள் மாதிரி, இன்று மாத்திரம் எல்லோரும் ஏதோ ஒரே காரியமாய்ப் போகிறார்கள், வருகிறார்கள்.

**சா**லையில் ஒரு மரத்தின் பின்னால் ஒருத்தி இடுப்புப் புடைவையைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தாள். என் பார்வை அவள்மேல் விழுந்த சமயம், அவள் மேலாக்கை மார்மேல் விசிறிப் போட்டுக்கொள்ளும் சமயம். ஆனால் இந்தக் காலைக் காற்று அதற்கு விடுகிறதா? எங்கிருந்தோ ஒரு ஊதல் கிளம்பி, அவள் கையிலிருந்து புடைவைத் தலைப்பைப் பிடுங்கிற்று. புடைவை பாய்மரத் துணிபோல் உப்பிப் 'படபட' வென அடித்துக் கொண்டது.

அவள் என்னைப் பார்த்தாள். வெட்கம் பிடுங்கி, முகம் கவிழ்ந்தது. ஆண் பார்வையின் பனி பொறுக்காது, உடலொடுங்கி, இரு கைகளாலும் மார்பைப் போர்த்திக்கொண்டாள். கறுப்பானாலும், குறுகுறுப்பான முகத்தில், ரத்தமும் வெட்கச் சிரிப்பும் குழம்பின.

அந்நிலையில் அவள் விண்ணின்று சிறகின் மேலிறங்கி வந்த கந்தர்வை போலிருந்தாள்! என் எண்ணங்கள் சுரக்கும் தேனில் நான் மிதந்து கொண்டு சென்றேன்.

சாலையோரமாய் மரத்தடியில் ஒருத்தி பனங் கிழங்கு, வேர்க்கடலை, கார்மாங்காய் கூறுகட்டி உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கலில் அவள் புருஷன் உட்கார்ந்திருந்தான். மரத்தின்மேல் ஒரு கரும்புக்

கட்டைச் சார்த்திவிட்டு, அதனின்று அவன்மேல் தழைந்த தழைக்கடியில், தாடியை ஒரு கையால் கோதிக்கொண்டு அவன் வீற்றிருந்தது ஈசுவரன் மாதிரி யிருந்தது—கவரப்பட்டு நான் நின்றேன்.

'கருகரு'வென்று பட்டுப்போல் பளபளத்துக் கொண்டு, தாடி மார்புக்கும் தழைந்திருந்தது. தலை மயிரையும் வெட்டவில்லை. கூந்தல் மேனுேக்கிச் சிவப்பெற்று, பிடரியில் அழகாய்க் குஞ்சம் குஞ்ச மாய்ச் சுருண்டு தொங்கிற்று. யோக வேஷ்டியாய்ப் போர்த்தி யிருந்த மேல்துணி இடது புஜத்தையும் கையையும் மறைத்தது. கரும்புத் தழைக்கடியில் யோக புருஷன் மாதிரி.........

நான் அவன் தாடியைக் கவனிக்கிறேன் என்று அவனுக்குத் தெரிந்துவிட்டது. இடது கண்ணின் இமைகளை முறுக்கியடித்துப் புன்னகை புரிந்தான்.

"என்ன தம்பி, கரும்பு வாங்கலியா?"

கரும்பை நோட்டம் பார்ப்பதில் பெரும் புலி போல் நான் முகத்தைத் திருப்பி வைத்துக்கொண்டு, "என்ன விலை?" என்றேன்.

"சரிதான், அப்புறம் வாங்கலாம்; இப்படிக் குந்தேன். அவசரமா? எப்படி நம்ம தாடி? பலே ஜோரில்லே?"

என்னையறியாமல் என் கன்னங்களை ஒருமுறை தடவிக் கொண்டேன். 'இப்போ இல்லாவிட்டாலும் போகிறது; வளருகிற சமயமாவது இவன் மாதிரி எனக்கு வளருமோ?'

அதற்குள் அவள் இடைமறித்து, "தாடி அவரு தில்லே, ஆண்டவருது" என்ருள்.

"ஆரம்பிச்சுட்டியா? சம்மனில்லாமே ஆசரா யிட்டியா?"

அவள் கோபத்துடன் விரலையாட்டிக்கொண்டு, "இதோ பாரு, சொல்றேன்; ரெண்டு வருசமா

ஏமாத்திட்டுவரே. இந்தக் கிருத்திகைக்கி முடி குடுக்கலே பாத்துக்கோ! நான் அப்பறம் நொம்பக் கெட்டவளா யிருப்பேன்; ஆமா, இப்பவே சொல் லிட்டேன்!" என்றாள்.

'ஓஹ்ஹொஹோஹ்ஹோ!' என்று ஏளனமாகக் கொக்கரித்துக்கொண்டே, கூறு கட்டியிருந்த மாங்காய்களில் ஒன்றை யெடுத்துத் தொடையில் துடைத்துவிட்டுக் கடிக்க ஆரம்பித்தான்.

"வாய்ஸ்தவம்தான்! மயிரென்னமோ ஆண்ட வனுக்குத்தான் வளத்தேன். வளந்தப்பறம் மனசு வல்லியே!"

"சாமிக்கு வெள்ளிப்பாடம் வேண்டிக்கிட் டேனே, அதுக்குத் துட்டு உன்னைக் கேட்டேனா? கேட்டாத்தான் வரப் போவுதா? முடிதானே குடுங்கறேன். இதுக்கு மேலே பாக்கறே, கீழே பாக்கறே, இல்லாத கதையெல்லாம் அளக்கறே!"

"எதுக்கிந்த வேண்டுதல் எல்லாம்?" என்று கேட்டேன்.

"சொல்லேன்; தம்பி கேக்குதே!"

அவன் வாயிலிருந்து பேச்சு வரவில்லை. கரடி போன்ற புருவங்கள்தாம் உள்வலியில் நெரிந்தன.

திடீரென அவன் மேல்துணியை அவள் பிடித்து இழுத்துவிட்டாள். எனக்குத் 'திக்' கெனத் தூக்கி வாரிப்போட்டது. அவன் இடது கையில் முழங்கை வரை காணோம். நொண்டிகள் எவ்வளவோ பார்த் திருக்கிறோம். ஆனால் அவளுடைய திடீர்ச் செய்கை யாலும், நான் அதற்குச் சற்றேனும் தயாராயில்லாத தாலும் அவன் முடமையில் ஒரு பயங்கரம் ஏற் பட்டது. என் மனத்தின் துணுக்கு உடலையும் தாக்கிற்று.

அவன் அவளைப் பார்த்த பார்வையில் அவ ளுக்கு என்னவோபோல் ஆயிற்று. நான் அங்கு இல்லாவிடில் அவளை அவன் கை மிஞ்சியிருப்பான்.

எல்லாம் சில விநாடிகள்தாம். சமாளித்துக்கொண்டு விட்டான். சிரித்தான். குஸ்திக்காரன் சௌரியம் பழகுவதுபோல் நொண்டித்தோளை நல்ல கையால் தட்டிக் கொண்டான்.

"என்னு தம்பி, இந்தக் கையெப்பத்தி ஓனக்கென்ன தெரியும்? இது செஞ்சிருக்கற வேலையும் ஒடைச்சிருக்கற மூஞ்சியும் எண்ண முடியும்னு நெனக்கிறே? என்நாளுமே தம்பி, என்னூரிலே நான் கில்லேடி! அப்பத்தி நெஞ்சுக் கனத்தை இப்பொ நெனச்சுப் பாத்தா பயங்காணுது. கோயில் உச்சவத்துலே எட்டு மூலைக் கோலமாப் பந்தங்கட்டி, எட்டு மூலையுங் கொளுத்தி, மானத்துலே ஒரு பனைமர உசரம் தூக்கி எறிஞ்சு கீளே வரப்போ நடுவுலே புடிச்சா பாத்தவங்களுக்கு ஒரு மூச்சு தப்பி வருந் தம்பி!"

குடிவெறி கண்டவன்போல் பேசினான். பேச்சு கொழகொழத்தது.

எனக்கு அதிசயமா யிருந்தது. "கை எப்பொழுதாவது பற்றிக்கொண்டதா?" என்று கேட்டேன். அவன் முகம் விழுந்தது.

"அப்படி யிருந்தாத்தான் சமாதானமாயிருக்குமே!"

வார்த்தைகளுக்குக் காத்துக் கொண்டிருந்தேன். அவன் மாங்கொட்டையை எறிந்துவிட்டு அருகில் கிடந்த ஒரு சுள்ளியை எடுத்துத் தரையில் கோடு வரைய ஆரம்பித்தான்.

"படுபாவி இவளாலெதான் கைபோச்சு!"

"தெரிஞ்சவங்க தெரியாதவங்க எல்லாரிட்டியும் திட்டித் திட்டி இன்னும் ஆத்திரம் தீரல்லியா? இன்னும் எத்தினி நாளைக்கி இப்படி?"

அவள் குரலில் அலுப்புத் தட்டிற்று. ஒரு சிறு அழுகை நடுங்கிற்று.

"எப்படித் தீருமெ, பட்டி மவளே! என் கை போனது பெரிசில்லே, அப்புறம் உன் வீட்டுலே என்னை மேலும் பண்ணைப் பாத்தாங்களே, அது ஆறுமா?"

வரவர வாக்குவாதம் அந்தரங்கமாகிக் கொண்டிருந்ததால் நழுவப் பார்த்தேன். ஆனால் அவள் என்னைச் சாட்சிக்கு அழைத்து விட்டாள்.

"இதைக் கேளு தம்பி! என் கூடப் பொறந்தாட்டியா சொல்றேன்—"

"என்ன மச்சான்! சவிக்கமா? எப்ப வந்தே? உன் அக்கா சொல்லுதக் கேளு!" என்று அவன் கேலி பண்ணினான்.

"அது கெடக்கு! இதெக் கேளு தம்பி; எண்ணக்கிமே அது எடக்குத்தான்."

"அது மாதிரி யெல்லாம் பேசாதே, பொம்புள்ளே! நான் சொல்றதெ அது கேக்கட்டும். இவளுக்கும் எனக்கும் ரொம்ப நாளத்திய முடி. என்ன, தெரிஞ்சுதா? ஆனா இவ வீட்டிலே நெனச்ச மாதிரி நான் உருவாவலே. இந்த நாட்டுப்புறம் நெனேச்சுது, நான் முழுக்கக் கலப்பை புடிச்சு, வேளாவேளைக்குக் கூழைக் குடிச்சுட்டு மாடத்துப் புள்ளையாருக்குப் பூசை பண்ணிக்கிட்டுப் படிஞ்ச மாடா காலத்தைத் தள்ளுவேனின்னு. ஆனா நான் ஒத்தருக்கு அடங்கறவன் இல்லே. சின்ன வயசுலேயே வீட்டுலே ஏதோ கோவம் பண்ணிக்கிட்டு ஊரைவிட்டு ஓடிப் பூட்டேன். நான் நொம்ப இடம் சுத்தியிருக்கிறேன் தம்பி, நொம்ப இடம்! ஒரு ஊரிலே ஒரு குளம் பார்த்தேன் பாரு—"

"சரிதான், கதை பண்ணுமே கதைக்குவா—"

"நாலு வருசம் களிச்சுத் திரும்பி வந்தேன். நானும் மாறிப் போயிட்டேன்னு வச்சுக்க; நொம்ப விசயம் கத்துக்கிட்டிருந்தேன். ஆனா இவளும் நொம்ப வளந்துட்டா! பேச்சு வார்த்தை

யில்லையே தப்பி, அசப்புலே ஒத்தர் வளியிலே ஒத்தர் குறுக்கே போறு, அப்போ நான் துளிர்மீசை மேலே கையைப் போட்டுக்கிட்டு நின்னு இவ அப்படியே கையைத் தொங்கப் போட்டுக்கிட்டு நிப்பா - உண்டாயில்லையா நீயே, கேளு—!''

"நீ சுத்த வெக்கங்கெட்டவனாப் போயிட்டே!''

" அம்பலமானப்பறம் வெக்கமென்ன, வெக்கம்? நானும் ஊர் வந்தப்பறம் இவளைக் கட்டற வரைக்கும் கட்டாய்த்தானிருக்கணும்னு ஒரு இடத்திலே அமர்ந்து வேலை பாத்துக்கிட்டிருந்தேன். வேலையிலே சோடையில்லே தம்பி நான்—நம்மகிட்ட எல்லா ரும் பிச்சை வாங்கணும்! ''

"சரிதான்! உன் மேலே பூப்போட்டு நீ இன்னும் ஓயலியா?''

அவன் இடைமறித்தலைக் கவனிக்காமல் மேலே சொல்லிக்கொண்டு போனான் :

"பொங்கல் நாள் வந்துரிச்சு; கரும்பு நாள் வந்துரிச்சு; ஊர்க் கில்லேலடிங்கள்ளாம் பையிலே கையைவிட்டுப் பணத்தை ஜல ஜலத்துக்கிட்டு உலாத்தறானுங்க. மூலைக்கி மூலை பந்தயம் வெச்சுக் கரும்பு வெட்டியாவுது.

"நானும் ஒரு நாள் மூலையிலே வேடிக்கை பாத்துக்கிட்டு நின்னேன். அப்போ இவ கை இடுப்பிலே கூடையை வச்சுக்கிட்டு வேடிக்கை பாக்க நின்னு. இவளைப் பாத்ததும் நானும் பந்த யத்துலே கலந்துக்கிட்டேன். கையை நீட்டி மணிக் கட்டுமேலே கருப்பங் கணுவை வெச்சுக் கத்தியெக் கூட ஓங்கிட்டேன். அப்போ என் போறுக்காலம் இவளை லேசா ஓரக்கண்ணாலே பாத்தேன். இவ எண்ணத்துலே இப்போ நான் எவ்வளவு பெரிசா யிருக்கேனின்னு பாக்கணும்னுதான் வச்சுக்க யேன். எல்லாருக்கும் இருக்கற எண்ணம் தானே! அப்போ இந்த சூனியக்காரி பல்லுலே விரலை

வெச்சுக் கடிச்சுக்கிட்டு சிரிச்சா! கைமேலே கத்தி யிறங்கிட்டுது!''

நான் கண்ணை இறுக மூடிக்கொண்டு காதைப் பொத்திக் கொண்டேன். என் உடல் குலுங்கிற்று. அவன் சிரித்தான்.

"எனக்கு எப்படியிருக்கும்னு கண்டுக்கோ தம்பி! மூணுமாசம் ஆஸ்பத்திரியிலே கிடந்தேன். கத்தி துருப்பிடிச்ச கத்தி. கையிலே விஷ வெச்சுட் டுது. புரை முழங்கை வரைக்கும் கடகடன்னு ஓடிப் போச்சு. முழங்கைக்குக் கீழே வெட்டி யெடுத்துட் டாங்க. கைபோயிரிச்சு; கையோடு கண்ணாலத் துக்குச் சேத்து வெச்ச பணமும் போயிரிச்சு! இன்னம் புண்ணுகூட ஆறல்லே. ஆஸ்பத்திரியி லேருந்து நான்தான் மிச்சமாத் திரும்பி வந்தேன்.

"இதுக்குள்ளே, இவ வீட்டுலே என்னென் னவோ வேலைத்தனமெல்லாம் நடந்துகிட்டிருந்துது. எனக்குத் தெரியாமே போச்சு. இவ அப்பன்காரக் கிளவன் ரெண்டு தடவை ஆஸ்பத்திரியிலே என்னைப் பாக்க வந்திருந்தான். வண்டயம் மாதிரி திருட்டு முளி முளிச்சுட்டு, வாயைத் தறக்காமெ போயிட்டான். நான் என்னத்தைக் கண்டேன்? திரும்பி வந்தாத்தானே தெரியுது, இவுங்க ஏற்பாட் டின் துருசெல்லாம்!

"நான் ஆனா சும்மா விடல்லே! நியாயமாத்தான் நடந்துகிட்டேன். இவ வீட்டுக்குப் போனேன். கிளவன் திண்ணையிலே குந்திக்கிட்டிருந்தான். பொக்கை வாயைக் குதப்பிக்கிட்டு. என்னைப் பாத் தான். மூஞ்சி வெளுத்துப் போயிரிச்சு. நான் அதைக் கண்டுக்காமெ சொன்னேன்: 'மாமா உன் மவ எனக்குன்றது ரொம்ப நாளைய விசயம். நீ சொல்லு தவறாமே கட்டிக் கொடுத்துடு; பசி யெடுக்குது, ஒருவேளைக் கஞ்சி ஊத்துன்னு உன் படியேறி வந்தாக் கேளு. மானம் போவாமெ உன் மவளைக் காப்பாத்தறது என் பொறுப்பு. ஒரு கை

போச்சுன்னு பாக்காதே ; மன்னனுக்கு இன்னும் ஒரு கை இருக்குது !'

"அவன் பதிலே பேசாமெ என் கைக் கட்டையே பாத்துக்கிட்டிருந்தான். 'நாளைக்குப் பஞ்சாயித்திலே பேசலா'மின்னுன்.

"'பஞ்சாயித்தாவது !' எனக்குக் கெட்ட ரோஷம் வந்துட்டுது. யாருக்கு யாரு பஞ்சாயித்து? நம்ப மாட்டின் கணுத்திலே தும்பில்லேன்னு, நடுவுலே எவனே வந்து ஓட்டிக்கிட்டுப் போறது நியாயம்னு சொல்றதுதானே பஞ்சாயித்து! அப்போ நான் ஒண்ணும் பேசிக்கிடலே: பேசாமே திரும்பிட்டேன்.

"மறுநாள் பஞ்சாயித்து இவுங்க வீட்டுத் திண்ணையிலேதான் கூடிச்சு. எல்லாரும், என் கை நல்லாயிருந்த நாளிலே, நான் முளிச்சுப் பாத்தேன்னு, கனவுலேகூடப் பேத்தற பசங்க! என் மேலே பஞ்சாயித்துக் கூடியிருக்காங்க. ஹ—!

"நேரா வந்தேன். 'மாமா, உள்ளிருந்து உன் மவளைக் கூப்பிடு'ன்னேன்.

"'இது என்னடா இல்லாத வளக்கம் பொல்லாத வளக்கம்—!'ன்னுன்.

" 'டா வெல்லாம் ஒனக்கு இனிமே பொறக்கப் போற பேரப் பையனுக்கு வெச்சுக்க. ஒன் அவசரத்துலே சொன்ன பேச்சைத்தான் விட்டே ; மரியாதையையும் விட்டுடாதே; நீ பஞ்சாயித்து வெச்சே—வெச்சபடி நடக்கட்டும். உன் மவளைக் கூப்பிடு! அவ வாய்ப்படத் தெரிஞ்சுகிட்டுப் போயிடுறேன்.' —இப்படிச் சொல்லிக்கிட்டே 'கிர்'ரென்னு உள்ளே போனேன். இவ தண்ணிமுடாவைத் தேச்சுக்கிட்டிருந்தா. ஈரக் கையோடெ 'கர கர'ன்னு இஸ்துகிட்டு வெளிலே வந்தேன். அவ் அப்பன் மேலே தள்ளினேன்.

"'ஐயோ பாவி'ன்னு கிளவன் லபலபன்னு அடிச்சுகிட்டான். 'ஏ கிளவா! நாலுபேர் நடுவுலே உன் பொண்ணைத்தொட்டுட்டேன். இனிமே இவளை எவன் கட்ருன்னு பாத்திடறேன்'னு சவால் அடிச்சுட்டுக் கிளம்பினேன்.

"ஊரெல்லாம் பத்திக்கிச்சு, கன்னிப்பொண்ணைக் கையைப் புடிச்சு இஸ்துட்டான்னு. என்னை ஆளை வெச்சு அடிக்கிறதுக்குக்கூடக் கிளவன் ஏற்பாடு பண்ணிட்டான். எனக்குத் தெரிஞ்சு போச்சு. நேரா போனேன். 'இதா பாரு, நான் செத்தாலும் சாவ றேன்! ஆறு குண்ணுத்தம்மன் கோயிலுக்குப் போறதுக்கு முன்னாலே, உன் பேரையும் உன் பொண்ணு பேரையும் சந்திலே இளுத்து, சாக்கடை யிலே பொரட்டிட்டுப் பூடுவேன். நான் கதை கட்டிவிட் டேன்னு, இந்த விசயத்துலே ஊர் என்னை நம்புமா, உன்னை நம்புமா, ரோசனை பண்ணு! நான் உசிரோடு இருந்தாலாவது உன் மவ களுத்துலே தூலாடும். இல்லா, நான் கட்டிட்டுப் போற கெட்ட பேர்தான் நிக்கும். உன் பொண்ணு கையைப் புடிச்சு இஸ்துட் டேன்; கியாபகம் வச்சுக்க'ன்னேன்.

"கிளவன் இடிஞ்சுட்டான், புத்து மண்ணுட்டம்! 'என் பொண்ணைக்கட்டு கட்டு'ன்னு காலுலே விளாத கொறையாக் கெஞ்சினான். அண்ணயப் பத்தாநாள் இவளை நான் கட்டினேன்."

அங்கு ஒரு அணிலைத் துரத்திக்கொண்டு ஒரு பூனை ஓடி வந்தது. அணில் மரத்தின் மீது ஏறிக் கொண்டு பூனையைச் சிரித்தது.

"எதுக்கு சொல்ல வந்தேன்னு, நான் தேசம் சுத்தினப்போ இவளைவிட ரம்பையெல்லாம் பாத் திருந்தேன். நம்மை ஏமாத்தணும்னு எண்ணம் வெக்கறப்போதான் எண்ணம் அப்படியே திரிஞ்சு பூடுது-" மூடியைத் திருகுவது போல் கையைத் திருகிக் கொண்டு, "திரிஞ்சு பூடுது" என்றான்.

"அதுக்காவ என் அப்பன் மேலே வெச்ச கோவத்தை என் மேலே இன்னமும் ஆண்டுக்கிட்டிருக்கையாக்கும்! நீயே சொல்லு, தம்பி. கட்டிக் கொடுக்கற வரைக்கும் பெத்தவங்களுக்கு அடங்கி நடக்கணும். அப்பறம் கட்டிக் கொடுத்த இடத்துக்கு விசுவாச காதகம் பண்ணமெ இருக்கணும். என்ன நான் சொல்றது?"

"என்னத்தைச் சொல்றது! நீ இண்ணைக்கித் தோலைச் செருப்பாத்தான் தச்சுப் போடேன். அதுனாலே நேத்திக்குச் செஞ்சது மறந்து பூடுமா?"

"மறந்துதான் ஆவணும். மறந்தாத்தான் இருக்கமுடியும்."

அவன் தனக்கே முணுமுணுக்க ஆரம்பித்தான்: "காரியம் மாத்திரம் கடப்பாறையாச் செய்துடுவாங்க. அப்பறம் நம்மை மறந்துடும்னு சாஸ்த்ரம் படிப்பாங்க."

நான் நழுவப் பார்த்தேன். இடம் இம்சையாயிருந்தது.

"என்ன தம்பி, கரும்பு வாங்கலியா? கதை கேட்டியே!"

இரண்டு கரும்புகள் வாங்கிக் கொண்டு போனேன். "ஒரே அடியா உப்புக் கரிக்கறதே! காசைக் கரியாக்கினியா?" என்று அம்மா இரைந்தாள்.

பிறர் இழைக்கும் பெருந் தவறுகளில் அம்மா காண்பிக்கும் பெருந்தன்மை பிரமிக்கத் தக்கதாயிருக்கிறது; சில சமயங்களில் சின்ன விஷயங்களில் கூட அவள் பொறுமை இழப்பது அதைவிட ஆச்சரியமாயிருக்கிறது.

ஒரே கணுவுள் முழுத் தித்திப்பையும் தேடுபவர் பாடே உப்புக் கரும்புதானே?

## 3

தோட்டத்துக் கோடியிலிருக்கும் வாழை மரத்தை வெட்டிச் சாய்ப்பதற்கு லக்ஷ்மி முத்தனிடம் ஏற்பாடு செய்து கொண்டிருந்தாள். நான் வாசலறையில் அப்போதுதான் வந்திருந்த தபால் கட்டைப் பிரித்துக் கொண்டிருந்தேன்.

தோட்டத்து மேலண்டைக் கோடியில் பழைய நாட்களின் அடையாளமாய் அவ்வொரு வாழை தான் தனியாய் நின்று கொண்டிருந்தது. லக்ஷ்மி அதன் மேலேயும் கண் வைத்து விட்டாள். அவளுக்கு எல்லாம் துடைத்துப் பெருக்கியிருக்க வேண்டும். அம்மாவுக்கும் இவளுக்கும் எவ்வளவு வித்தியாசம்!

மறுபடியும் அம்பி, பாப்பா, நான் எல்லோரும் சேர்ந்து விளையாடின தோட்டமேதான். அம்மா, காயும் பூவும் மரமுமாய் வைத்துப் பெருக்கிய தோட்டந்தான். மறுபடியும் சங்கராந்திதான்!

ஆனால் இப்போது அம்மாயில்லை; அப்பாயில்லை, தம்பியில்லை; பாப்பா இல்லை.

அம்பிக்குப் படிக்க வரவில்லை. அவன் வியாபாரத்திலிறங்கிக் கொள்ளை கொள்ளையாகச் சம்பாதித்தான். எங்கேயோ சொந்தவீடு கட்டிக்கொண்டு, மோட்டார், ரிக்ஷா எல்லாம் வைத்துக்கொண்டு வியாபாரமே நோக்கமாய், செல்வமே கொள்கையாய் வாழ்ந்து வந்தான்.

என்றோ ஒரு கடிதம் அவனிடமிருந்து வரும், 'நான் இருக்கிறேன்; நீ இன்னுமா இருந்துகொண்டிருக்கிறாய்?' என்ற தோரணையில்.

எந்த அம்பிமேல் அவ்வளவு உயிர் வைத்திருந்தாளோ, அவனிடந்தான் அம்மா போய்ப் படாத பாடெல்லாம் பட்டுச் சகித்துக்கொண்டு, அவனிடமே உயிரையும் விட்டுவிட்டாள். நான்

போனது முகமுழிப்புக் காணவும், எங்களைப் பெற்ற வயிற்றில் நெருப்பைக் கொட்டவுந்தான்.

அம்பி அவளை அடித்ததாய்க்கூடக் கேள்வி. அவள் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில், அவள் இலையில் துப்பினதாய்க் கேள்வி. போகிறான், பாவி! அவனிடமிருப்பதால் எனக்கு என்னமோ மிச்சம் பிடிப்பதாய் அவள் எண்ணம். "எனக்கென்னடா குழந்தை? எங்கிருந்தாலும் ஒரு கவளமும் ஒரு சுத்தத் துணியுந்தானேடா? நீ சம்சாரி ஆயிட்டே. நான் அசலிடமா போறேன்? அங்கேயும் என் பிள்ளைதான். கொஞ்சம் முன்கோபி. அவ்வளவு தானே?" என்பாள்.

அம்மாவால் எப்படியும் வேறெப்படியாயுமிருக்க முடியாது.

அம்மாவுக்கு முன்னால், நாங்கள் தலையெடுக்கு முன்னாலேயே அப்பா போய்விட்டார்.

பாப்பா இப்பொழுது 'பீப்பா'வாகி, கலியாண மானதும், மாமனார் வீட்டுடன் ஐக்கியமாகி வட கோடியில் எங்கோ போலீஸில் வேலை பார்த்து வந்தான். அங்கிருந்து வந்தவர் ஒருவர் சொன்னார், பயல் கருடாழ்வான் மாதிரி கைநீட்டி வாங்கும் லஞ்சத்திற்கு அவனுக்கு இரு கைகளுமே போத வில்லையென்று.

அவனிடமிருந்து கடிதமே கிடையாது.

அப்புறம் நான்தானிருக்கிறேன். எல்லோரையும் விட நிறையப் படித்தேன். குடும்பத்திலேயே நான் தான் சூடிகையென்று சுற்றியிருந்தவர்கள் சொன்னார்கள்.

நானும் எங்கெங்கோ சுற்றினேன். ஆனால் கடைசியில் இப்பொழுது கிராமத்தில் வாத்தியார் என்கிற பட்டத்துடன், அவரவர் வீட்டுக் குழந்தை களை ஒரு கொட்டகையில் மடக்கி மேய்த்துக் கொண்டிருக்கிறேன்.

என் வேலைக்குக் கூலியாய் வாசல் தூணில் ஒரு உண்டி கட்டியிருக்கும். அமாவாசைக்கு அமாவாசை திறந்து அதிலிருப்பதைத் துழாவி யெடுத்துக்கொள்ளலாம். இப்படித்தான் என் காலந் தள்ளிக் கொண்டிருக்கிறது. எனக்கும் இரண்டு குழந்தைகளிருக்கின்றன. வெளியில் விளையாடப் போயிருக்கிறார்கள்.

போதும் போதாததற்குச் சென்ற இரண்டு வருடங்களாக நான் கிராமத்துப் போஸ்டு மாஸ்டர். ஆனால் என் மாதச் சம்பளம் ஆறு ரூபாயை நான் முழுசாய்க் கண்டதில்லை என்பதை நினைக்கச் சிரிப்பாயிருக்கிறது. ஸ்டாம்புப் பணத்திலிருந்து அவ்வப் போது கறிகாய்க்கும் கைச்செலவுக்கும் கையாண்ட பணத்தை இட்டு நிரப்புவதற்கே சரியாயிருக்கும்.

அப்படியும் எங்கெங்கோ சுற்றியும், அத்தனை நாட்கள் கடந்தும், எந்தையும் என் தாயும் எங்களைப் பெற்று வளர்த்துப் புழங்கிய இதே வீட்டில் நான் மறுபடியும் இப்படி உட்கார்ந்து கொண்டு இன்னமும் இதையெல்லாம் யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன் என்பதை நினைக்கை யில், அதில் ஒரு ஆச்சரிய இன்பம் என்னைப் பரவசப்படுத்துகிறது. மனம் புரியாததொரு தெளிவை யடைந்திருக்கிறது.

நான் காலத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிறேனா, அல்லது இத்தனை நாட்களாய்க்காலம்தான் என்னைச் சுற்றுகிறதா எனும் கேள்வி தானாகவே என்னுள் எழுகிறது. அதற்குப் பதில் கண்டுபிடிக்கும் முயற்சியில் அக்கேள்வியைச் சுற்றிச் சுற்றிவர, தெரு வில் போய்க் கொண்டிருக்கையில் நான் முன்பின் அறியாத ரூபவதியான ஒருஅன்னிய ஸ்திரீ என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்டே போனால் எனக்கு எப்படியிருக்குமோ, அதே இன்பவேதனை யும் வியப்பும் அடைகிறேன். அக்கேள்வியை ஆராய ஆராய, அதன் மயக்கும் மர்மமும் என்னை அமுத்து கின்றனவே தவிர, முடிவு கிட்டியபாடில்லை.

**வா**சலில் நிழல் தட்டிற்று.

"வா வா, ஸ்ரீமதி! ரெண்டு நாளா இந்தப்பக்கமே காணுமே!" என்று லக்ஷ்மி உள்ளிருந்தபடியே கூப்பிட்டாள்.

கையில் தன் பையனைப் பிடித்தவண்ணம் ஸ்ரீமதி உள்ளே நுழைந்தாள்.

"தங்கம் மாமியாத்துலே அப்பளாம் இடக் கூப்பிட்டா. போயிருந்தேன். முந்தாநேத்து முக்கு மாமியாத்துலே அவா மாமனாருக்குத் தெவசம்; அதுக்கு சமைக்கப் போனேன்."

ஸ்ரீமதியின் பிழைப்பே இப்படித்தான் நடந்து கொண்டிருந்தது.

"இப்போத்தான் உன்னை நெனைச்சேன்! நீ என்ன வேணுமானு நெனைச்சுக்கோ, ஸ்ரீமதி. நீ இல்லாட்டா ஒரு கை ஒடிஞ்சமாதிரிதான் இருக்கு. காப்பிக்கொட்டையை வறுத்து வெச்சுட்டேன் அசடாட்டமா. நமுத்துடறத்துக்கு முன்னாலே பொடிபண்ணியாகணுமேன்னு அப்புறம் தானே யோசனை தோணறது! ரெண்டுவாய்தான் காணும். நானும் வரேன். நீ இடி, நான் சலிச்சுப்பிடறேன். அப்புறம் சுடச்சுட 'கமகம'ன்னு போட்டுச் சாப்பிடலாம்—"

மாம்பூவைக் காம்பு ஆய்வது போன்ற பேச்சிலும், 'யானை சுமந்துவரப் பின்னால் நரி முக்கிக் கொண்டே வந்ததாம்' என்கிற தினுசில் வேலை வாங்குவதிலும் வேலை செய்வதிலும், லக்ஷத்திற்கு லக்ஷம் கொடுக்கலாம்.

சற்று நேரத்துக்கெல்லாம் உலக்கையிடி துவங்கிற்று. பக்கத்தில் அம்மிமேல் வைத்திருக்கும் பாத்திரங்கள் அதிரும் சப்தம் இனிப்பாய் ஒலித்தது. காப்பிப் பொடியின் மணம் 'கம்' மெனக் கிளம்பிற்று.

தெருவில் ஒருவன் வெற்றிலை விற்றுக் கொண்டு சென்றான். மாதிரிக்குக் கையில் ஒரு கவுளி— ஒடிந்த இறக்கை மாதிரி. அந்த உவமை மனத்தில் பட்டதும் மறுபடியும் ஸ்ரீமதியின் மேல்தான் நினைவு தொடர்ந்தது. ஏனெனில், சென்ற இரண்டு வருடங்களாகவே அவள் ஒடிந்த இறக்கையுடன் தான் வளைய வந்து கொண்டிருந்தாள்.

இப்பொழுது அவளுடன் கூடவந்த அவள் மகன் கருவாயிருக்கையிலேயே, அவள் புருஷன் இங்கெல்லாம் வேலை தேடி மனஞ் சலித்து, ஒருவருக்கும் சொல்லாமல் சிங்கப்பூருக்குச் சென்று விட்டான். புக்ககத்தில் அவளைக் கவனிக்கக்கூடிய நெருங்கின பந்துக்கள் யாருமில்லை. பிறந்த வீட்டுச் சாய்கால்தான் எத்தனை நாட்களுக்கு இருக்கும்? பெற்றவர்களின் ஏச்சும் இடிசொல்லும் பொறுக்கக் கூடியதாயில்லை. குழந்தையை இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு, தனிப் பிழைப்பாகவே வந்து விட்டாள். இலை தைத்து விற்பதும், சமய சந்தர்ப்பங்களுக்குச் சமைத்துப் போடுவதும், சிறு பக்ஷணங்களின் வியாபாரத்திலும் அவள் ஜீவனம் நடந்து கொண்டிருந்தது.

கோவிலுக்குப் பக்கத்தில் ஒரே அறையுடன் கட்டிய ஒரு இடிந்த வீடுதான் அவள் குடில். சந்தர்ப்பங்களின் சதியால், தன் ஆணின்றி, துணையின்றி வாழ நேர்ந்து, அதுவும் சற்றுக் களைமுகமும் கட்டுடலும் படைத்துவிட்ட ஒரு வயதுப் பெண்ணை, வழக்கப் பிரகாரம் ஏதேனும் பேச ஊர்நாக்கு துடித்தாலும், அவளைக் கண்டு ஏனோ எதற்கோ அஞ்சி முடங்கியது.

மத்தியான்னம் கட்டுவேளைக்கு, தன் குழந்தையே தனக்கு ஆண் துணையாய், அவன் கையைப் பிடித்துக்கொண்டு வந்து தபால் அறை வாசலண்டை வந்து நிற்பாள். குனிந்து அவனைப் பார்த்து, "டேய்! மாமாவைக் கேளுடா — அப்பா

கிட்டேயிருந்து ஏதாவது கடிதாசு வந்திருக்கான்னு" என்பாள்.

அவனுக்கென்ன, நாலு வயதுதானிருக்கும். அவன் அம்மா எப்படியோ சிறுகச் சிறுகச் சேர்த்து வைத்து, ஆசையாய்த் தைத்து மாட்டியிருக்கும் அரை நிஜாரையும் அரைக் கைச் சொக்காவையும் மாட்டிக்கொண்டு, எவ்வளவோ சுத்தமாய் அலம்பியும் நூலொழுகும் மூக்குடன் வாயில் கட்டைவிரலை மாட்டிக் கொண்டு, என்னைத் தன் ஸெலுலாயிட்டுப் பொம்மைக் கண்களுடன் ஆழ்ந்து பார்க்கையில், என்னை ஏதோ சங்கடம் பண்ணும். கடிதம் இருந்தால் அவனண்டை வந்து குனிந்து கொடுப்பேன்.

"எங்கேடா உங்கப்பா ?"

வாயில் போட்ட கட்டை விரலை யெடுக்காமலே, "அப்பா ஓ போயிட்டா — நேக்குப் பப்புட்டு வாங்கிண்டு வவ்வா" என்பான்.

ஆனால் கடந்த இரண்டு வருடங்களாய் ஸ்ரீமதியின் புருஷனிடமிருந்து ஒழுங்காய்ப் பணமும் வரவில்லை; கடிதமும் வரவில்லை. சேர்ந்தாற்போல் இப்போது ஆறுமாத காலமாய் அவனிடமிருந்து ஒரு வரியுமில்லை.

பையன் வாசற்படியண்டை வந்து நிற்பான். "மாமா! அம்மா ஓவு கவவ் வாங்கிண்டு வவச் சொன்னா. காசு நாளைக்கித் தவாளாம்." — அவனுக்கு இன்னும் 'ர'கரம் படியவில்லை.

கொடுப்பேன். இன்னொரு நாள் வருவான்.

"மாமா, அம்மா ஓவு கவவ் வாங்கிண்டு வவச் சொன்னா. மின்னயே ஓவு கவவ் பாக்கியாம். அத்தோடு இதையும் சேத்துத் தவாளாம்."

கொடுப்பேன்.

"மாமா, அம்மா கவவ் வாங்கிண்டு வவச் சொன்னா."

"மாமா, அமமா கவவ் வாங்கிண்டு வவச் சொன்னு."

அப்புறம் வந்து வாய்பேசாது வெறுமென நிற்பான். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட திகைப்பும் சோகமும் இப்பவே தேங்கிய அம்முகத்தைப் பார்த்து வயிறு ஒட்டிக் கொள்ளும். கட்டுக் கட்டாய்க் கார்டும் கவரும் அவனெதிரில் வைத்துக் கொண்டு, ஏதோ குற்றம் செய்கையில் கையும் பிடியுமாய் அகப்பட்டுக் கொண்டாற்போல் உள்ளம் குலுங்கும்.

"அம்மா கவர் வாங்கிக்கொண்டு வரச்சொன்னாளா? இந்தா, எடுத்துக்கோ."

கவரைக் கையில் பிடித்துக்கொண்டு குதித்து ஓடுவான்.

ஆனால் ஸ்ரீமதி பதறிப்பதறி எழுதிய கடிதங்களுக்கும் பதில் இல்லை.

* * *

கிராமத்தை வளைத்து ஒரு வாய்க்கால் ஓடியது. அதன் மூலஊற்று வீட்டிலிருந்து ஒன்றரை மைல்.

ஒரு நாள் மாலை அந்தப் பக்கம் உலாவச் சென்றிருந்தேன். தோய்ப்பதற்குக் கொண்டு வந்திருந்த துணிகள் பந்தாய்ச் சுருட்டிப் பக்கத்திலிருக்க, ஜல ஓரத்தில் அவள் முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அருகே அவள் பையன் கிளிஞ்சலோ, கூழாங்கற்களோ பொறுக்கி விளையாடிக் கொண்டிருந்தான்.

அவர்கள் என்னைப் பார்க்கவில்லை. என்னை மணல் திட்டு மறைத்தது. ஆனால் நான் அவளைப் பார்த்தேன். அவள் முகத்தில் நான் கண்டதைக் கண்டதும், மறு அடி எடுக்கத்தூக்கிய கால் கீழிறங்க மறந்து அந்தரத்தில் நின்றது.

ஸ்ரீமதியின் எதிரில் ஜலமுகம் அகன்று விரிந்தது. அவள் நாட்டம் ஜலத்தின் நடுவில் ஏதோ ஒரு மீன் துள்ளிச் சுழித்த சுழியிலும், அச்சுழியில் ஜலத்தின் விதிர் விதிர்ப்பிலும் பதிந்திருந்தது. நெற்றிப் பொட்டு மயிர் சற்றுப் பரட்டையாய் மாலைக் காற்றில் அசைந்தது. முகத்தில் மூந்நூறு மூவாயிரம் வருடங்கள்......காலத்தின் வரையே கடந்து வயதேயிலாத வயோதிகம் கவிந்திருந்தது. இமைகள் கொட்டவில்லை. முகமே ஒழித்துப் பெருக்கி வைத்தாற்போல், ஒரு தனி வெறிச்சிட்டு, அதில் ஒரு எண்ணம், ஒரே எண்ணம், கொஞ்சம் கொஞ்சமாய்ப் பயங்கரமாய் முறுக்கேறிக் கொண்டிருந்தது. எனக்கு நடுமுதுகு சில்லிட்டது.

"அம்மா-அம்மா-"

அமிர்தாஞ்சன் பொம்மை மாதிரி அவள் முகம் அவன் பக்கம் திரும்பியது. ஆனால் அவன் அவளைப் பார்க்கவில்லை. தண்ணீரை உற்சாகத்துடன் சுட்டிக் காண்பித்துக் கொண்டிருந்தான். கன்னக் கதுப்புக்களில் மாம்பழச் சிவப்பு மிளிர்ந்தது. தலையின் சுருட்டை மயிர், வெயிலின் ஜாலத்தில் தங்க மோதிரக் குவியலாய் மாறிற்று.

"ரவிக்கை !—"

அவள் தோய்க்கக் கொண்டு வந்த ரவிக்கை மிதந்து, சுழலில் இழுக்கப்பட்டு, அவள் எட்டும் தூரத்தையும் மீறி ஜலத்தின் நடுவுக்குப் போய்க் கொண்டிருந்தது.

அழுக்கிய எஃகுச் சுருள் திடீரென்று திரும்பிக் கொண்டாற்போல், அவள் முகம் சட்டெனக் கலைந்தது: பூமியே புரண்டது போல் ஒரு பெரும் கேவல் அவளை அதிர்த்துக் கொண்டு அவளின்று கிளம்பியது. கட்டிய முழங்கால்களின்மேல் முகம் விழுந்தது.

"என்னம்மா! ஏம்மா அழுவே? ஏம்மா—?"

முன்னொரு நாள் நடுத்தெருவில் ஒரு ஆடு படுத்திருந்தது. அவசரமாய்ப் பந்தய வேகத்தில் வந்த ஒரு சைகிள்காரன் அதன்மேல் வண்டியை ஏற்றிவிட்டு, இறங்கிக்கூடப் பாராது விட்டடித்துக் கொண்டு போயே போய்விட்டான். ஆட்டுக்கு நடு முதுகு ஒடிந்துவிட்டது. ஒவ்வொரு முறையும் எழுந்திருக்க முயலுந்தோறும் ஒரு அலறல்தான் அதனின்று கிளம்பி, அதைக் கீழே தள்ளு கிறதேயொழிய, அதனால் நிற்க முடியவில்லை. அதன் குட்டிக்கு என்ன தெரியும்? அது பால் குடிப்பதற்காக அதைச் சுற்றிச் சுற்றி, முனகி முனகி, முகர்கிறது.

இதைப் பார்க்கையில் அந்த ஞாபகம் சொல்லா மலே என் முன் எழுந்தது. தலையைப் பிடித்துக் கொண்டு நடந்தேன். நெற்றி கசகசத்திருந்தது.

* * *

“ஏன் மாமி? என் குழந்தையைத் தூக்கிண்டு எண்ணிடத்துக்கு நான் போறதுக்கு எனக்கென்ன வெக்கமா, பயமா? ஆனால் கால் நடையாய்ப் போயிட றத்துக்கு மூணு மைல் தூரமா? ரயில் பிரயாண மாய்ப் போறதுக்கு முன்னூறு மைல் தூரமா? உள் நாடு கூட இல்லையே, மாமி! நான் எங்கே போவேன், எப்படித் தேடுவேன்?”

அழுகைக்கிடையில் சிந்தும் வார்த்தைகள் என் நெஞ்சைப் பிழிகின்றன. மேல் காரியம் ஓட மாட்டேன் என்கிறது.

எல்லாத் துக்கமும் இவள் துக்கமும் ஒன்றாகி விடுமா?

“மாமா, அம்மா ஒவு கவவ் கேக்கவா—”

இப்பொழுது கூட, வந்த தபாலைப் பார்த்துக் கொண்டிருக்கையில், அவள் பேசுவது ரேழியி லிருந்து கேட்டது:

"எனக்கு இனிமேல் ஒண்ணும் வேண்டாம், மாமி! சிங்கப்பூரிலிருந்து சம்பாதிச்சு, தூக்க முடியாமல் தூக்கிண்டு ஒண்ணும் வரவேண்டாம். தன் புள்ளைக்குத் தகப்பன்னு தான் மாத்திரம் தனியா வந்து சேர்ந்தாப் போறும். ஒண்ணுமே வேண்டாம். ஆத்துலே வந்து உட்கார்ந்தாப் போறும். இட்டிலிக்கு அறைச்சு இப்போ வயத்தெ வளக்கிறப்பிலே அப்போ மாத்தரம் முடியாதா, என்ன ?"

"ஆமாமா—பொடி நறநறங்கறதே, இன்னும் ரெண்டு இடி தாங்குமில்லே? சித்தே மசியேன்!—"

"ராஜி முந்தி மாதிரியில்லே மாமி! நேத்து ராத்திரியெல்லாம் ஒரு கடிதாசுத்துண்டுமேலே கவிஞ்சு படுத்துண்டு, அவனுக்குத் தெரிஞ்ச ஆனா ஆவன்னா, ஒண்ணுரெண்டு மூணு எல்லாம் எழுதினான். அப்பாவுக்கு எழுதற கடுதாசுலே அதையும் சேர்த்து அனுப்பணுமாம். பாதி விளையாட்டுலே நெனைப் பெடுத்துண்டு ஓடி வந்துடறான். அப்பா எப்போ வருவான்னு கேக்கறான். ஒரே படுசுட்டியாயிருக்கு இப்பொல்லாம்."

'ஸ்ரீமதி......ஸ்ரீமதி......'

கண்ணைக் கடிதங்களின்மேல் வைத்துக்கொண்டு, ரேழிப் பேச்சில் கவனத்தைச் செலுத்தியவண்ணம் கட்டைப் புரட்டுகையில், அவள் பெயர் திரும்பத் திரும்ப நினைவைத் தடுக்கிறது.

'ஸ்ரீமதி அம்மாள் அவர்களுக்கு-'

எனும் விலாசம் திடீரென்று கடிதங்களிடையினின்று தாவிக் குதித்து, நினைப்பைச் சட்டென இழுத்து, பார்வையுடன் சேர்த்துப் பிணைத்து இருத்திய போது என் உடல் பரபரத்தது.

அவள் பிள்ளையைக் கூப்பிட எழுந்த நாக்கை இழுத்துக்கொண்டேன். தைப்பிறப்பும் அதுவுமாய் ஸ்ரீமதிக்குக் கடிதம் வந்திருக்கும் சந்தோஷத்தை

—ஸ்ரீமதிக்காக நான் படும் சந்தோஷத்தை நானே தனியாகக் கொஞ்ச நேரம் அநுபவித்துக் கொள்ள வேண்டுமெனத் தோன்றிற்று.

கடிதத்தையெடுத்து, முன்னும் பின்னுமாய்த் திருப்பிப் பார்த்தேன். தபால் தலைமேல் சிங்கப்பூர் முத்திரை விழுந்திருந்தது. ஆனால் கையெழுத்து வேறாயிருந்தது. விலாசத்தின் கையெழுத்து எனக்குப் பழக்கந்தானே! எனக்கு ஏதோ சந்தேகந் தட்டிற்று. நான் என்ன செய்தேன் என்பதை உணருமுன்னரே கடிதத்தைப் பிரித்துவிட்டேன். அதிலிருந்தவை நாலைந்து வரிகள்தாம். அவைகளைப் படித்து, அவைகளின் அர்த்தம் மூளையில் தோய்கையில்—

கொக்கி போல் வளைந்து கூரிய நகங்களை விரித்துக் கொண்டு புலிப்பாதம் என் முகத்தில் அறைந்தது. கண்கள் இருண்டன. அறையும், ஜன்னலும், அதற்குப் புறத்தில் புலப்படும் தெருவும், எதிர்ச்சாரி வீடுகளும் அதிர்ச்சியில் ஆடி மிதந்தன. எதிர் வீட்டுத் திண்ணையில் சார்த்தியிருந்த ஒரு வண்டிச் சக்கரம் 'கிறுகிறு'வென்று சுழன்றது. என் உடலிற்குள் சதைக்கடியில், பின் மண்டையிலிருந்து பீறி இரத்தம் வழிந்து ஒழுகுவதை உணர்ந்தேன். இரு கைகளாலும் மண்டையைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டேன். ரேழியிலிருந்து 'திடும் திடும்' என்று கேட்கும் உலக்கை என் மேல்தான் இறங்கிக் கொண்டிருந்தது.

லக்ஷ்மி ஸ்ரீமதியிடம் கொல்லைப் புறத்திலிருக்கும் ஒற்றை வாழை மரத்தை வெட்டச் செய்த ஏற்பாட்டைச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"அது தான் குலை தள்ளிப்பிடுத்து, சீமதி. இனிமேல் அதை நீ எத்தனை நாள்தான் வெச்சுக் கோயேன்—இருந்தும் ஒண்ணுதான், இல்லாமலும் ஒண்ணுதான்! அனாவசியமாய் இடத்தை அடைச்சிண்டு..."

லக்ஷ்ம் ஏன் இப்படி ஸ்ரீமதியின் பேரில் பயங்கர மான தீர்ப்பைக் கூறுகிறாள்? ஆனால் லக்ஷ்ம் உண்மையைத்தானே கூறுகிறாள்! அப்படியானால் லக்ஷ்த்துக்கு மேஜை மேல் என்னெதிரில் கிடக்கும் கடிதத்தின் பொருள் ஏதாவது ஆச்சரியமான செப்பிடு வித்தையால், மனோதந்தி வாக்காய்த் தெரிந்து விட்டதா? ஐயையோ! அது ஸ்ரீமதிக்குத் தெரிய எத்தனை நாழியாகும்? அதுவும் சங்கராந்தி யில், நம்பிக்கையின் நன்னாளாய் எல்லோருக்கும் விளங்கும் இன்னாள் இவளுக்கு மாத்திரம் பொய்த் துப் போகவேண்டுமா? இந்தக் கடிதத்தில் செருகி யிருக்கும் கத்தியால் ஸ்ரீமதியை வெட்டிச் சாய்த் துத்தான் ஆகவேண்டுமா?

இம்மாதிரி சமயங்களில்தான் மனிதன் கடவு ளின் தன்மையை மேற்கொள்ள வேண்டியிருக் கிறது. முத்தொழிலும் செய்யும் பரத்தின் பொறுப்புக்குத் தனி லாயக்கு, கிராமப் போஸ்ட் மாஸ்டருக்குத்தான் இருக்கிறது.

மறுகணம் என்னெதிரில் அக்கடிதம் நாலு சுக்கல்களாய்க் கிடந்தது.

ஜன்னல் வெளியே நோக்கினேன். தெருவும் வீடுகளும் மறுபடியும் தம் நிலையில் நின்றுகொண் டிருந்தன. பொங்கலின் மனோகர வெயில். எதிர் வீட்டுத் திண்ணையில் வண்டிச்சக்கரம் சாய்ந்து நின்று கொண்டிருந்தது.

வாசலில் சாணியுருண்டையில் நேற்றுச் செருகி வைத்திருந்த ஒரு பறங்கிப்பூ கசங்கி வதங்கிக் கொண்டிருந்தது.

நான் முன்பின் பார்த்திராத ஒரு அன்னிய ஸ்திரீ தெருவழியே, என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்துகொண்டே குலுங்கி நடந்து சென்றாள்.

# கொட்டு மேளம்

பரதேசிக் கோலம் படி தாண்டி விட்டது. அப்புறம் அவளுக்குத் தாளவில்லை. சின்னம்மாவைக் கூப்பிட்டுச் சாயவு நாற்காலியை எடுத்துவரச் சொன்னாள்.

"என்னம்மா பண்ணப் போறே?"

"கீழே வரப் போறேன்; மங்களத்தையும் கூப்பிடு. பக்கத்திலே ரெண்டு பேரும் வந்து என்னைத் தாங்கிக்கோங்கோ."

திறந்த வாய்மேல் சின்னம்மா இரு கைகளையும் பொத்திக் கொண்டாள்.

"என்னம்மா சொல்றே? ஐயா எங்களை உசி ரோடே வெப்பரா?"

“அவன் கிடக்காண்டி; இருந்திருந்து இன்னிக்கும் மாடியிலே இருப்பேனு? என்னே இதிலே வெச்சு மெதுவாக் கீழே இறக்கி அவாள்ளாம் வரத்துக்கு முன்னாலே கூடத்து உள்ளே கொண்டு போயிடுங்கோ. இரு இரு, சின்னம்மா, மயிரைக் கொஞ்சம் கோதி முடிஞ்சுடு. பீரோவைத் திற. அந்தக் கிளிப் பச்சையை எடு. அது தான்—”

“பட்டுப் புடைவையாம்மா?”

“ஏண்டி? என்னேப் பாத்தா உடுத்திக்கிற மாதிரி இல்லையா? இந்தக் கல்யாணத்துக் கில்லாமெ எப்போ உடுத்திக்கிறதாம்? சரி சரி, நான் ரெடி. மேளம் நெருங்கருப் போலே யிருக்கே. ஐயர் உங்களேத் திட்டாமெ பாத்துக்கறேன். என்னேக் கீழே சேத்துடுங்கோ.”

உள்ளங்கையில் ஏந்திருற் போல்தான் அவர்கள் அவளேக் கீழே கொண்டு போனுலும், அந்தப் பிரயாசை கூட அவளுக்குத் தாங்கவில்லை. நரம்புகள் மார்பில் சுருட்டி அடைத்தன. மூச்சு திணறிற்று. நல்ல வேளேயாய்ப் பெண்கள் கூட்டமெல்லாம் வாசலில் நெரிந்திருந்தது. கூடத்து அறையில் சேர்ந்து விட்டோம் என்று நிச்சயப் பட்டதும் ஜானுவுக்குத் திடீரெனக் கண்கள் இருட்டின.

“சின்னு, ஒரு முழுங்கு தீர்த்தம் கொண்டு வாயேன்!—”

மேளச் சப்தம் நெருங்கிக்கொண்டே வந்தது. மேள நாதம் தூரத்திலிருந்து நெருங்கிக் கொண்டே வந்து அவளுள் பொழிந்து ஒரு பரபரப்பைப் பரப்பியது. அவள் விழுங்கியது ஜலமா, அல்லது அந்த நாதத்தின் விறுவிறுப்பா என்று நிச்சயமாய்த் தெரியவில்லை. உடல் பரபரத்தது. அந்த இன்ப வேதனே தாங்க முடியாது நாற்காலியை விட்டு எழுந்து அங்கு மிங்குமாய் எங்கேனும் ஓடலாமா என்று தோன்றிற்று. ஆனுல் அவளே, அவள் உடல் நாற்காலியோடுதான் அறைந்து வைத்தது. மண்டையில் போய் அந்த வேகம் அழுத்துகையில்

அவளுக்குப் பட்டது, இதைக் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சுதாரித்துச் சுவாதீனத்துக்குக் கொண்டுவர வேண்டுமே யொழிய, அதன்படி விட்டால் அதோ கதிதான்.

இந்தப் போராட்டத்தில் வாசலில் பச்சை சுற்றலும் ஊஞ்சலும் எப்பொழுது முடிந்தன என்று தெரியவில்லை. கல்யாணப் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு அவளுடைய ராமதுரை கம்பீரமாய்க் கூடத்துள் நுழைவதைக் கண்டாள். உற்சவருக்கு அலங்காரம் செய்தது போல், பஞ்சக்கச்சத்தில் பட்டை ஜரிகை அருவி போல் நெளிந்து மறைந்தது. மார்பில் யோக வேஷ்டி.

மார்பில் கைகளை ஜானு அழுத்திக் கொண்டாள்.

"இரு இரு உசிரே, கொஞ்சம் பொறு; அதுக்குள் அவசரப்பட்டுடாதே—"

இத்தனை கூட்டத்திலும், அதுவும் ஒருக்களித்த கதவின் பின்னுலிருக்கும் ஜானுவை ராமதுரை எப்படியோ பார்த்து விட்டான். மை தீட்டிய விழிகளிலிருந்து அவன் முறுவலின் ஒளியும் கலந்த அடையாளத்தின் சுடர் அவள்மேல் ஆடுகையில், அவள் கண்கள் நிறைந்து நீந்த ஆரம்பித்து விட்டன.

"ஜானு, எப்படிக் கீழே வந்தாய்?"

அப்போதுதான் தன்னருகில் நிற்கும் சந்துருவைக் கண்டாள். அவள் கன்னங்களில் கண்ணீர் அடக்க முடியாமல் கரகரவென வழிந்தது. சிரித்துக்கொண்டே ரேழிப் புறம் ஒரு கையைச் சுட்டிக் காட்டினாள். சுண்ணும்பாய் வெளுத்திருந்த முகத்தில், கன்னங்களில் மாத்திரம் செந்திட்டுக்களிரண்டு இரு சக்கரங்களாய்ச் சுழன்றன. அவள் சுட்டிய வழியே சந்துரு நோக்கினான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"மேளத்தைக் கவனி!—" என்றாள்.

நாயனத்தின் வாசிப்பைவிட மேளத்தின் சப்தம் தான் தூக்கி நின்றது. யாரோ சின்னப் பயல், முழு உற்சாகத்துடன் வெளுத்து வாங்குகிறான். வேலையின் சந்தோஷமே அவன் மேளத்திலிருந்து குண்டு குண்டு மணிகளாய்த் தெறித்து, கலியாணக் கூடம் முழுவதும் சிதறி ஓடி உருண்டு, பந்துகள் போல் எகிறி எழும்பியது. மாவு கட்டிய விரல்கள் தோல்மேல் துடித்துத் துழாவி மறுபடியும் துடித்து அக் குண்டு குண்டு மணிகளை எழுப்பின. மேளத்துள் சலங்கை குலுங்கி அதிர்ந்தது.

இந்தச் சப்தத்திற்குத்தான் சந்துரு இருபத்திரண்டு வருடங்களாய்க் காத்திருந்தானோ என்னவோ, ஜானு அறியாள். ஆனால் அவள் நிச்சயமாய்க் காத்திருந்தாள். புருஷனுக்கு இதில் எல்லாம் ஆசை ஓடுமோ ஓடாதோ? ஆனால் சந்துருவுக்குக் கலியாணம் ஆன பிறகு கொட்டு மேளத்தின் சப்தம் இன்றுதான் வீட்டில் கேட்கிறது. இதற்கு முன்னால் ராமதுரையின் பூணூல்கூட ஏதோ பிரார்த்தனை யென்று எங்கோ, சுவாமி கூட இருக்க முடியாத அவ்வளவு மூலை க்ஷேத்திரத்தில் நடந்தது. அங்கு அவள் போக முடியவில்லை.

எப்படிப்பட்ட கிழமாயிருந்தாலும் அதற்குக் கூட இத்தகைய சமயங்களில் தனக்கும் இம்மாதிரி நடந்ததெல்லாம் நினைவு வருமோல்லியோ!

* * *

ராமதுரையின் பக்கத்தில் நிற்கும் மணப் பெண்ணின் இடத்தில் தானும் இப்படியே தலை குனிந்து நின்றதை ஜானு நிறுத்திப் பார்த்துக் கொண்டாள். அவள் பக்கத்தில் அவள் கணவன் நின்றுகொண்டிருந்தான்.

ஜானுவின் அழகுக்கு அவள் கணவன் உறை போடக் காணான் என்று அப்போதே எல்லாரும் சொல்லிக் கொண்டார்கள்.

ஜானுவின் தாயாரிடம் வந்தவர் போனவர் எல்லாம் ஜாடையாகவும் வெளிப்படையாகவும் கலி யாணத்துக்கு முன்னாலும் பின்னாலும் முறையிட்டுக் கொண்டார்கள்.

"ஏண்டி, இத்தனை நாள் காத்திருந்தேளே. இருந்திருந்து இந்த இடந்தான் உங்களுக்கு அகப் பட்டதா?"

"எங்களுக்கு உன் பொண்ணை முன்னே பின்னே பார்க்காட்டாலும் பரவாயில்லே; தெரியாட் டாலும் பரவாயில்லே. எங்கள் கண்ணெதிரே பாவாடை கட்டி, சித்தாடை கட்டி, புடவை கட்டற வரைக்கும் வளந்தூட்டு இப்போ எங்கள் கண்ணிலே மண்ணைப் போட்டுட முடியுமா?"

"இன்னும் எத்தனை நாள் மாமி காத்திண் டிருக்கிறது? இப்போ இப்படிச் சொல்றவா நீங்களே, இன்னுங் கொஞ்ச நாள் பொண்ணை வீட்டிலே வெச்சிண்டிருந்தோமானால், வேறே தினுசாப் பேசு வேள். நாங்கள் இப்போ இருக்கிற நிலையிலே இதுக்கு மேலே வீங்கறத்துக்கில்லே. இப்போ படற கடனையே சந்துரு தலையெடுத்துத்தான் அடைக் கணும். இத்தோடே போகல்லையே—அவனுக்கு இன்னும் ரெண்டு தங்கை இருக்காளே—"

"இருந்தாலும்—"

"அதெல்லாம் என்னத்துக்கு மாமி? ஆண் பிள்ளைக்கு அழகென்ன வேண்டியிருக்கு? எங்கே யாவது மானமாய் வயத்தெ அலம்பிண்டு தீர்க் காயுசா இருந்தாப் போறும்—"

'தீர்க்காயுசாய்' என்ற பதத்தொடர் பட்ட வுடனே ஜானுவின் மனக்கண்ணெதிர் காட்சி மாறியது—

—அப்பொழுதுதான் சேவல் கூவி ஓய்ந்தது. வாசற்கதவை யாரோ படபட வெனத் தட்டுகிறார்கள். ஏற்கெனவே ஏதோ வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு கண் விழித்திருக்கும் அவள் ஓடிப்போய்த் திறக்கிறாள். வாசலில் சைக்கிளில் ஒருவன் கையில் ஒரு சீட்டைப் பிடித்துக் கொண்டு நிற்கிறான்.

"இது 23-ஆம் நெம்பரா? ஆஸ்பத்திரியிலேருந்து வரேன். மக்கோநக்கி வார்டுலே, 13-ஆம் நெம்பர் பெட் பேஷண்டு தவறிட்டுது, அம்மா—"

"ஐயோ !"

கல்யாணம் நடந்து மூன்று வருஷங்கள் முழுக்க ஆகவில்லை. வெள்ளிக் கிழமையாய்ப் பார்த்து, காலன் அவள் கழுத்துக் கயிற்றைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டான்.

நல்லவேளையாக, சந்துருவும் அம்மாவும் அந்தச் சமயத்தில் அவள் பக்கத்திலிருந்தார்கள். இப்பொழுது கூட நினைவு வருகிறது; தனக்கு வந்திருக்கும் கஷ்டத்தின் முழு மகத்துவமும் புரியாமலே அலறுகையில், அவள் தலையைச் சந்துரு தன் மடியில் வைத்துக் கொண்டு "ஜானு, நீ இனி எனக்குத் தம்பி. எனக்குத் தம்பியில்லை. எனக்கு நீ—உனக்கு நான்—"

ஜானு தன் அண்ணனைக் கடைக் கண்ணால் கவனித்தாள். அவனும் யோசனையில் ஆழ்ந்துதான் நின்று கொண்டிருந்தான். ஒற்றை நாடித் தேகம்; அம்பு போல் நிமிர்ந்த உடலில் வெள்ளை ஜிப்பா நீண்டு தொங்கிற்று; முகத்தின் செந்தாழைச் சிவப்பு இன்னும் இம்மிகூடக் குறையவில்லை. கரடி மயிரால் வளைத்த புருவங்கள் உள் வலியில் நெரிந்திருந்தன. ஆனால் அவன் தலைமயிரைப் பார்க்கையில்தான்

ஜானுவுக்கு மனம் பெருந்தாங்கலா யிருந்தது. மயிர் தும்பையாய் நரைத்திருந்தது. அப்படி நரைக்க அவனுக்கு இன்னும் வயதாகவில்லை.

சந்துரு முகத்தில் இன்னும் அதன் இயற்கை அழகு குன்றவில்லை. ஆனால் அதில் முன்னூறு வருடங்களின் மூப்பு தேங்கியிருந்தது. இந்த நரை புது நரை யில்லை. இருபது வருடங்களுக்கு முன்னாலேயே கண்டு விட்டது. சாயம் அடிப்பது போல் நெற்றிப் பொட்டில் கரைபோல் ஆரம்பித்துத் திடீரென்று தலை முழுவதும் படர்ந்து விட்டது. சீவி விட்டிருந்த மயிர் வெண்பட்டாய்ப் பளபளத்தது. என்னதான் அவளுக்கு அவன் மேலிருந்த பாசம் கண்ணை மறைத்தாலும், அவனுக்கு இப்படி நரைக்க இன்னும் வயதாகவில்லை.

சந்துருவுக்கு மயிர் நரைத்ததிலிருந்து ஜானு மற்றெல்லார் மயிரையும் கவனிப்பாள். அதுவே ஒரு கெட்ட பழக்கமாய்விடும் போலிருந்தது. ராமதுரைக்கு ஒரே சுருட்டை; சீவினால் வங்கி வங்கியாய் அடுக்கும். ஆனால் பாதிப் பொழுது வாரவும் மாட்டான். முழுக் கறுப்பு இல்லை; சிறு செம்பட்டை பூத்த மோதிரக் குவியல்.

ஜானுவுக்கு மயிர் வெகு முரடு; அடர்த்தி. அதுவும் தனக்கு இந்தக் கதி நேர்ந்தபின் பின்னுவதையே விட்டுவிட்டாள். மயிரின் முடிச்சு ஒரு சிறு இளநீர் பருமனுக்குக் கழுத்தில் கனத்துக் கொண்டிருக்கும். ஆனால் ஒரு நரைமயிர் கூடக் கிடையாது.

—"உங்களைச் சாஸ்திரிகள் கூப்பிடறார்."

அவளுடைய மன்னி நாதாங்கியைப் பிடித்துக் கொண்டு வாசற்படிக்கு வெளியே நின்றாள். சிந்தனையின் அரைப்போதையில் ஜானு கௌரியைப் பார்த்தாள். அவளுக்குக் கூந்தல் குட்டை. ஆனால் நடு வகிட்டிலிருந்து சீவப்பெற்று, ஒரு மயிர்

கூடப் பிரியாது பின்னுக்குப் போகையில் அதன் ஒழுங்கும், பளபளப்பும், முன்னடர்த்தியும் பறவையின் ஒடுங்கிய சிறகுகளை நினைவு மூட்டின.

"நாழியாயிடுத்தாம்—"

சந்துரு பின்னால் கையைக் கட்டிக் கொண்டு அறையை விட்டு வெளியே சென்றான். கூட்டத்தில் அவன் கலக்கையில் அவன் முதுகைப் பார்த்துக் கொண்டே கௌரி நின்றாள்.

"கௌரி, எங்கேடி போயிட்டே? பருப்புத் தேங்காயை எங்கே வெச்சுட்டே?" என்று ஒரு குரல் கத்திற்று. கௌரி அவ்விடம் விட்டகன்றாள். அவள் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. அவள் முகமே ஒரு முகமூடி.

இப்பொழுது தன் பிள்ளைக்குக் கல்யாணம் நடக்கையில் கௌரிக்கும் தன் மணத்தின் நினைவு வருமோ இல்லையோ? எப்படியோ தன் கல்யாணத்தை யாருமே எப்பொழுதுமே மறக்காதபடி அவள் பண்ணிக்கொண்டு விட்டாள்.

சந்துருவுக்குக் கல்யாணம் நடந்தபோது அது குடும்பத்திற்கே ஒரு முக்கியமான சம்பவம். மற்றத் தங்கைகளையும் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விட்டு, அந்தக் கடனையும் அடைத்துவிட்டுத் தலை நிமிர்கையில் சந்துருவுக்கு முப்பது வயதாகி விட்டது. அதற்குமுன் எந்தக் கட்டிலும் படமறுத்து விட்டான். ஆனால் அப்புறமும் தன் மணத்தைத் தள்ளிப்போட நியாயமில்லை. தகப்பனார் காலமாகிவிட்டார்; தாய்க்குத் தள்ளாமை; ஜானு பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தாள். ஆகையால் கிழவியைக் குந்தவைத்துச் சாதம் போடவும், வீட்டுக்கு வந்தவர்களுக்குக் குங்குமச் சிமிழ் நீட்டவும் மருமகள் வர நாளாகிவிட்டது. வேளையும் வந்துவிட்டது.

மன்னி கழுத்தில் மூன்றும் முடிச்சைப் போடாவிட்டாலும், மன்னி வந்தாள் என்ற சந்தோஷத்திலேயே ஜானு குழந்தையாகிவிட்டாள். அருமைச் சந்துருவுக்கு ஒரு அகமுடையாள்.

ராமதுரை இப்போது ஆயிரம் செல்லமாயிருந்தாலும் எப்படியும் சந்துருவின் அருமை ஆகமாட்டான். இதை ஜானு தனக்கே ஒப்புக்கொள்ளுகையில் அவளுக்குச் சந்துருவின் தனி முக்கியத்தில் அசூயை கூட உண்டாயிற்று. ஏனெனில் சந்துரு, திலோமம் செய்து, குல தெய்வத்தின் கோவில் வாசற்படியை நெய்யால் மெழுகி, ராமேசுவரம் போய்க் கடுந்தவங்கிடந்து, ஓரே பிள்ளையாய், முதல் இதயபூர்வத்தில் ஜனித்தவன். இந்த முக்கியம், அவன் அவர்கள் கண்ணெதிரில் வளருகையில் அவன் இயக்கும் ஒவ்வொரு செயலிலும், அவனில் இயங்கும் ஒரொரு உணர்ச்சியிலும் தன்னைத் தெரிவித்துக் கொண்டேயிருந்தது. ஒருவேளை நாளாக ஆக, அவனே அதை உணர்ந்து கொண்டதாலோ என்னவோ, அது போகப் போகப் பெருகிக் கொண்டேதானிருந்தது.

சந்துருவுக்கு நேர்ந்த மாதிரி குடும்பப் பொறுப்புகளும், பாரங்களும் ஒருவேளை இன்னும் கொடியவையாய்க் கூட வெகுபேர் சிறு வயதிலேயே வகித்திருக்கிறார்கள். ஆனால் இந்த நாயகத் தன்மை—விஸ்தரிக்க இயலாத இந்த ஒளி—எல்லோருக்குமே கிட்டுவதில்லை. அதாவது, சூரியனைச் சுற்றி மற்றக் கிரகங்கள் சுற்றுகிறமாதிரி—கொதிக்கும் பாலிலிருந்து மணம் கமழ்கிற மாதிரி. அது பிறர் சூட்டுவதா, அல்லது பிறவியுடனேயே பிறந்ததா? சில சாயல்களில் சந்துருவைப் பார்க்கையிலோ, கேட்கையிலோ, பிறர் அவனைப்பற்றிச் சொல்வதைச் சிந்திக்கையிலோ அவளுக்கு அடிக்கடி கோயிற் சிலையைத்தான் அவன் நினைவு மூட்டினான். அதன் லக்ஷணங்கள் எவ்வளவு நுணுக்கமாய்ச் செதுக்கியிருப்பினும், அதன் புன்னகை எவ்வளவு

தான் இன்பமாயிருந்தாலும், அது உருவாய ஆதிக்கல்லின் உரத்தையும் உக்கிரத்தையும் தாங்கிக் கொண்டுதான் நிற்கும்.

ஆம், சந்துரு ஒரு உக்கிரப் பொருள். அவன் உணர்ச்சிகள் இரண்டுங் கெட்டான் உணர்ச்சிகளல்ல. நல்லவையோ கெட்டவையோ, கண்டிப்பாய் அவை சாதாரணமானவை யில்லை. விழுதுகள் இறங்கியதும் எப்படிப் பூமியில் வேரூன்றி விடுகின்றனவோ, அம்மாதிரி அவனுலேயும் கலேக்கமுடியாக் கனமான உணர்ச்சிகள்.

சந்துருவுக்கும் தனக்குமிடையில் உள்ள நெருக்கத்தை ஜானு எண்ணமிட முயல்கையில், அதற்கு முடிவேயில்லாத அகன்ற வான் வீதிகளும், ஆழமான நதிகளும் அதில் பாய்ந்து ஓடின. உடன் பிறப்பெல்லாம் ஒரே தொப்புள் கொடியென்பது இதுதானே? ஆனல் மற்றத் தங்கைகளும் உடன் பிறப்புத்தானே! அவர்களுக்கு ஏன் இப்படி ஒட்டுதல் ஏற்படவில்லை? ஜானுவின் நிலே கண்டு வெறும் அநுதாபத்திலேயே பிறந்த தல்ல அவர்களிடையில் உள்ள பாசம்.

குழந்தைப் பருவத்துச் சம்பவம் ஒன்று அவள் நினேவில் மின்னியது. சிறு வயதில் சந்துரு மகா துஷ்டன். திடீரென்று ஏதோ வெறி வந்து ஜானுவைக் கீழே தள்ளிவிட்டான். ஜானு அழுது கொண்டே போய் அப்பாவிடம் சொன்னுள். அப்பாவுக்கு ஆபீஸிலிருந்து வந்த சிரமம்; சாரத்தில் செருகியிருந்த கயிற்றை உருவி, சந்துருவை வீறு வீறென வீறிவிட்டார். கண்ணெதிரில்சந்துரு துள்ளித் துடிப்பதைக் கண்டதும் ஜானுவுக்கு உடம்பு வெலவெலத்து விட்டது. சந்துருவைத் தேடிக் கொண்டு போனுள். கட்டில் மேல் சுருட்டி வைத்திருக்கும் படுக்கைகளுக்கிடையில் சந்துரு குப்புறப் படுத்துக் கொண்டிருந்தான். முதுகில் கிண்டு கிண்டாய் எழும்பியிருந்தது. அங்கங்கே சிராய்ப்பு.

"அண்ணா !—"

"போடா !—உன்னாலேதாண்டா!"

சந்துரு சீறி விழுந்தான். அவன் கன்னங்களில் கண்ணீர் காய்ந்து போயிருந்தது.

அவள் கண்கள் தளும்பின.

"இல்லேண்ணா !—"

"ஏண்டி வந்தே? போ—போ—"

"தேங்கா யெண்ணெய் தடவறேன், குப்புறப் படுத்துக்கோ. அசக்காதே—"

வெறும் பார்வையிலிருந்தே ஒன்றன் நிலையை ஒன்று அறிந்து கொள்ளும் மிருகத் தன்மை அவர்கள் உறவில் மிளிர்ந்தது. இத்தனைக்கும் அவர்களிடையில் தனி ரகசியங்கள் கிடையாது. வான், என்றும் எப்பொழுதும், எல்லோருக்கும் திறந்துதானே இருக்கிறது. ஆயினும் அதில் இன்னும் புதைந்து கிடக்கும் ரகஸ்யங்கள் எத்தனை! அநேகமாய் அவர்களிடையில் தர்க்கங்களும் மனஸ்தாபங்களும்தான் இருக்கும். வானத்தில் மேகங்கள் மோதி மின்னல்கள் பிறக்கவில்லையா? கடுமழை உடைப்பெடுத்துக் கொள்ளவில்லையா? சமுத்திரத்தில் அலைகள் கக்கவில்லையா? அவர்கள் உறவின் மூல மூர்க்கம் புரியவுமில்லை, புரியாமலு மில்லை. அதன் இரட்டைத் தன்மையின் சூட்சுமமே அதுதான்.

கல்யாணமான புதிதில் சந்துரு பார்த்தவர் அதிசயிக்கும்படி தகதகத்தான். அடர்ந்த புருவங் களின் அடியில் பூனைக்கண்கள் விட்டு விட்டுப் பிரகாசித்தன. அப்பொழுது அவன் மயிர் மைக் கறுப்பாய்த்தான் இருந்தது.

நெற்றியில் சிலசமயங்களில் குங்குமம் இட்டுக் கொள்வான். பக்தியினால் அல்ல; அழகுக்காக.

ஓரிரவு மணி இரண்டு இருக்கும். ஜானுவுக்குத் திடுக்கென விழிப்பு வந்தது. திடீரென்று போட்ட விளக்கில் அறை ஒரே வெளிச்சமா யிருந்தது. சந்துரு கட்டிலருகில் நின்று கொண்டிருந்தான். அவன் கண்கள் விரிந்து அவள் மேல் தாழ்ந்திருந் தன. ஆனால் பார்வை அவள் மேல் இல்லை. ஏதோ பரவசத்துள் ஆழ்ந்திருந்தன. அவன் உதடுகளில் ஒரு புன்னகை ஆரம்பித்தது, ஆரம்பித்த நிலையி லேயே தோய்ந்திருந்தது.

ஜானு எழுந்து உட்கார்ந்தாள். "என்னடா அண்ணு?"

சந்துரு கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்தான்.

"ஜானு, நான் ஒரு கனுக்கண்டேன். இப்பொழுத் தான் கண்டேன். கண்டதிலிருந்து என் நிலையில் இல்லை. என்னை என்னவோ பண்ணுகிறது. உன் னிடம் உடனே சொல்ல வந்தேன்."

எழுந்துபோய் ஜன்னலண்டை நின்முன். அவனுக்கு இன்னும் இருப்புக் கொள்ளவில்லை. வெளியே நிலவுக்கு முன் மேகங்கள் சரசர வென விரைந்து கொண்டிருந்தன.

"—இது மாதிரிதான்

வானம் இருந்தது. ஆனால் சந்திரன் தெரியவில்லை. தேங்காயைத் துருவி மலைமலையாகக் குவித்திருந்தது. என் கண்ணுக்கு எட்டிய வரையில் இந்த மேகங் களில் கற்கண்டுக் கட்டிகள் போல் நக்ஷத்திரங்கள் வாரியிறைத்திருந்தன.

"அப்பொழுது யாரோ பாடும் குரல் கேட்கிறது. ஆண்குரல். ஹிந்துஸ்தானி சங்கீதம். 'கஜல்' என்பார்களே, அது. இடையிடையே நீண்ட தொகையராக்கள். குரலோடு இழைந்து இழைந்து பத்து சாரங்கிகள் அழுகின்றன. திடீரென்று தபேலாவின் மிடுக்கான எடுப்புடன் ஆரம்ப அடியில்

பாட்டு முடியும் போதெல்லாம், இன்பம் அடி வயிற்றைச் சுருட்டிக் கொண்டு 'பகீர் பகீர்' என்று எழும்புகிறது. அந்த மாதிரி குரலை நான் கேட்டதே யில்லை. என் எலும்பெல்லாம் உருகிவிடும் போலி ருக்கிறது. நான் அதைத் தேடிக்கொண்டே போகிறேன்.

“நான் போகிற வழியெல்லாம் யார் யாரோ மேடுகளிலும், பள்ளங்களிலும் மரத்தடிகளிலும், பரந்த வெளிகளிலும் கூட்டங் கூட்டமாயும், கொத்துக் கொத்தாயும், தனித் தனியாயும் அசைவற்று உட்கார்ந்திருக்கிறார்கள். நான் போகப் போக, பாட்டின் நெருக்கமும் இனிமையும் இந்த உடல் தாங்கக் கூடியதாயில்லை.

“பாடும் ஆளும் தென்படுவதாயில்லை. என் எதிரே கட்டிடமுமில்லை. ஒரே பரந்த வெளிதான். ஆனால் குரலின் கணகணப்பும் நெருக்கமும் இனி மையும் ஒரே இரைச்சலாய் வீங்கி, என்மேல் மோதுகையில் எனக்கு ஏற்பட்ட தவிப்பு இன்ன மும் தணிந்தபாடில்லை. திசைப் பூண்டாமே, அதை மிதித்த மாதிரி கடைசியில் நான் என்னையே சுற்றிச் சுற்றி வருகிறேன். என் மார்பே வெடித்துவிடும் போலிருக்கையில், நல்ல வேளையாய் விழித்துக் கொண்டேன். ஜானு, இதற்கு அர்த்தம் உண்டா?”

—சொல்லிக் கொண்டே வருகையில், சந்துரு வுக்கு முகம் சிவந்துவிட்டது. நடு நெற்றியில், நீல நரம்பு கிளைவிட்டுப் புடைத் தெழுந்தது. அந்நிலை யில் அவனைப் பார்க்கையில் அவளுக்கு ஏதோ வேதனை பண்ணிற்று.

“மன்னி கிட்டே சொன்னையா? அவள் என்ன சொல்கிறாள்?”

அவன் சிரித்தான். “அவள் என்ன சொல்லு வாள்? நான் சொன்னதையே அவள் வாங்கிக் கொண்டாளோ இல்லையோ? அவளுக்கு ஒரே தூக்கக் கலக்கம். 'ஏதோ சினிமாவுக்கு என்னை

விட்டுட்டுப் போயிருப்பேள். அதன் பின்னணி சங்கீதம் மனசில் பதிஞ்சிருக்கும்' என்று ஒரே வார்த்தையில் முடித்துவிட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டு விட்டாள்.''

அவளுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. அவனுடைய கனவு அவள் நெஞ்சிலும் ஏதோ இம்சை பண்ணிற்று.

"நாங்கள் யாராவது அந்தக் கனவில் வந்தோமா? நான், அம்மா, மன்னி—''

"இல்லை, நீங்கள் ஒருவருமே இல்லை.'' பெருமூச்செறிந்து சந்துரு திரும்பினான்.

'ஒரு வேளை கௌரி சொல்வதும் சரிதானோ, என்னவோ? ஒண்ணும் இல்லாததைப் பிரமாதம் பண்ணிக் கொள்கிறேனோ என்னவோ?—'

"அட! அதுக்குள்ளே மன்னி உன்னைத் தேடிண்டு வந்துட்டாளே!''

கௌரி வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள். அவள் முகமே ஒரு முகமூடி.

"இல்லை, குழாயில் ரப்பரைக் கட்டி விட்டேன்'' என்றாள் அவள்.

"சரி சரி, ஜானு, தூங்கு. அநாவசியமாய் எழுப்பி விட்டேன். எப்படியும் கனுத்தானே! எல்லாமே கனுத்தானே! கனுக்குள் கனு—''

ஆனால் அவளுக்கு வெகு நேரம் வரையில் தூக்கம் வரவில்லை. அந்தக் கனவைப்பற்றி வெகு நேரம் சிந்தித்துக் கொண்டிருந்தாள். அதைக் கனுவென்று சட்டென உதறித் தள்ள முடியவில்லை. கண்டதற்கெல்லாம் சந்துரு அவளை யோசனை கேட்பதில்லை. இது எதனுடைய அடையாளமோ மாதிரி இருந்தது.

ஜானுவுக்கு மனப் பிராந்திதானோ என்னவோ, அன்றிலிருந்து தன்னை மன்னி ஏதோ தினுசாய்ப் பார்ப்பது போலும் கவனிப்பது போலும் தோன் றிற்று, கேஸுக்கு அலையும் போலீஸ்காரன் கவ னிப்பதுபோல்.

மன்னி அப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்ச மாய்த் தன் சுய ரூபத்தைக் காண்பிக்க ஆரம்பித் தாற் போலவும் இருந்தது. திடீரென்று மணிக் கணக்கில் சுவரில் சாய்ந்தவண்ணம் உட்கார்ந்து கொண்டோ நின்று கொண்டோ இருப்பாள்.

"என்னடி கெளரி, இப்படி உட்கார்ந்திண்டு இருக்கே? எழுந்து காரியத்தைப் பாரேண்டி!"

ஊஹூம். கெளரிக்குக் காது திடீரென்று செவிடாகிவிடும். வாயும் கிட்டிவிடும். ஓர் ஆணி யையோ கல்லையோ எடுத்துக்கொண்டு சுவரில் 'கெளரி மனோஹரி' என்று செதுக்கிக் கொண்டிருப் பாள். ஏனோ திடீரென்று முரண் செய்ய ஆரம் பித்துவிட்டாள். ஏதோ தனக்குள் ஓர் எண் ணத்தை ஸ்தாபிதம் செய்துகொள்ள ஆரம்பித்து விட்டாள். என்னவென்றுதான் புரியவில்லை. காரியங்களில் அசிரத்தைக்குக் கண்டித்தாலோ, கோபித்தாலோ வாய் திறவாள். வாசலில் ஜன்ன லுக்குப் போய் அடிக்கடி நின்று தெரு வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பாள். அரை மணி நேரத் திற்கு ஒரு முறை குழாயடிக்குப் போய் முகம் கழுவிக் கொள்வாள். எஞ்சிய பொழுதுக்குத் தன் பெட்டியிலிருக்கும் சாமான்களைக் கலைத்துப் புதுப் புது விதமாய் அடுக்கிக் கொண்டிருப்பாள். அதிலிருக்கும் நோட்டுப் புத்தகத்தில் ஏதோ குறித் துக் கொண்டிருப்பாள்.

சந்துருவின் அம்மாவுக்கு இதெல்லாம் புதிதா யிருந்தது. பிடிக்கவும் இல்லை. அவள் அப்படி ஒன்றும் பழங்காலத்து மனுஷியல்ல; ஆசாரக் குடுக்கையுமல்ல. ஆனால் என்னதான் புது சம்பந்த

மாயிருந்தாலும், நாட்டுப் பெண்ணின் சில பழக்க வழக்கங்களை அவளால் ஜெரித்துக்கொள்ள முடிய வில்லை.

"என்னடி கௌரி, அரை மணி நேரத்துக்கு ஒரு தடவை அலங்காரம்? நெத்திக் குங்குமத்தை நீ அடிக்கடி கலைச்சுக்கிறது எனக்குப் பிடிக்கல்லே. பூர்வ கர்ம வினையாலே தாயும் பெண்ணுமா நாங்கள் தான் அதை இழந்துட்டு நிக்கறோம். 'பளிச்'சுன்னு முகத்துலே பத்தும்படி மஞ்சள் பூசிக்க மாட்டையா? நீ இனிமே வெள்ளைப் புடவை கட்டாதே—"

"எங்காத்துலே—"

"உங்காத்துக்கு இதைக் கொடுத்தனுப் பிச்சுடு."

"எங்காத்துலே—"

"இதோ பார் கௌரி, உங்காத்துலே அப்படி யிருப்பேன், இப்படியிருப்பேன்-இதைப்பத்தி என்னி டம் இனிமே சொல்லாதே. இனிமே நீ இந்தாத்து மனுஷி. அதனாலே இந்தாத்துப் பழக்க வழக்கங் களைச் சுருக்கப் படிச்சுக்கோ. தெரியாட்டா எத்தனை தரம் வேணுமானாலும் சொல்லித்தரோம். ஆனால் புடிச்சுக்கோ; இஷ்டத்தோடு புடிச்சுக்கோ. உன் டோலக்கைக் கழற்றிவை. பெட்டியிலே என் தோடு இருக்கு. தரேன், போட்டுக்கோ. உன் பரந்த முகத்துக்கு அதுதான் நன்னாயிருக்கும். தொட்டதுக் கெல்லாம் உங்காத்தைப் பத்தி ஆரம் பிச்சுக்கிறையே, கொசுவம் வெச்சுப் புடவை கட்டிக் கொள்ள சொல்லிக் கொடுத்தாளா? அது தான் பாங்கப் பதிய வீட்டுக்கு லக்ஷ்மிகளையா யிருக்கும்."

ஆனால் மருமகள் திருந்துவதாயில்லை. மாமி யாருக்கு உள்ளூறக் கவலை பிடுங்கித் தின்ன ஆரம் பித்துவிட்டது. 'தனக்காகவும் தெரியவில்லை;

சொன்னாலும் தெரியவில்லையே! அல்லது தெரிந்து கொள்ளவே இஷ்டமில்லையா? நயம் பயம் எதற்குமே மசியாத பெண். இது பெண்ணா, அல்லது கொட்டு மேளம் கொட்டி வீட்டுக்கு வரவழைத்துக் கொண்ட விபத்தா? சந்துருவோ ஆபீஸுக்குப் போகிறான். அவன் இல்லாத சமயங்களில் இவள் அடிக்கும் லூட்டிகளில் எதைதை என்னென்று சொல்வது? நம்மைப் பற்றி அவன் ஏதாவது தப்பிதமாய் எண்ணிக் கொண்டு விட்டால்? ஆனால் இவள் ஏதோ மாபாரதத்துக்குத் தயாராய்க் கொண்டு வருகிறாள் என்கிற திகில் அவளைப் பிடித்துக் கொண்டு விட்டது. தின்னும் சோறு உடம்பில் ஒட்டவில்லை. பக்கென்று உடல் இளைத்துவிட்டது.

சந்துருவுக்கு என்னென்று புரியாவிட்டாலும் வீட்டில் ஏதோ சரியாயில்லை என்கிற வரைக்கும் புரிந்தது. ஆனால் யாரை என்னென்று கேட்க முடியும்?

"ஏம்மா, ஒரு மாதிரியா எப்பவும் சுருண்டு படுத்துக் கொண்டிருக்கிறாய்? உடம்பு சரி யில்லையா? வைத்தியனை வரவழைக்கட்டுமா?"

"ஒண்ணுமில்லேடா; வயசாயிடுத்தோன்னோ, தள்ளல்லே—"

"அப்படி என்னம்மா வயசு ஆய்விட்டது, திடீரென்று?"

கௌரியை ரகசியமாய்க் கூப்பிட்டான்.

"ஏன் அம்மா ஒருமாதிரியா யிருக்கிறாள்?"

"என்ன மாதிரி இருக்கிறார்? எனக்கென்ன தெரியும்?"

"ஜானு, அம்மா ஏன் ஒரு மாதிரியாயிருக் கிறாள்?"

"எனக்கென்ன தெரியும்? கவனிக்க எனக் கெங்கே போதிருக்கு? எனக்குப் பரீட்சை நெருங்

கிடுத்து. அண்ணு, இந்தப் பாடம் வாத்தியாருக்கே புரியல்லே. எனக்குச் சொல்லித்தாயேன்!—"

அன்று இரவு எத்தனை நாழிகை ஆயிற்று என்றே தெரியவில்லை. சந்துரு பேசினுல் விஷயத்துள் அப்படியே முழுகி விடுவான். கேட்பவர்களும் அவனுடன் ஒன்றி விடுவார்கள். அவனிடம் விசேஷ சக்திகள் இருந்தன. சாமர்த்தியங்கள் அல்ல; சக்திகள். கூடவே பிறந்து, அவன் கூப்பிடும் வேளைகளில் அவனிலிருந்து எழுந்து, அவனையும் அவனைச் சுற்றி யிருப்பவரையும் ஆட்கொண்டுவிடும் சக்திகள். பாடத்தை யொட்டி, அவன் வாயிலிருந்து அவனுடையனவே இல்லாதவை போன்று உதிர்ந்த வார்த்தைகளையும் தர்க்கங்களையும் ஸ்தம்பித்துப் போய்க் கேட்டுக் கொண்டிருந்தாள். திடீரென்று அவளுக்குப் பிடரி குறுகுறுத்தது. தன்னை யாரோ கவனிப்பது போன்ற ஓர் உணர்ச்சி; திரும்பிப் பார்த்தாள்.

சந்துருவுக்கு அதற்கெல்லாம் சட்டெனக் கோபம் வந்து விடும்.

"நான் முக்கியமா ஏதோ சொல்லிக் கொண்டிருக்கிறேன். என்ன பராக்கு?"

"மன்னி அண்ணு!"

மன்னி ஜானுவையே அவள் மேல் வைத்த விழி மாருது கவனித்துக் கொண்டிருந்தாள். சந்துருவுக்குக் கூட அந்தப் பார்வை பிடிக்கவில்லை.

"கௌரி, ஏன் அப்படிப் பார்க்கிருய்? புசுக்கெனச் சத்தம் போடாமெ ஏன் அப்படி வந்து நிற்கிருய்?"

கௌரிக்கு விழி மாறவில்லை. அவள் தன் கணவனைக் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. சந்துருவுக்குக் கோபம் வந்து விட்டது.

"கௌரி, உன்னைத்தான் சொல்கிறேன். கௌரி! கௌரி!"

"என்னை என் வீட்டில் கொண்டு போய் விட்டு விடுங்கள்."

"**என்ன ?**"

திடீரென உயர்ந்த தொனி கேட்டு, சுவரோரம் கண்ணயர்ந்த அம்மாவுக்கு விழிப்பு தூக்கிப் போட்டுக்கொண்டு வந்தது.

"ஏண்டா அவளைக் கோவிச்சுக்கறே?"

கௌரி முகத்திலோ குரலிலோ எவ்விதமான உணர்ச்சியும் இல்லை; குரூரமான ஒரு வெறிச்சுத் தான் இருந்தது.

"என்னை என் வீட்டில் கொண்டு போய் விட்டு டுங்கோ!"

அம்மா கௌரியிடம் ஓடி வந்தாள். "என்னடி கௌரி பேத்தறே?"

கௌரி சந்துருவைப் பார்த்துக் கொண்டு பாடம் சொல்வது போல், "என்னை என் வீட்டில் கொண்டு போய் விட்டுடுங்கோ. இந்த வீட்டில் உங்க தங்கைக்கும் எனக்கும் சேர்ந்து இடமில்லை."

அம்மாவுக்கு உடல் வெட வெட வென உத றிற்று. "ஐயோ சந்துரு! இது மாதிரி தாண்டா ஏதோ என் வயத்தைக் கலக்கிண்டிருந்தது."

சந்துரு அம்மாவைப் பிடித்துக் கொண்டான். இல்லாவிட்டால் அவள் கீழே விழுந்திருப்பாள்.

ஜானு சந்துருவின் வலது கையையே வசியமான வளாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். அது மூடி மூடித் திறந்தது, எதையோ தேடுவது போல்.

"என்னை என் வீட்டிலே கொண்டு போய் விட்டுடுங்கோ. நீங்கள் விடாட்டா நானு வெளி யேறிப் போய்விடுவேன்—"

கொஞ்ச நாழிகை அம்மாவின் விசிவிசிப்பான அழுகையைத் தவிர, கூடத்தில் எதுவும் கேட்க

வில்லை. மன்னி எங்கேயோ பார்த்துக்கொண்டு நின்றாள். அவள் அப்போது அழகா யிருந்தாள். சந்துருவிடமிருந்து வார்த்தைகள் கிளம்பிய போது அவை அமைதியாகவும் சாதாரணமாயுந்தான் இருந்தன.

"கௌரி, நாளைக் காலை உன் அப்பாவுக்குச் சொல்லியனுப்புகிறேன். நீ போய் விடு."

"டேய், அவள் தெரியாமல் சொல்றாடா!"

"பூட்டு சாவி எங்கே வைத்திருக்கிறாய்? கௌரி பயப்படாதே, நீ சொன்ன வார்த்தைகளுக்கு உன்னை அடித்து விடுவேனோ என்று. உன்னை மடிக் கொம்பால் கூடத் தொடப் போவதில்லை—அம்மா, பூட்டு சாவி எங்கே வைத்திருக்கிறாய்? இரவு வரை இவளை இவளிடமிருந்து காப்பாற்றி இவளைப் பெற்றவரிடம் ஒப்படைத்து விட வேண்டும். இவளுக்கில்லா விட்டாலும் நம் மானத்தை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்."

சந்துரு பூட்டையும் சாவியையும் எடுத்துக் கொண்டு வாசற்பக்கம் சென்றான். தாழ்ப்பாளை இழுத்துப் போட்டு, சங்கிலி புரளுகையில் ஜானுவுக்குத் தன் மார் மேலேயே கல் இறங்குவது போல் இருந்தது.

துர்ச் சொப்பனம் போன்ற அந்த இரவை என்றும் மறக்க முடியாது. சொக்கட்டானில் காயை நகர்த்தினாற் போல் அவரவர் தம் தம் இடத்தில் நின்றபடி கழிந்த அந்த இரவை மறக்க முடியாது. இப்பொழுதுகூட அது ஏதோ திகிலை உண்டாக்குகிறது.

அவளைக் கூட்டிக் கொண்டுபோக வந்தவர்களும் அவளுக்குப் புத்தி சொல்லவில்லை. ஏன், என்ன என்று கேட்கும் மரியாதை கூட இல்லை. அவளுக்கு மூன்று தலை முறைக்குச் சாதம் போட எங்கள் வீட்டில் இருக்கிறது என்று சவால் கூறி

விட்டு அவள் தகப்பன் அவளைக் கைப்பிடித்து இழுத்துக்கொண்டு போய்விட்டான்.

வீட்டுக்கு வந்து குடித்தனம் பண்ணி இன்னும் பத்து மாதங்கள் முழுக்க ஆகவில்லை. கௌரி போய் விட்டாள்.

அப்படி அவள் போகும் போது மூன்று மாதங்களாய் ஸ்நானம் பண்ணவில்லை.

அவள் வீட்டை விட்டு வெளியேறின பத்து நாட்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. அப்புறம் ஈசல் கூட்டம் மாதிரி வதந்திகள் கிளம்ப ஆரம்பித்தன. அவைகளையும் ஓரளவு எதிர்பார்க்க வேண்டியதுதான். இது வரை எந்த நாத்தனாரோ, மாமியாரோ நல்ல பேர் வாங்கி யிருக்கிறார்கள்? ஆனால் மன்னிக்கு என்மேல் இவ்வளவு க்ஷாத்திரம் விழும்படி நான் என்ன செய்தேன் என்று ஜானு யோசிக்கையில் அவளுக்குச் சிரிப்புக்கூட வந்தது. ஏனெனில் அவள் அதிகம் வீட்டு விவகாரங்களைக் காதில் போட்டுக் கொள்வதில்லை. அவள் பாடங்களுக்கும், பள்ளிக்கூட அலுவல்களுக்குமே பொழுது சரியாயிருந்தது. நாளாக ஆகத் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும் தன்னைக் கண்டதும் ஏதோ தம்முள் ரகசியம் பேசிக்கொள்வதும், தோளை இடித்துக் கொள்வதும், தான் அவர்களைப் பார்க்கவில்லை என்று நினைத்துக்கொண்ட போதெல்லாம் தன்னைச் சுட்டிக் காண்பிப்பதும் ஜானுவுக்குப் புரியவில்லை, பிடிக்கவில்லை. அப்புறம் ஒரு நாள் அவளைப் பள்ளிக்கூடத் தலைமை உபாத்தியாயினி கூப்பிட்டு அனுப்பித்தாள்.

"என்ன ஜானு? இப்படி உட்கார். உன்னிடம் ஒன்று சொல்ல வேண்டும். உன் வீட்டு விவகாரத்தில் புகுகிறேன் என்று நினைக்காதே. ஆனால்—, உன் மன்னி வீட்டில் இல்லையா?"

ஜானுவுக்கு ஆச்சரியம் கோபம் எல்லாம் ஒருங்கே வந்து விட்டன.

"இது வீட்டு விவகாரம். இதற்கும் பள்ளிக் கூடத்துக்கும் என்ன சம்பந்த மென்று எனக்குத் தெரியவில்லை" என்றாள்.

பிரின்ஸிபால், கீழ் நோக்கியவண்ணம், மேஜை மேல் பென்ஸிலை நிறுத்தி வைக்க முயன்று கொண்டே, "கோபிக்காதே ஜானு. நீ இம்மாதிரி சொல்வாயென்று எனக்குத் தெரியும். இன்று காலை உன் மன்னியின் தாயார் இங்கு வந்திருந்தாள். உன்னைப் பற்றி என்ன என்னமோ கன்னா பின்னா என்று பேசினாள்" என்றாள்.

"என்னைப் பற்றியா? என்ன சொன்னாள்?" ஜானுவுக்குக் கன் நரம்புகள் குறு குறுக்க ஆரம் பித்தன. வாத்தியாரம்மா பென்ஸிலை நிறுத்தி வைப்பதிலேயே முனைந்தாள்.

"என்ன சொன்னாள் என்று நான் வாய் விட்டுச் சொல்ல வேண்டுமா? அவள் கத்தின கத்தலும் ஆடின சதிரும் எனக்குப் பிடிக்கவில்லை. வெளியே போய்விடு என்று கூடச் சொல்லி விட்டேன்."

"ஓ!" என்றாள் ஜானு, சற்று ஏளனமாய்.

"ஆம்; அவள் வாயிலிருந்து கிளம்பிய ஆபா சத்தைக் கேட்டதும் உண்மையில் நம் வர்க்கத்தைப் பற்றியே நினைக்கக்கூட வெட்கமாய்ப் போய் விட்டது. ஆண்களை நாம் ஆயிரம் அவதூறு சொல் கிறோம், சம உரிமை வேணு மென்கிறோம். ஆனால் ஆண்களுக்கு இருக்கும் பெருந் தன்மை நமக்கில்லை. ஆண்கள் தவறுகள் செய்யலாம்; ஆனால் அவர் களுக்கு மனத்தில் அழுக்குக் கிடையாது. ஆபாசம் கிடையாது. ஆனால் நமக்கு அதுதான் இருக்கிறது. நமக்குப் பெருந் தன்மை கிடையாது. நம்மைப் பற்றியே நாம் தூற்றிக் கொள்ளும் ஆபாசங்களே அதற்குச் சாக்ஷி—"

"இந்தச் சக்கரவட்ட மெல்லாம் எதற்கு? உங்களுக்கு ஏதாவது சொல்லவேண்டு மென்றிருந்

தால் என் அண்ணனிடம் சொல்லுங்கள். உண்மை யில் இதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை.''

"வாஸ்தவந்தான். நல்ல வேளையாய் உன் அண்ணனை நேரிடையாகத் தெரியாவிட்டாலும் அவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் உன் அண்ணனிடம் சொல்லக் கூடியது மில்லை.''—திடீரென்று அலுப்புடன் பென்ஸிலை மளுக்கென்று இரண்டு துண்டுகளாய் முறித்து எறிந்து விட்டு, எழுந்து போய் முதுகை அவள் பக்கம் திருப்பிக்கொண்டு நின்றாள்.

"மொத்தத்தில் எனக்கு ஒன்று படுகிறது. நான் நமக்காக நடத்தும் இந்தப் பள்ளிக்கூடத் திலேயே வர வர எனக்கு நம்பிக்கை குறைகிறது. ஏனெனில் இள வயதிலேயே நம் கதிக்கான வர்கள் மரியாதையாய் அந்தக் காலத்திய வழக்கப் பிரகாரம் உடன்கட்டை ஏறி விடுவதே நலம். உயிர் போனாலும் மானமாவது பிழைக்கும். நான் சொல்லுகிறது புரிகிறதா? அல்லது இதை விடப் புரியப் பண்ண வேண்டுமா?''

"ஸிஸ்டர்—சந்துரு என் அண்ணா!'' என்று ஜானா அலறினாள்.

ஸிஸ்டர் அவளிடம் வந்து அவள் தோள்மேல் கை வைத்தாள். அவள் கண்கள் கலங்கியிருந்தன.

"எனக்கு அது தெரியும் ஜானா! உன்னை ஜாக்கிர தைப் படுத்தவே உன்னைக் கூப்பிட்டேன். இது பொல்லாத உலகம். சுத்த அல்பம். மானங்கெட்ட உலகம். உட்கார்ந்துகொள். வேணுமானால் இங் கேயே கொஞ்ச நாழிகை படுத்துக் கொள்.''

ஜானாவுக்கு மார்பு 'பக் பக்'கென அடைத்தது. "இல்லை ஸிஸ்டர்; நான் வீட்டுக்கே போறேன்—''

"ஜானா, இதெல்லாம் நீ சமாளித்துக் கொள்ள வேண்டும். நீ இவ்வளவு கோழையா யிருப்பாய்

என்று தெரிந்தால் நான் உன்னைக் கூப்பிட்டே இருக்கமாட்டேன்.

ஜானு போகும் வழியெல்லாம் குழந்தை மாதிரி விக்கி விக்கி அழுது கொண்டே போனாள். தான் பண்ணின குற்றந்தான் என்ன? சந்துருவுடன் கூடப் பிறந்ததும், தான் கைம்பெண்ணாய் வீடு வந்து சேர்ந்துவிட்டதுந்தானே? அதன் அபாண்ட விளைவை எண்ணவே முடியவில்லை.

அம்மாவுக்கு அவள் முகத்தைப் பார்த்ததும் ஒன்றுமே புரியவில்லை.

"ஏண்டி ஜானு?"

ஜானுவுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

"சந்துரு, ஜானு ஏனோ அழறுடா!"

சந்துரு அறையிலிருந்து வெளிவந்தான்.

"ஏன் அழுகிறாய்?"

ஜானு பதில் பேசாமல் அழுது கொண்டிருந்தாள். அவளைச் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுச் சந்துரு வெளியே சென்றான். அவன் திரும்பி எப்போது வந்தான் என அவளுக்குத் தெரியாது. குப்புறப் படுத்துக் கைகளிடை முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்தாள்.

"ஜானு, நீ எனக்கு ஒன்றும் சொல்ல வேண்டாம்!"—அவன் குரல் நடுங்கிற்று. "நான் உன் பள்ளிக்கூடத்துக்குப் போய் வாத்தியாரம்மாளைக்கண்டு வருகிறேன். நான் எல்லாம் தெரிந்து கொண்டு விட்டேன். எனக்கு வாய்த்தவள் பதர். அதுவும் அது முளைத்த மண்ணிற்குத் தகுந்தாற் போல்தான் பயிராயிருக்கிறது. இது நமக்கு நேர்ந்திருக்க வேண்டாம். ஆனால் நேர்ந்தது நேர்ந்து விட்டபின், நேர்ந்ததை அநுபவித்துத்தான் தீர

வேண்டும். இது எங்குக் கொண்டு போய் விடுமோ நான் அறியேன். எங்கு வேண்டுமானாலும் கொண்டு விடட்டும். ஒன்று மாத்திரம் உனக்கு ஞாபகப் படுத்துகிறேன். நம் வீட்டு மாப்பிள்ளை இறந்த பொழுது, உன் தலையை என் மடியில் வைத்துக் கொண்டு, 'ஜானு நீ இனி என் தம்பி. எனக்கு நீ; உனக்கு நான்' என்று சொன்னேனே! உனக்கு நினைவு இருக்கிறதா? எனக்கு இப்பவும் எப்பவும் அப்படித் தான்."

ஜானுவுக்கு அழுகை புதிதாக மடை திறந்து கொண்டு வந்தது.

*　　　*　　　*

ஜானுவுக்கு ஏதோ தனக்குள் 'லொட்'டென்று ஓட்டை விழுந்து விட்ட மாதிரி. ஓர் உணர்ச்சி— இடி விழுந்து பள்ளம் ஆகிற மாதிரி. தன் வாழ்க்கை தான் வீணாயிற்று என்றால், அண்ணா வாழ்க்கையும் இப்படிப் போக வேண்டுமா? அம்மாவுக்கு இந்த வயசில் அநுபவிக்க வேண்டியது இன்னும் எவ்வளவு பாக்கி? குடும்ப மானம் ஏன் திடீரென்று அவிழ்ந்த பொட்டலம் மாதிரி ஆகி விட்டது?

"ஏண்டி ஜானு, உன் மன்னியை நீ தான் வாழ விடல்லையாமே! கிழவி கூட நல்லவளாம். நீ தான் தடங்கலா நிக்கறையாம்!"

"என் காதுலே எதுவும் போடாதேங்கோ, மாமி!"

"உன் மன்னியை இன்னிக்கு நான் சினிமாவிலே பாத்தேன். அடையாளமே தெரியல்லே. எங்கிருந்தடி திடீர்னு கோண வகிடு வந்தது? அவள் ரிப்பன் என்ன, உள்பாவாடை தெரிய ஜார்ஜெட் ஸாரி, மாரிலே ப்ரூச்சு, கையிலே கடிகாரம்!-இப்போ என்ன அவளுக்கு மாசமா? கூட அவள் அம்மாவும் வந்திருந்தா. ஏதேதோ பேசினோம். 'புகுந்த

இடத்திலேதான் என் பொண்ணுக்குச் சுகமில்லே. வயறும் பிள்ளையுமா யிருக்கா. இருக்காளோ, போயிடுறுளோ—அவள் ஆசைப்பட்டபடி இருக்கட்டும்னு இருக்கேன்' என்கிறுள்."

"'என்னடி கௌரி. சௌக்கியமா? எப்போ புக்காம் போப்போறே? வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் இன்னும் இருக்கே'ன்னு ஜாடையாக் கேட்டேன். அது ஸ்டைலா, பின்னல் ரிப்பனைச் சீண்டிண்டு, அசட்டுச் சிரிப்பு சிரிச்சுண்டு, கம்முனு இருக்கு. எனக்கு அப்பவே தெரியும், நம்ம மாதிரி குடும்பத்துக்கும் அவா ஸ்டைலுக்கும் சரிப்படாதுன்னு. என்னை ஒரு வார்த்தை கலந்திருந்தால் இந்த சம்பந்தத்தை அப்பவே தடுத்திருப்பேன்."

"போங்கோ மாமி; தயவு செய்து போங்கோ!"

ஜானு இரு காதுகளையும் பொத்திக் கொண்டாள்.

"என்னமோவா அம்மா, விஷக்கடி வேளை. உங்களையும் எனக்குத்தெரியும்; அவாளும் கெட்டவாளில்லே. இந்தக் காலத்துலே வீட்டுக்கு வரதே குதிரைகளாய்த்தான் வரதுகள். அதுகளை விட்டுத்தான் பிடிக்கணும்."

"சரி, போறும் மாமி."

ஆனால் இந்த மாமி சொல்ல வந்ததை முடித்துக் கொண்டுதான் விடுவாள்.

"இப்பவும் ஒண்ணும் குடி முழுகிப் போயிடல்லே. நீ எங்கேயாவது ஹாஸ்டல்லே போய்ச் சேர்ந்துடேன்! உனக்கு ஏன் இந்தப் பொல்லாப்பு?"

—"யார் இவள்?"

பின்னல் குரல் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள். பின்னல் கைகளைக் கட்டிக் கொண்டு உயரமாய் சந்துரு நின்று கொண்டிருந்தான்.

"என்னடாப்பா, நான் தான்—"

"நீங்கள் யாராயிருந்தாலும் சரி, வாசற்படி விட்டுக் கீழிறங்குங்கள்."

"ஆ – ங்-ங்-ங்?"

"நான் இழுத்துக் கொண்டு போய் உங்களை வெளியில் விடவா, மரியாதையாய் நீங்களே போய் விடுகிறீர்களா? இனி இந்த வாசற்படியில் உங்களை நான் காணக் கூடாது!"

கதவைத் தாழ்ப்பாளிட்டுக்கொண்டு சந்துரு கூடத்துக்கு வந்தான்.

"உங்கள் ரெண்டு பேருக்கும் ஒன்று சொல்கிறேன். ஊர் வம்பைக் கேட்டுக் கொண்டிருந்தால் இன்னும் இந்த வீடு உருப்படாமல் போய்விடும்."

"நாங்களாகப் போய் அழைக்கிறோமா? நம்மைத் தேடிண்டுன்னடா வரது!"

"இது நம் கஷ்டத்தைத் தீர்த்து வைக்கப் போவதில்லை. இதனால் நம் பலத்தைக் குறைக்கத்தான் முடியும். ஆகையால் அது தெருவோடு போனாலும் சரி, வாசற்படி ஏறி வந்தாலும் சரி, அதைச் சட்டை செய்யாமல் நம் காரியத்தைக் கவனிக்க வேண்டியதுதான்."

"நம் காரியந்தான் என்ன?"

அவன் முழுப் பார்வையும் அவர்கள் இருவரையும் அணைத்தது.

"இப்போதைக்குக் காத்திருப்பதுதான்."

"எதுக்கு?"

"அது புரியும் வரையில்."

அம்மாவுக்கு அலுப்பு வந்துவிட்டது.

"இந்தப் புதிரெல்லாம் யாருக்குப் புரியறது? இந்தமாதிரி இன்னும் எத்தனை நாள்? நம்ம சொத்து

அது. போய்க் 'கரகர' ன்னு இழுத்தாண்டு வந்து இந்தக் கன்னத்திலே நாலு, அந்தக் கன்னத்திலே நாலு கொடுத்தால் நல்ல மருந்தாகிவிடும்."

சந்துரு சிரிக்க முயன்றான். "அது நடக்காத காரியம் அம்மா. மானமுள்ளவளா யிருந்தால் இது வரைக்குமே வைத்துக் கொள்ள மாட்டாளே! நான் என்னவோ என்று நினைத்தேன். நம்பினேன். மோசம் போனேன்."

"இல்லை, காலுக்கு உதவாத செருப்பைக்கழட்டி எறிஞ்சுடு. நமக்குச் சௌகரியமா இன்னொண்ணு பார்த்துக் கொள்ள வேண்டியதுதான்."

"அதுவும் என் காரியம் அல்ல."

"பின் என்னதான் உன் காரியம்? இந்தக் குடும்பம், நேத்திக்கு வீட்டுக்கு வந்தவள் கூத்தில் குட்டிச் சுவராய்ப் போவதைப் பார்த்துக் கொண் டிருப்பதுதான் உன் காரியமா?"

சந்துரு பதில் பேசவில்லை. அவன் விழித்த விழியிலேயே அம்மாவுக்கு அழுகை அடங்கிப் போயிற்று. சந்துரு தன் அறைக்குச் சென்று விட்டான்.

காத்திருப்பதென்றால் என்ன? சந்துரு பின்னால் கையைக் கட்டிக் கொண்டு நிமிர்ந்த தலையுடன், ஜன்னலண்டை மணிக்கணக்கில் அசைவற்று நின்றிருப்பான்.

மலைத்தொடர்கள் அசையாமல், நின்று கொண் டிருக்கின்றன. அவை காத்துக் கொண்டிருக்கின் றனவா? காத்துக்கொண் டிருக்கின்றன என்றால் எதற்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன? ஐயனார் கோவிலிலோ கிராம தேவதைக் கோவில்களிலோ, மதில்மேல் பிரம்மாண்டமான சிலைகள் கையொடிந் தும் காலொடிந்தும், தலையில் பட்சிகள் எச்சமிட்டும் தம் தீனிகளைக் கிழித்துச் சதையும் ரத்தமும் சிந்த அவைகள் மேல்வைத்துத் தின்றும், வெயிலோ மழையோ, எதுவும் தெரிந்தோ தெரியாமலோ

பொருட்படுத்தாமல், வெண்டயம் போன்ற விழிகளை எந்நேரமும் விழித்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கின்றன; அவை காத்துக் கொண்டிருக்கின்றனவா? அவை காத்துக்கொண்டிருந்தால் எதற்குக் காத்துக்கொண் டிருக்கின்றன?

அம்மாதிரி மௌன அரணில் சந்துரு வீற்றிருக்கையில் அவனருகே போகக் கூட அச்சமாயிருக்கும்.

ஆனால் அதையும் பிளக்கும் ஏதோ ஒன்று அவனைச் சில சமயங்களில் சூழ்கையில் காதைப் பொத்திக் கொண்டு தலையை உதறிக்கொள்வான். அது என்ன, அவன் தன் கனவில் கேட்ட கானமா? தனக்குள் தானே பற்றிக்கொண்டு எரிவதன் துடிப்பா?

ஜானு நாளுக்கு நாள் இளைத்துத் தேய்ந்தாள். நல்ல எண்ணத்துடனே வேடிக்கைக்கோ நாலுபேர் பேசும் பேச்சும் சொல்லும் புத்திகளும் பொறுக்கக் கூடியனவாயில்லை.

"காயும்பூவுமாய்க் காய்ச்சுத் தழைக்கிற நாளிலே, உன் அண்ணனும், மன்னியும் ஏண்டி இப்படி இருக்கணும்?"

"எனக்கென்ன மாமி தெரியும்? அவளே தானே போனாள்!"

"அவள் போனதுக்கு உன்னைக் காரணமா ஏன் சொல்லிண்டு திரியணும்? இந்தக் காலத்திலே அண்ணனாவது தங்கையாவது! அவாவா வழியை விட்டு அவாவா ஒதுங்கி விடறதுதான் நல்லது."

ஜானுவுக்கு எதிலும் புத்தி செல்லவில்லை. பரீட்சைக்குப் பணம் கட்டினதுதான் மிச்சம்; பரீட்சைக்கு உட்கார முடியவில்லை. அவள் வளைய வருவதற்கும் அவளுக்குமே சம்பந்தம் இல்லாமல் போய்விட்டது. சப்தங்கள் இல்லாத இடத்தில் சப்தங்கள் கேட்டன; சப்தங்கள் இருக்கும் இடத்தில் காது செவிடாகிவிட்டது.

வைத்தியனிடம் காண்பித்தால், "ஒன்றும் புரியவில்லையே! உறுப்புக்கள் கோளாறில்லாமல் ஒழுங்காய்த் தானே வேலை செய்கின்றன! ஒன்றும் புரியவில்லையே!" என்று திகைக்கிறான். ஆனால் இளைத்து வந்தாள்.

"ஜானு, இன்னிக்கு உன் மன்னியோட அம்மாவைப் பாத்தேன். ஈரத் துணியோடெ அனுமார் கோவிலைச் சுத்திண்டிருந்தாள். நான் ஏதேதோ கேள்விப்படறேனே! ரகசியமாப் பூஜைகள் எல்லாம் நடக்கிறதாம். என்னமோ சஞ்சீவிமலை கொண்டு வர அனுமார் படத்திலே வாலிலே நாளுக்கு ஒரு பொட்டா ஒரு மண்டலம் வெச்சு முடிச்சு யார் வேண்டாதவாளோ அவா மேலே விடறதாமே! எனக்கென்னமோ பயமாயிருக்குடியம்மா. உன் அண்ணாவும் மன்னியும் எக்கேடு கெட்டுப்போறான்னு நீ ஒதுங்கிடறதுதான் நல்லது."

"நான் என்ன மாமி பண்ணினேன்! நான் அவளைப் போ என்றேனா? வருபவளை வேண்டாமென்கிறேனா?"

"அதென்னவோ அம்மா, நான் சொல்லறத்தைச் சொல்லிப்பிட்டேன்."

திக்திக்திக்திக்திக்திக்திக்திக்—

ஒரு நாளிரவு வீலென்று அலறிப் புடைத்துக் கொண்டெழுந்தாள்.

"என்னடி! என்னடி! ஜானு?"

கூந்தல் கசகசக்க அவள் தேகம் முழுவதும் வேர்வை கொப்புளித்திருந்தது, ஓடி வந்தாற்போல் மூச்சு இரைத்தது.

"இருட்டிலேருந்து கறுப்பா ஒரு உருவம் உருவாகிப் பிரிஞ்சு வந்து என்னைத் தீண்டினாற் போலிருந்தது, அம்மா!"

"பயப்படாதேம்மா. நம் சாஸ்தாவை நெனச்சுக்கோ, விபூதியிடறேன். ஐயனாரே! என்

குழந்தை எவ்வளவோ கஷ்டப்பட்டுட்டா; நீ தான் அவளைக் காப்பாத்தணும்.”

திடீரென்று எப்படித்தான் அது நேர்ந்ததென்று ஒருவருக்குமே தெரியவில்லை. உடம்பில் நீர் வைத்து விட்டது. அவளை ஒரு நாள் ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்க்கும் நிலைமை வந்து விட்டது.

ஆஸ்பத்திரியில் வெள்ளைப் பீங்கான் கற்கள் பதித்த தூய வெண்ணிறச் சுவர்களும், வார்டுகளில் வரிசை வரிசையாய் நிற்கும் கட்டில்களில் படுக்கை மேல் போர்த்த வெண் துப்பட்டிகளும், கால் மாட்டில் சுத்தமாய் மடித்து இடுக்கிய சிவப்புக் கம்பளிகளும், சதா வேலையாய் அங்குமிங்கும் வெள்ளை உடுப்பில் டாக்டர்களும் நர்ஸுகளும் அலைவதும் மனத்துக்குச் சற்று ஆறுதலாக இருந்தன.

“ஜானு! உன் அண்ணாவுக்குப் பிள்ளை பிறந்திருக்காமே! எங்களுக்கு சக்கரை கிடையாதா?”

ஜானுவுக்கு மார்பை இரண்டு தடவை அடைத்தது.

“நல்ல இடமாப் பாத்துக் கேட்க வந்தேளே, மாமி!”

சாயந்தரம் சந்துரு ஆஸ்பத்திரிக்கு வந்தான்.

“அண்ணா அண்ணா, எனக்கு மருமான் பிறந்திருக்கானுண்டா.”

சந்துரு ‘சூ’க் கொட்டிவிட்டு, “இன்னிக்கு டாக்டர் என்ன சொன்னார்?” என்றான்.

டாக்டர்களுக்கு அவள் நிலைமையைப்பற்றி ஒன்றுமே நிச்சயப்பட முடியவில்லை.

பிறகு——

வழக்கம்போல் ஒரு மாலை சந்துரு ஆஸ்பத்திரிக்கு வந்தான். அன்று கிறிஸ்துமஸ் தினம்.

வார்டைக் கடிதாசுப் பூக்களாலும், நிஜப் புஷ்பங்களாலும், வர்ண விளக்குகளாலும் அலங்கரித்திருந்தார்கள். ஜானு மாத்திரம் கட்டிலில் கழுத்து வரை சிவப்புக் கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தாள். அவள் கண்களில் அசாதாரண ஒளி வீசிற்று. ஓட இடமிலாது கடைசியில் ஆள்மேல் திரும்பிவிடும் மிருகத்தின் கண்களில் காணும் வெறி ஒளி. பீதியிலிருந்தே புறப்படும் விரக்தியின் தைரியம். அவன் கண்களில் எழுந்த வினவைக் கண்டு அவள் சிரித்தாள்.

"ஒண்ணுமில்லே அண்ணு, இன்னிக்குப் பல் தேய்க்கறப்போ ஏதோ புரையேறினல் போலே இருந்தது. வயத்திலே ஐஸ் வெச்சாப்பிலே சில்லின்னுது. கிளுக்குன்னு ரத்தம் கக்கித்து. ஒரு கையகலம் இருக்கும்—"

"ஆ! என்னது?"

அவன் அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

"உஷ், ஒண்ணுமில்லே. எனக்கு அதனலே ஒண்ணுமில்லே. தலைவலிதான் மண்டையைப் பிளக்கிறது. இதை உன்னோடு வெச்சுக்கோ. அம்மாகிட்டே சொல்லாதே. வீணு இடிஞ்சு போயிடுவா. இத்தோடு போச்சு. மறுபடியும் வரணும்னு ரூலா என்ன?"

ஆனல் அது மறு நாளும் வந்தது. அதற்கடுத்த நாளும் வந்தது. அடுத்த நாள், அடுத்த நாள்—விடாது ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வேளையும் தவருமல் ஐந்து மாதங்கள். இத்தனை ரத்தம் கக்கியும் அந்த உடலில் உயிர் இருந்ததுதான் அதிசயம். இன்னும் கக்குவதற்கு ரத்தம் இருந்தது அதைவிட அதிசயம்.

சந்துரு ஆபீஸைத் துறந்துவிட்டான். ஸ்திரீகள் வார்டு ஆதலால் மாலை வேளைதான் உள்ளே வர

முடியும். மற்ற வேளைகளில் வார்டு வாசலில் காவல் கிடந்தான். இரவழிந்தது. பகலழிந்தது. சிவப்புக் கம்பளியைக் கழுத்து வரை போர்த்து, கட்டிலில் கிடக்கும் ஜானு, வாசல்படியில் அவன் நின்று கொண்டு, நர்ஸ்களுடைய கோபத்தையும், டாக்டர் களின் சீறலையும் உணராது, அழுக்கேறிய தன் ஆடையை உணராது, குளிமறந்து, உணவு மறந்து, அவளைத் தவிர எல்லாமே மறந்து அவளையே கவ னித்துக்கொண்டு நிற்கையில் யார் கஷ்டம் அதிகம் என்று அவளுக்கே சொல்லத் தெரியவில்லை.

"யாரு அம்மா? உன் அண்ணுத்தையா? ஐயோ, பாவம்! உனக்கோசரம் உயிரையே விட்டுடுவாரு போல இருக்குதே! எங்களுக்கும்தான் கூடப் பொறந்தவங்க இருக்காங்களே!"

அன்று முதல்நாள் ரத்தம் வந்ததெனக் கேட்ட வுடன் துடித்தது தவிர, சந்துரு ஒன்றும் வாய்விட்டு அப்புறம் வேதனைப் பட்டதில்லை. அவளுடன் அதிகம் பேசினதுகூட இல்லை. மாலை வந்ததும் கட்டிலண்டை மௌனமாய், மணியடிக்கும் வரை உட்கார்ந்திருப்பான். அவளும் மார்பில் கோத்த கைகளின்மேல் தாழ்ந்த கண்களுடன் யோசனை பண்ணிக் கொண்டிருப்பாள்.

ஒரே ஒருநாள் அவன் அவளைக் கேட்டான். ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டுமென்பதற்கோ என்னவோ?

"என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?"

"இந்த ஜன்மம் இத்தோடு போனப்புறம் அடுத்த ஜன்மத்தில் அல்லது வேறெந்த ஜன்மத்தி லும் உன்னோடு கூடப்பிறக்கக் கூடாதுன்னு. உன் னோடு பிறந்து இப்போ படற அவஸ்தை போறும்!"

அவன் கண்களில் முதன் முதலாய்த் தண்ணீர் துளும்பிற்று. அதைக் கண்டதும் அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

"அண்ணு, அண்ணு, என்னை மன்னிச்சுடு. நான் ஏன் இப்படி விஷத்தைக் கக்கறேன்னு எனக்கே தெரியல்லே."

"பரவாயில்லை; என்னை என்ன வேணுமானுலும் திட்டிக்கொள். ஆனுல் உடம்பை மாத்திரம் எப்படியாவது சரிபண்ணிக் கொண்டுவிடு."

"இல்லே அண்ணு; எனக்கு ரொம்ப அலுப்பாயிருக்கு. நான் பிழைப்பேன்னு எனக்குத் தோணல்லே. எனக்குச் சாகப் போறேனேன்னு பயமாயில்லை. ஆனுல் அம்மாவுக்கு இந்த வயசுலே இந்தக் கஷ்டத்தையும் வெச்சுட்டுப் போறேனே, இந்தத் துக்கத்தைத் தவிர எனக்குச் சாகப் போருேம் என்கிற பயமில்லே."

"உயிருடன் இருப்பது எவ்வளவு முக்கியமில்லையோ, அதே மாதிரி சில சமயங்களில் சாவதும் ஒன்றும் முக்கியமில்லை." கரடி மயிரால் வளைத்த புருவங்களினடியில், கனிந்த தணலாய், அனல் கக்கும் கண்கள் அவளைத் துருவின. அவனுடைய தாழ்ந்த குரலின் தீர்க்கம் அவளை மெதுவாய் அழுத்தியது.

"சாவதையும் வாழ்வதையும்விட எதற்காகச் சாகிருேம், எதற்காக வாழ்கிருேம் என்பதுதான் முக்கியம். வாழ்க்கை வீம்பாகிவிடும்பொழுது அதில் சாவுக்கும் உயிருக்கும் பிரமாத இடமில்லை. ஆகையால் நீ இப்பொழுது செத்தால் உன் சாவுக்கு நான் அழப்போவதில்லை. ஆனுல் அது உன் தோல்வி என்றுதான் என்னுடைய பெரும் அழுகையாயிருக்கப் போகிறது. இன்று நீ செத்தால் ஊருக்காகச் சாகப் போகிருய். உனக்காகவே நீ சாகவில்லை. ஊர்ச்சொல் தாங்காமல் நீ சாகப் போகிருய். இந்த ஊருக்கு என்ன தெரியும்? உண்மைக்கும் பொய்க்கும் வித்தியாசம் தெரியுமா? எச்சில் பட்ட நாக்கு ஒன்றுதான் அதற்கு உண்டு. நீ உயிருடனிருந்தாலும் அதற்கு ஒரு வேடிக்கைதான்; நீ

இறந்தாலும் அதற்கு இன்னொரு வேடிக்கை. ஆகையால் அவர்களுடைய வேடிக்கைக்காக நீ சாகப் போகிறாயா என்பதைத் தீர்மானம் பண்ணிக்கொள். நாளடைவின் உபயோகத்தால் நைந்து நேரும் உடல் அழிவைத்தான் தடுக்கமுடியாது. ஆனால் இப்பொழுது உனக்கு வந்திருக்கும் சாவை நீ சாவதோ தவிர்ப்பதோ உன் இஷ்டத்தில்தான் இருக்கிறது. ஏனெனில் இந்தச் சாவை நீ செத்தால் அது சாவில்லை. நீ உயிருக்கு இழைக்கும் துரோகம் தவிர வேறில்லை.''

ஆஸ்பத்திரியில் நோயாளிகளைப் பார்க்க வந்தவர்கள் வெளியே போவதற்காக மணி யடித்தது. சந்துரு உயரமாய் எழுந்து நின்றான். நெற்றிப் பொட்டில் அடையடையாய் நரையோடிய மயிருக்கும், அடர்ந்த புருவத்துக்கும், க்ஷவரம் செய்ய மறந்து வளர்ந்த தாடிக்கும் அவன் ரிஷி போன்றிருந்தான். கனிவுடன் அவள்மேல் குனிந்தான்.

"ஜானு!''

"அண்ணா!''—அவள் உடல் பரபரத்தது.

"நீ என் தம்பி—''

அன்றிரவு அவள் ஒரு கனவு கண்டாள். அவளை ஒரு மாடு துரத்துகிறது. தட்டி நீட்டி நிமிர்த்திய கொடிக்கம்பி போல் வாலை உயர்த்திக்கொண்டு நாலுகால் பாய்ச்சலில், பீப்பாய் போன்ற உடல் குலுங்க அவளைத் துரத்துகிறது. அவள் ஓட அது ஓட, அவளை வெகு சீக்கிரம் நெருங்கிவிட்டது. அதன் மூச்சு அவள் முதுகை எரித்தது.

"அம்மா! அம்மா—''

கத்திக்கொண்டே ஓடுகிறாள். கல் ஒன்று தடுக்கிக் கீழே குப்புற விழுந்துவிட்டாள். மாடு அவள் மேலேயே வந்துகொண்டிருந்தது—வந்துவிட்டது. இனி எந்தக் கணம் கொம்புகள் முதுகில் ஏறிவிடப்

போகின்றனவோ! கண்ணை இறுக மூடிக்கொண்டு விட்டாள்.

'தடக்—தடக்-தடக்!' எங்கிருந்தோ குளம்பின் சப்தம் அவளை நோக்கி வருகிறது. மாடு அலறிக் கொண்டு ஓடிற்று.

'தடக் - தடக் - தடக்!'

அதைத் துரத்திக்கொண்டு ஓடும் அந்தக் குளம் பின் சப்தம் தூரத்தில் ஓய்ந்துகொண்டே போவது காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

'தடக் தடக் தடக் தடக் தடக்—'

இப்பொழுது சத்தம் நெருங்கி வருகிறது. ஆனால் மாட்டின் மிரண்ட ஓட்டத்தின் சப்தம் இப் பொழுது இல்லை. குதிரைக் குளம்புச் சப்தம் மாத் திரந்தான். கண்களைத் திறந்தாள். அவளுக்குச் சற்றுத் தூரத்தில் அது நின்று கொண்டிருந்தது. செவ்வரி படர்ந்த அதன் கண்கள் அவளை ஊடுருவின. பிறகு அது சாவதானமாய்த் திரும்பி வாலைச் சுழற் றிக்கொண்டு, பிடரிமயிர் சிலிர்க்க, தலையை உதறிக் கொண்டு எதிரே புதர்களிடையே சென்று மறைந்தது.

ஜானு கண் விழித்துக்கொண்டாள். ஜன்னலுக்கு வெளியே ஆஸ்பத்திரியின் முற்றங்களிலும், தாழ் வாரங்களிலும் 'ஜோ'வென மழை கொட்டிக்கொண் டிருந்தது. அது அவள் உள்ளேயே பிரவாகமாய் இறங்கி உடல் நரம்புகள் ஒவ்வொன்றிலும் குளிர்ந்து பாய்வது போலிருந்தது.

மறுநாள் அவள் ரத்தம் வாந்தியெடுக்கவில்லை. அடுத்த நாளும் இல்லை. அதற்கடுத்த நாள், அடுத்த நாள், அன்றிலிருந்தே இல்லை. எந்த வைத்தியத் திற்கும் கட்டுப்படாது தானாகவே வந்த வியாதி, அதே மாதிரி தானாகவே போய்விட்டது.

ஒருநாள் ஜானு வீடும் திரும்பிவிட்டாள். அவள் குணமாகி வந்து சேர்ந்ததுதான் தாமதம். சந்துரு

திடீரென்று ஒரு இளைப்பு இளைத்து ஒரு நரை நரைத்தான். சாய்வு நாற்காலியில் உடம்பு பஞ்சாய், கை கால் போட்டது போட்டபடி இரண்டு நாள் கிடந்தான். விபூதிப் பட்டைபோல் நெற்றியை உழுதுகொண்டு மூன்று வரிகள் விழுந்திருந்தன.

"ஜானு, வந்தயா? அம்மாடி, உன் அம்மா வயத்துலே பாலை வார்த்தயா? நீங்கள் எல்லாம் இனிமேலாவது நல்லபடியா இருக்கணும், அம்மா! நீ பிழைச்சது புதுப்பிறப்புத்தான். உங்கவீடு ராஜ குடும்பமா யிருக்கவேண்டியது. நல்ல மரத்துலே புல் லுருவி பாஞ்சாப்போலே உங்களுக்குன்னு கஷ்டம் வாய்ச்சிருக்கு!"

நாம் உலகத்தை விட்டு ஒதுங்க முயன்றாலும் உலகம் நம்மை விட்டு விடுவதில்லை.

"உன் மன்னிச் சிறுக்கி சொல்றாளாம். 'இருக் கறத்துக்குள்ளே சமத்தாய் ஆஸ்பத்திரிக்குப் போய்த் தொலைஞ்சாளே என் நாத்தனார், அப்படியே செத்துத் தொலையப் படாதோ? மறுபடியும் வந்து சேர்ந்துட்டாளா? இதுகளுக்கெல்லாம் என் பக வான் உசிரை இரும்பாலே அடிச்சுப் போட்டிருக் கானோ தெரியல்லே' என்றாளாம்."

"ஓ!"

அவளுடைய மன்னி வீட்டுத் தூற்றல் முன் போல் அவ்வளவு உறுத்தவில்லை. அவளுக்கே ஏதோ சில எல்லைகளைக் கடந்துவிட்டாற்போல் ஓர் உணர்ச்சி. உள்ளூற ஏதோ ஒரு வெற்றி வெறி.

"உன் மருமான் அப்படியே உன் அம்மாவை உரிச்சுவச்சிருக்கானும். கறுப்புத்தானும். உன் அண்ணு இன்னும் போய்ப் பார்க்கலையா? 'எங்கே போறார், பிள்ளைப் பாசம் இழுத்தால் தானு ஒரு நாள் வரார். நானு இனி போகமாட்டேன்' என்று சொல்லிண்டு திரியறாளாம்! இவ்வளவு அசடைக் கட்டிண்டு அழறதும் கஷ்டந்தான்."

அந்த ஐந்து வருஷங்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேளையும் எப்படிக் கழிந்தது என்பதற்கு அவளால் கணக்குச் சொல்லமுடியும்.

"அவ கிடக்காடி, அதைவிட்டுத் தள்ளு! சொல் லறவா என்னத்தைச் சொன்னாலும் தனக்காத் தெரியணும். ஏன் இப்படித் தன் தலேலே தானே மண் ணைப் போட்டுக்கறது? என்னதான் மலேலே விளை யட்டுமே, உரலிலே மசிஞ்சுதானே ஆகணும்? அப்படி என்னடி இவ ஜமீந்தார் வீட்டுப்பொண்ணு தட்டுக் கெட்டுப்போறது! இவள் அப்பனை எனக்குத் தெரி யாதா என்ன? விரலுக்கு மிஞ்சி வீங்கிப்பிட்டு எத் தனை பேருக்கு எவ்வளவு எவ்வளவு தொகைக்குப் பத்தரம் எழுதிக் கொடுத்திருக்கான், தெரியுமா? மானத்தை விட்டவாள்ளாம் பெரிய மனுஷான்னு, அவன் ரொம்ப ரொம்பப் பெரியமனுஷன் போ! அதுக்குச் சந்தேகமேயில்லே. மக்களுக்குச் சத்துரு மாதாபிதா."

மறுபடியும் நாட்கள் பழைய நாட்கள்தாம். வேலைகளும் பழைய வேலைகள்தாம். ஆட்டம்முடிந்து கூட்டம் கலைந்து, வெறும் நாற்காலிகளும் மேடை களும் மாத்திரம் நிற்கும் கொட்டகை போன்ற வெறிச்சிட்ட நாட்கள். கலகலப்பா யிருக்க முயன்று லும், பேச்சில் அதற்குச் சம்பந்தமற்ற எண்ணங்கள் எதிரொலித்துக் கொண்டிருக்கும் நாட்கள். வாய் தான் பேசிச் சிரித்துச் சீறித் தணிந்து மறுபடியும் சிரித்தது. மௌனமும் ஆழமும் நிறைந்த கண் களுடன் சந்துருமெதுவாய்மாடிப்படியேறுகையிலோ இறங்குகையிலோ, வளைய வருகையிலோ, வீட்டில் வாழும் பாம்பு நடமாடுவது போலிருந்தது. சத்தி யத்துக்குக் கட்டுப்பட்டு அதுவும் யாரையும் கடிக் காது. அதன் வழிக்கும் யாரும் போகமுடியாது. எந்தப் புதையலை அப்படிக் காத்தானோ?

சில சமயங்களில் கூடத்தில் மாட்டியிருக்கும் சுவாமி படங்களைப் பார்த்துக் கொண்டு நிற்பான்.

அவைகளில் கிருஷ்ணன் படம் ஒன்று. பால கிருஷ்ணன், குஞ்சம் கட்டிய புல்லாங்குழலை அக்குளில் இடுக்கிக்கொண்டு படபடவெனச் சிறகு களை அடித்துக்கொண்டு தன்னிடமிருந்து தப்ப முயலும் ஒரு பச்சைக் கிளியை இரு கைகளாலும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு, தலையை ஒரு பக்க மாய்ச் சாய்த்துக்கொண்டு சந்துருவைப் பார்த்துச் சிரிக்கிறான். சந்துரு செவிகளைப் பொத்திக்கொள் வான்.

"ஏண்டி, மருமான் முழிமுழியாய்ப் பேசறு னுமே! நான் கேள்விப்பட்டேன். உன் மன்னிக்குப் புதுசா ஒரு தங்கை பிறந்திருக்காம். அதுலேருந்து என்னமோ கசமுசப்பாயிருக்காம். என்னமோ உன் மன்னி அவ அம்மாவைக் கேட்டாளாம், 'எனக்குத் தான் புத்தியில்லேன்னு என்னைக் கூட்டிண்டு வந்துட் டேளே'ன்னு. 'எங்கேடி போறுன், பிள்ளைப்பாசம் இழுத்தால், தானு வரான்'னு என்னை அடக்கி அடக்கி வெச்சு அவரும் வரல்லே. என் வாழ்க்கையும் பாழ் பண்ணிட்டேள்' இன்னுளாம். 'நாங்கள் கூப்பிட் டோம்னு நீ ஏண்டி வந்தே' என்று அவ ஏசினுளாம். அப்படி இப்படி வார்த்தை முத்தி அவள் அம்மா பெண்ணை ஒரு அடிகூட அடிச்சுட்டாளாம். கேட்டையோ விபரீதத்தை! அம்மாவாயிருந்தா என்ன, பொண்ணுயிருந்தா என்ன? அவாளவா ளுக்குக் குழந்தைன்னு ஏற்பட்டுட்டா, அப்புறம் காட்டிலே வாழற புலி சிங்கம் கரடிதான். இந்தப் புத்தி அன்னிக்கே வந்திருந்தா இதெல்லாம் வேண் டாமோன்னோ? முதலையாவே பொறந்துட்டாக்கூட, ஆட்டை முழுங்கலாம், மாட்டை முழுங்கலாம், மனுஷனை முழுங்கலாம், அதுக்கோசரம் ஆனையை முழுங்கமுடியுமா? வாயைக் கிழிச்சிண்டு நிக்கவேண் டியதுதான்!—"

அப்புறம் ஒரு நாள், கோகுலாஷ்டமி தினம். குனிந்துகொண்டே, ஜானு வாசற்படியிலிருந்து இழை கோலத்தில் சிற்றடிகளைப் போட்டுக்

கொண்டே நடை தாண்டிக் கூடத்துள் வந்து கொண்டிருக்கையில் திடீரென்று, வெறும் பால் சதையில் அப்பம் போல் இரு குழந்தைப்பாதங்கள் அவள் வரையும் சிற்றடிகளுடன் ஒன்றினுற்போல் இருந்தன. கதவோரத்தில் பதுங்கிக் காத்திருந்த மிருகம்போல் தாய்மை உணர்ச்சி அவள்மேல் பாய்ந்து நெஞ்சைநெருக்குகையில் ஜானு அப்படியே ரேழிக் கதவில் சாய்ந்துவிட்டாள். கண்ணீர் மாலை மாலையாய்க் கன்னங்களில் வழிந்து குளிர்ந்தது. கைக் கந்தையிலிருந்து இழைகோல மாவு சொட்டுச் சொட்டெனச் சொட்டிற்று. பாதச் சங்கிலியின் சதங்கை சலசலத்தது. வெள்ளி அரைஞாண் பட்டை தீட்டிக்கொண்டு வளைந்து வளைந்து ஓடிற்று.

ஜானுவுக்கு இப்பொழுது எதுவுமே தாங்க முடிவதில்லை. சாவு தப்பினுலும் உடல் ஓட்டைச் சட்டிதான். எப்படியும் வீம்புக்கு வாழும் உயிர் தானே! அவள் தன் மருமானைப் பற்றி நினைப்பதுண் டென்ருலும் இம்மாதிரி இதுவரை நேர்ந்ததில்லை. ஆனுல் அவள் கொட்டகை மேடை அன்றிலிருந்து வெறிச்சென்றில்லை. இன்னும் அவள் கண்ணுல் கண்டிராத ராமதுரை அவள் மன அரங்கில் ஆட ஆரம்பித்து விட்டான். காலி நாற்காலி சோபாக் களிடை ஜானு ஒண்டியாய், சிரித்துக் களிக்க ஆரம் பித்து விட்டாள். எப்படியும் இது இப்படியே இருக்க முடியாது. என்றேனும் ஒரு நாள் வருவான் அல்லவா? தனக்காகக் காத்திருக்கச் சொல்லாமல் சொல்லுகிருன், அவ்வளவுதானே!

"அத்தே நான் வரேன் இரு. அத்தே நான் ஜ-ெட் - ஒளிஞ்சிண்டிருக்கேன். என்னைக் கண்டுபிடி! அத்தையாலே கண்டு பிடிக்க முடியல்லியே! முடியல்லியே! நானே வந்துாத்தேனே! மடிலே வந்து வீந்துத்தேனே!—"

அப்படி அவன் வந்த நாளும் வந்தது.

அன்று ஏதோ விடுமுறை. ரேழியில் சந்துரு பக்கத்து வீட்டுக் குழந்தையை மடியில் வைத்து அத்துடன் விளையாடிக் கொண்டிருந்தான்.

வாசலில் ஒரு ரிக்ஷா வந்து நின்றது.

"அண்ணு, மன்னிடா!"—

அம்மா ஈரக்கையைத் தலைப்பில் துடைத்துக் கொண்டு உள்ளிருந்து ஓடி வந்தாள். கஷ்டங்களைப் பட்டுப் பட்டு உடல் தளர்ந்து பெருத்துவிட்ட தாய்மலை போல் இருந்தாள்.

கௌரி இடுப்புக் குழந்தையைக் கீழே இறக்கி விட்டுக் கைகளைப் பிசைந்துகொண்டு நின்றாள்.

"என்னை மன்னிச்சுடுங்கோ!"

சந்துரு முகம் சுவர்ப் பக்கம் திரும்பியிருந்தது. இன்னும் அவன் தன் மனைவியைப் பார்க்கவில்லை. அவன் குரல் கணீரென்றது.

"ஜானு, இவளை முன்னால் பச்சை ஜலத்தில் தலைக்கு ஊற்றி ஸ்நானம் பண்ணி வைத்து வேறு புடவை உடுத்து இங்கு அழைத்துவா."

ஜானுவுக்குத் திக்கென்றது.

"இவள் பிறந்த வீட்டார், இவளுக்கு ஸ்நான பூர்வமாக இறந்துவிடவேண்டும், நான் இவளுடன் பேசுமுன்பு."

"அண்ணு, வீட்டுக்கு வந்த பெண்ணை அப்படி யெல்லாம் பண்ணக் கூடாதுடா!"

"நான் சொன்னதைக் கேள்."

"சந்துரு!"

"எனக்கு எதிர் பேசாதேயுங்கள்!" சந்துரு அடிபட்ட மிருகம்போல்கத்தினான். அவன் கண்கள் கொதித்தன. "இந்த நிமிஷத்திற்காக நான் இத்தனை நாட்கள், மாதங்கள், வருஷங்கள் காத்திருந்தேன். இந்த நிமிஷத்தை என்னிடமிருந்து

பிடுங்குபவரோ, இதை மாற்றப் பார்ப்பவர்களோ யாராயிருந்தாலும் சரி, அவர்களை நான் என்னுடைய சத்துருக்களாகவே பாவிக்கிறேன்!''

வறண்டு போன உதடுகளை அவன் நாக்கால் நக்கி ஈரப்படுத்திக் கொள்கையில் அவன் அசல் பாம்பு போலவே இருந்தான்.

ஸ்நானம் பண்ணிவிட்டு வேறு புடைவையுடன் கௌரி மறுபடியும் ரேழியில் வந்து நின்றாள். காலை வேளையின் சிறு குளிரில் உடல் கொஞ்சம் நடுங்கிற்று. அவள் முகத்தில் ஒன்றுமே தெரியவில்லை. அவள் முகமே ஒரு முக மூடி. ஜானுவுக்கு ஆச்சரியமாயிருந்தது. ஐந்து வருஷங்களுக்கு முன் அன்றிரவு கண்டபடி தான் இன்னும் இருந்தாள்.

''என்னை மன்னிச்சுடுங்கோ.''

அவள் வார்த்தைகளைச் சந்துரு வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை.

''பையன் சட்டை நிஜார் எல்லாவற்றையும் கழற்று.''

கழற்றினாள்.

''ஜானு, என் சொக்காய் ஜேபியில் கத்தியிருக்கிறது. கொண்டு வா.''

''அண்ணா! அண்ணா!'' என்று ஜானு அலறினாள். சந்துரு இன்னதுதான் செய்வான் என்று என்ன சொல்ல முடியும்? அவன் எதிர்பாராத தன்மைகளுடையவன். சந்துரு உள்ளே போய், பேனாக்கத்தியை எடுத்து வந்து, குழந்தை இடுப்புக் கயிற்றை அறுத்துக் கீழே எறிந்தான்.

''உன் வீட்டுத் துணிகளையும் கயிற்றையும் சுருட்டித் தெருவில் கொண்டு போய் எறி.''

கௌரி எறிந்து விட்டு வந்தாள். அவள் கண்கள் பெருகின. ''என்னை மன்னிச்சுடுங்கோ.'' சந்துரு கத்தியை மடக்கிக் கொண்டான்.

"நீ இந்த ஐந்து வருஷங்களாய் எப்படி இருந்தாய், என்ன பண்ணிக் கொண்டிருந்தாய் என்றெல்லாம் உன்னைக் கேட்கப் போவதில்லை. இந்த வீட்டிலும் உன்னை யாரும் கேட்க மாட்டார்கள். இது என் கட்டளை. ஆனால் இனி நீ இங்கு இருப்பதற்கு ஒரே காரணந்தான் உண்டு. உன் வயிற்றில் பிறந்த இந்தக் குழந்தைக்கு நான் தகப்பனாயிருக்கிறேன். என்னுடைய குழந்தையைப் பெற்றவளாய் நீ வாய்த்துவிட்டாய். அவ்வளவுதான்."

"என்னை மன்னிச்சுடுங்கோ!"

"உன்னை மன்னிப்பது—அதோ கூடத்தில் அடுக்கடுக்காய் மாட்டியிருக்கும் அந்தப் படங்களைக் கேட்டுக்கொள். அது என் வேலையுமில்லை. அதற்கு எனக்குச் சக்தியுமில்லை. ஏனெனில் நான் மனிதன்—" சந்துரு காதைப் பொத்திக் கொண்டு மாடிக்குப் போய்விட்டான்.

"என்னை மன்னிச்சுடுங்கோ."

ஜானு குழந்தையை வாரி மார்புடன் அணைத்துக் கொண்டாள்.

"அம்மா இந்தாம்மா—உன் பேரன்!"—இப்பொழுதுந்தான் அழுகை வருகிறது.

"அம்மா என்னை மன்னிச்சுடுங்கோ!"

"எல்லாரும் உன்னை மன்னிப்பார்கள், அம்மா! கொஞ்ச நாளைக்கு இப்படித்தான் இருக்கும். எப்படியோ, இப்பவாவது வந்தையே!"

"அக்கா என்னை மன்னிச்சுடுங்கோ!"

ஜானுவுக்குக் காது கேட்டதோ இல்லையோ. குழந்தையைக் கொஞ்சிக் கொண்டிருந்தாள். அவனை மார்போடு தழுவிக் கன்னங்களை மாறி மாறி முத்த மிடுகையில், பையன் மூச்சுத் திணறி விசித்துக்கொண்டு திமிறப் பார்க்கிறான். ஜானுவுக்கு அந்த ஒரு நிமிஷத்தில் எல்லாம் மறந்துபோய் விட்டது.

"என்னை மன்னிச்சுடுங்கோ !"

சந்துரு உள்ளூறக் கருகிப் போய் விட்டான். எவ்வளவு முயன்றும் அவனால் மறுபடியும் புஷ்பிக்க முடியவில்லை. ராமதுரையைப் பார்க்கையில், அவன் தனக்குள் ஏதோ மறந்து போனதை ஞாபகப் படுத்திக் கொள்வதுபோல் நெற்றிப் பொட்டைத் தேய்த்துக்கொண்டு நிற்பான்.

"டேய் கண்ணு! உங்கப்பாடா-உங்கப்பா கிட்டப் போடா! அதான் உங்கப்பா!" சந்துரு வேணுமென்றே முதுகை அவன் பக்கம் திருப்பிக் கொள்வான். 'என் குழந்தைக்கு அதன் தகப்பனையே பரிசயம் செய்து வைக்கும் கட்டம் கூட வந்துவிட்டது பார்த்தையா!' என்று குமுங்கிக் குமுங்கிக் கருகிப்போனான்.

"கொட்டு மேளம், கொட்டு மேளம்!"-பயல் கழுத்தில் ஒரு தகரத்தை மாட்டி அடித்துக் கொண்டு குஞ்சுநடை போட்டுக்கொண்டு வருவான். சந்துரு அவனைக் கவனிக்கையில் மழைக்காலத்தில் மேகங்களைச் சூரியகிரணம் பிளந்து எட்டிப் பார்ப்பதுபோல் முகம் சற்று இளகி அதன் வரிகளும் சுருக்கங்களுங்கூடச் சில மறைந்து இளமை யடைந்தாற்போல் தோன்றும். ஆனால் மறுபடியும் மூட்டமடைந்துவிடும். குழந்தை திகைத்து நிற்பான். அந்தக் கண்ணாவியைக் கண்கூடாய் ஜானு பார்த்துவிட்டு அவளுக்குப் பொறுக்கவில்லை. குழந்தையை அப்படியே வாரிக்கொண்டாள்.

"அடே! குழந்தை உன்னை என்னடா பண்ணித்து? அதை ஏண்டா வெறுக்கறே? அவன் உன் குழந்தைதாண்டா!" சந்துரு அசதியுடன் தலையை அசைத்தான்.

"இல்லை; அவனை என் குழந்தை என்று நான் நினைத்துக் கொள்ளும்படி அவள் வைக்கவில்லை. அது பிறக்கு முன்னரே அவள் அதைத் தன்

குழந்தை யாக்கிக்கொண்டு விட்டாள். எங்கள் இருவர் குழந்தை, அதனால் அது நம் குழந்தை என்று எண்ணுவதற்கே இடம் வைக்கவில்லை. எங்கள் குழந்தையா யிருந்தால்தானே அது என் குழந்தையாகும்? இனி அதற்கே வழி தோன்றுமா? நான் நினைக்கவில்லை. ஒரு வேளை நானும் அவனும் தோழர்களாவோம்; ஆனால் அப்பனும் பிள்ளையும் ஆவோமோ? இல்லை. என்னுள் அம்மாதிரி உணர்ச் சிக்கு ஆதாரமான ஏதோ எரிந்துவிட்டது. இனி நான் என்ன செய்வேன்!"

வாழ்க்கை வதங்கிப் போவது ஆச்சரியமல்ல. ஆனால் வதங்கிப்போன நினைவு மாத்திரம் வாடாமல் வாசமும் இலாது இருக்கும் நிலைதான் பயங்கரம்.

"எனக்கென்று இப்பொழுது ஒன்றுமில்லை. இதுவரை என் வீம்பு இருந்தது. இப்பொழுது நான் அதனுடையதாய் விட்டேன்."

வாழ்க்கை ஒரு பரீட்சைக் கணக்கு மாதிரி தானிருக்கிறது. எங்கேயோ எப்படியோ ஒரு சிறு தப்பு நேர்ந்துவிட வேண்டியதுதான்; விடை எங்கேயோ கொண்டுபோய் விட்டு விடுகிறது. இத் தனைக்கும் தெரிந்த கணக்கு; புரிந்த கணக்கு; முன்னால் போட்ட கணக்குத்தான்.

"என்னை மன்னிச்சுடுங்கோ!"

இத்தனை மதில்கள் எழும்பிய இடத்தில் தொங்குவதற்கு இடந்தேடி யலையும் வௌவால் போன்று, 'மன்னிச்சுடுங்கோ, மன்னிச்சுடுங்கோ' என்ற வார்த்தையின் ஒலியும் உணர்வும் சதா நீந்திக் கொண்டிருக்கும் சூழ்நிலையில் ராமதுரை, குழந்தை, என்ன செய்வான்? ஜானு இல்லாவிடில் அவனும் பாழாயிருப்பான். இந்த வீட்டில் ஏதோ நேரக் கூடாதது நேர்ந்துவிட்டதென மூங்கையாய்ப் புரிகிறது. நாளாக ஆக அரை குறையாகக் கொஞ்சங் கொஞ்சமாய் விவரங்கள் புரிந்து கொண்ட பிறகு,

அவன் அத்தையுடனேயே ஒட்டிவிட்டான். சில சமயங்களில் அவளையே அம்மாவென்று கூப்பிட்டுப் பார்த்துக் கொள்வான்.

சந்துருவும் கௌரியும் ராமதுரையைப் பெற்று அவளிடம் கொடுத்தாற் போல்தான் ஆகிவிட்டது. தான் வளர்த்த பிள்ளையின்மூலம் ஜானு தன் நிறைவு பெற்றாள்.

ராமதுரையும் சமாளித்துக்கொண்டு விட்டான். நல்ல வேளையாக அவன் காவிய புருஷன் அல்ல. காவிய புருஷர்களாலும் தெய்வங்களாலும் பிறர்க்குப் பெரும் பயன் இருக்கலாம். ஆனால் தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் அவர்கள் பெருந் துன்பந்தான்.

இதோ வருஷங்களும் ஓடிவிட்டன. ராம துரைக்குக் கல்யாணம் நடக்கிறது. ஜானுவின் இஷ்டம் அப்படித்தான். மருமான் கல்யாணத்தைச் சுருக்கப் பார்த்துவிட வேண்டுமென்னும் அவா. எப் படியும் ஓட்டைச் சட்டியாகிவிட்டதால், ராமதுரை வீட்டுக்கு வந்துவிட்டபிறகு உடல் நலிய ஆரம்பித்து விட்டது. ஆனால் அந்தப் பழைய பயங்கரத்துடன் அல்ல. கொஞ்சங் கொஞ்சமாய் நைந்து ஒடுங்க ஆரம்பித்தது. கொழுக்கட்டை அதில் வெந்தாய் விட்டது. இனி சட்டிக்கு உபயோகமில்லை.

கொட்டுமேளம் கொட்டுகிறது. இது எதற்கு? ராமதுரைக்கு மாத்திரமா? சந்துருவுக்குந்தான். தனக்குந்தான். ஏதோ இன்னும் தனக்குப் புரியாத முறையில் தன் மன்னிக்குந்தான். எல்லோருக்கும் இன்று ஒரு புதுக்கல்யாணம் நடந்துகொண்டிருக் கிறது; வீம்பின் நித்திய கல்யாணம்.

"கொட்டு கொட்டு, நன்றாய்க் கொட்டு..."

"கெட்டிமேளம், கெட்டிமேளம்! மாங்கல்ய தாரணம் நடக்கிறது; கெட்டிமேளம்!"

தம்பதி சமேதமாய ராமதுரை அத்தையை நமஸ்கரிக்க அறைக்குள் நுழைந்தபோது ஜானுவின் கண்கள் விழித்தது விழித்தபடிதான் இருந்தன. அவள் முகத்தில் அன்பும் இன்பமும் அமைதியும் நிறைந்த புன்னகை உறைந்து போயிருந்தது. தீராத் தாகம் தீர்ந்த முகத்தில்தான் அந்த பாவத்தைக் காணமுடியும்.

பின்னாலேயே சந்துரு வந்து நின்றான். அவன் பின்னால் கௌரி.

"அக்கா, என்னை மன்னிச்சுடுங்கோ!"......

ஜானுவுக்கு அது கேட்டதோ இல்லையோ, ஜானு தன் சுனை போய்ச் சேர்ந்துவிட்டாள்.

# ரயில்

**வா**ழ்க்கையின் சிக்கலே போன்று தண்டவாளங்கள் பின்னியும் பிரிந்தும், கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும், அதற்கு அப்பாலும் ஓடுகின்றன. அங்கங்கே ஆப்பு அறைந் தாற்போன்று தந்திக் கம்பங்கள் நிமிர்ந்து நிற் கின்றன. இருமருங்கிலும் வயல்களும், குன்று களும், வீடுகளும், மரங்களும், பாய்ந்து சுழன்று செல்கின்றன. ஒரு சமயம் ஆகாயத்தின் முழு நீலம்; ஒரு சமயம் அதில் அடித்த பஞ்சைப் போன்ற வெண்மேகம்; ஒரு சமயம் அத்தனையையும் மறைக் கும் புகைப்படலம்.

இத்தனைக்கு மிடையில், அத்தனையினதும் நடு நாடிபோல், அலுப்பற்று, ஓரே நிதானமான

வேகத்தில், ஒரு ரயில் வண்டித் தொடர், மரவட்டை போல் நெளிந்து நெளிந்து, விரைந்து செல்கிறது.

"ஜன்னலைத் திற!"

"இல்லேடா கண்ணு—அங்கே உட்காரப்படாதுடா—"

"மாட்டேன் – அங்கேதான் உக்காரணும்—நான் ஜன்னல் வழியாப் பாக்கணும்—ஐயோ—அம்மா இதோ பாரேண்டி-அக்கா திறக்க மாட்டேங்கிறுடி-!"

"சனி தொலையட்டும்; திறந்து விட்டுடேண்டி. எப்படியாவது அழாமலிருந்தால் போறும் -"

"இந்தா தொலைச்சுக்கோ."

வண்டிக்குள் தான் எத்தனைபேர், எத்தனை விதமாய், உட்கார்ந்து, படுத்து, நின்று, குமைந்து வருகின்றனர்! எத்தனைவிதமான பேர்கள்—எங்கெங்கிருந்தோ எங்கெங்கேயோ போகிறவர்—

எஞ்சினின் ஊதல் ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு போகிறது. அதுவே ஒவ்வொருவருக்கு அவரவர் மனத்திற்கேற்ப, ஒவ்வொரு விதமாய்ப் படுகிறது. ஒருத்தருக்கு இருப்புக் குதிரையின் உற்சாகமான கனைப்பா யிருக்கிறது; ஒருத்தருக்குப் பின்வரும் விபத்தின் முன்னோலக் குறியாய் மனத்தில் 'சுறுக்'கென்று தைக்கிறது.

மூணு நாலு பேர் சேர்ந்தாற்போல் ஒரே பெஞ்சில் நெரிகின்றனர்—

"என்னப்பா உன்னை நம்பி -"

"என்னத்தே என்னை நம்பி? நான்தான் அப்பவே சொன்னேனே - குதிரை என்னவோ நல்ல குதிரைதான், ஆனால் அந்த ஜாக்கி ஏறினால் கோவிந்தாதான் என்று! போனால்போறது போ-வர சனிக்கிழமை நைஜாம் பிளேட் இருக்கு போ-"

"அட பாவி—என்னடா இருக்கு இருக்கு என்கறே?-இன்னிக்குப் போனால் வீட்டில் அவள் மூக்கைச் சிந்திச் சிந்திப் போடுவாளேடா! எப்படியடா போய் முழிப்பேன்? அவளுக்கு அப்பப்போ குடும்பச் செலவுக்குக் கொடுக்கிற பணத்தில், அவள் மிச்சம் பிடித்து, கடுகு டப்பாவிலும் மிளகு டப்பாவிலுமாய்ப் போட்டு வைத்திருந்ததையெல்லாம் பிராய்ந்து எடுத்துக் கொண்டு முப்பதை முன்னூறாய்க் கொண்டு வரேன்னு சொல்லி வந்தேன்!"

"என்னடா மூக்காலே அழறே? இங்கே மாத்திரம் வாழறதோ? ஸ்வஸ்திக் வளையல் ஒரு ஜோடி அடித்துப் போன மாஸம்தான் அவள் பிறந்த வீட்டில் போட்டார்கள். இன்னிக்கு கழட்டிக் கொண்டு வந்து இங்கே கப்பங் கட்டியாச்சு—எல்லாம் இப்படித்தான்—"

"ஒரு நாள் வரதுதான், ஒரு நாள் போறதுதான்—இதெல்லாம் பார்த்து முடியாதப்பா."

"என்னப்பா பண்ணுவே—இன்னிக்கு உனக்கு இந்த வேதாந்த மிருப்பது ஒண்ணும் விநோதமில்லை—உன் ஜேபியிலே, லட்சணமாய் நூறு ரூபாய் நோட்டுகள் இரண்டு பதுக்கி யிருக்கை யோன்னோ!"

"எனக்கு எல்லாம் ஒண்ணுதான்—இருந்தாலும் ஒரே பேச்சுதான்; இல்லாவிட்டாலும் அதே பேச்சுத்தான்; என்னவோ-என்னய்யா—என்னய்யா அவ்வளவு அவசரம்? மேலே இடிச்சுண்டு ஓடறே! எதிரே நிக்கறேனே கல்லாட்டமா, தெரியல்லே?"

"இல்லை, மன்னிக்கவும் - இந்த ஸ்டேஷனில் தான் இறங்கணும்—அடிபட்டுடுத்தா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லேன்னு! பரவாயில்லே, போங்கோ—வண்டி பாஸாயிடுத்தே -"

"டிக்கட், டிக்கட் -"

"இதோ உள் ஜோபியிலே—ஐயையோ!"

"என்ன என்ன ?"—வண்டி முழுவதும் ஒரே கலவரம், ஆரவாரம்.

"பைக்குள்ளே தேளா - ? கொட்டிடுத்தா?"

"ஐயையோ! என் காசைக் காணுமே—கடியாரத்தைக் காணுமே—பர்ஸ்—டிக்கட்—"

"அதனால் என்னப்பா, நீ தான் சொன்னையே - இருந்தாலும் ஒண்ணுதான், இல்லா விட்டாலும் ஒண்ணுதான் என்று - எல்லாம் நீ சொல்லிக் கொடுத்த வேதாந்தம் தானே—"

"திருட்டா? யார்? யார் ?"

"யார், யார் என்றால் உங்ககிட்டே சொல்லிக் கொண்டு போவானா? எல்லாம் அவரே வழிகூட்டி யனுப்பிச்சாரே அந்த ஆசாமிதான் கைவெச்சிருக் கணும். இல்லாட்டா அவனுக்கென்னையா அவ்வளவு அவசரம், வண்டி புறப்படற சமயத்தில் இடிச்சுப் புடிச்சுண்டு இறங்கும்படியா?—"

"இதே மாதிரிதான் ஸார், நான் பத்து வருஷங் களுக்கு முன்னால் விருத்தாசல மார்க்கத்தில் போய்க் கொண்டிருக்கையில் - "

"—டாமிட்! டிக்கட், டிக்கட் - "

"ஒருத்தரையும் குற்றம் சொல்வதற்கில்லை. இந்த முழி பிதுங்கும் கூட்டத்தில் அவாளவாள் ஜேபியைப் பற்றியே சந்தேகம் வந்து விடுகிறது— தன் பையென்று நினைத்து இன்னொரு சட்டையில் கைவிட்டு விட்டான்! அவ்வளவுதான்—"

•

வண்டியின் ஊதல்எல்லாரையும் பரிஹஸிக்கிறது விதியின் விலக்க முடியாத கதி போன்றிருக்கிறது, வண்டி ஒரே திக்கில் செல்லும் தீர்மானம்.

"டேய், சொன்னத்தைக் கேளு—நீ ரொம்ப எட்டிப் பாக்கறே—காலை வாரி விட்டுடப் போறது-"

"நீ என் காலைப் புடிச்சுக்கோ - அதைவிட உனக்கு என்னடி வேலை? -"

அந்தப் பக்கம் முழுதும் இதைக் கேட்டதும் ஒரே சிரிப்பு.

"பேஷ் - பிழைக்கிற பிள்ளைதான்! என்ன இருந்தாலும் ஆண்பிள்ளைகள் ஆளப் பிறந்தவர்கள் தான்."

பிள்ளையைப் பெற்றகளுக்கு உள்ளூற ஆனந்தம் பொங்குகிறது.

"என்னடா, உன்னக்கா உனக்கு இன்னமும் சிசுரூஷை பண்ணிண்டு இருக்கணுமா அவளுக்குக் கலியாணம் ஆன அப்புறங் கூட? போனாலும் போறதுன்னு ஒரு வார்த்தை சொன்னையே அதுவும் மாப்பிள்ளையை எதிரே வெச்சிண்டு! -"

சர்க்கரை யென்று நினைத்து உப்பை வாயில் வைத்துக் கொண்ட முகம்போல், மாப்பிள்ளை மூஞ்சியில் அசடு வழிகிறது. அவனுக்குக் கலியாண வெறி இன்னமும் தணிந்த பாடில்லை- மாமனார் வீட்டில் க்ஷேத்ராடனம் போகப்போகிறார்களென்று வீட்டில் கூடச் சொல்லிக் கொள்ளாமல், 'டிமிக்கி' கொடுத்துவிட்டு வந்திருக்கிறான். அவன் மாமியார் ஏதோ பெரும் வெற்றியைக் கண்டுவிட்டது போல், பெண்ணையும் மாப்பிள்ளையையும், ஒன்றாய் உட்கார வைத்துவிட்டு மனமகிழ்கிறாள்.

அவனுக்குள் அவளையும் அவளையும் சுற்றித்தான் உலகமே சுழல்வதாய்த் தியானம். மணலில் தலையைச் சொருகிக்கொண்ட நெருப்புக்கோழிபோல், ஒருவரும் தன்னைப் பார்க்கவில்லையென்று அவன் நினைத்துக் கொண்ட போதெல்லாம், அவள் தோள் பக்கமாய்க் கையைப் போடுகிறான். இந்த விரசத்தில் தட்டும் வெறுப்பில் அவளுக்கு முகம் சுளிக்கிறது. அதே சமயத்தில் ஒரு திருட்டுச் சந்தோஷமும் அந்த வெறுப்பில் கலந்திருப்பதால், சுளிப்புக்

கரைந்து முறுவலாய் மாறுகிறது. இப்படியே அவள் பக்கத்தில், அவள் புதுப்புடைவை சலசலத்துக் கொண்டு, உடல் பட்டதும் படாததுமாய் இரு வரும் உராய்ந்து கொண்டு, இப்படியே-இந்த ரயில் எப்பொழுதுமே எங்கும் நிற்காமல் போய்க் கொண்டே இருக்காதா?

"இந்த ரயில் எப்போதான் நிற்குமோ தெரிய வில்லை!—"

"ஏன் இப்படிக் கரிச்செடுக்கறேள்?... எப்பவோ ஒரு தடவை சனிக்கிழமையும் ஞாயிற்றுக்கிழமை யும் சேர்த்தாப் போலே லீவு வாதே! வேளாவேளை எங்கெந்த ஊரிலே யிருந்தோ பெருமாளைச் சேவிக் கணும்னு வரான்—நாம் இப்படி பக்கத்து ஊரிலே யிருந்துண்டே ஒரு தடவையாவது பார்க்காமலிருக் கிறதான்னு கூப்பிட்டால்—"

"இதோ பார்—எனக்கு எங்கேயாவது போய்த் தலையை சாய்ச்சால் போறுமென்னிருக்கு. இத்தனை குழந்தையும் குட்டியும், மூட்டையும் முடிச்சுமாய்ப் போய், இந்தப் புண்ணியத்தைச் சம்பாதிச்சுண்டு வரணும்னு எனக்கு ஆசையே இல்லை -"

"உங்கள் கூட்டமே நாஸ்திகக் கூட்டம்தானே - உங்களுக்கெல்லாம் ஒரே ஆசைதான் - புகையிலை யைப் போட்டுண்டு கண்ட இடத்தில் துப்பவும் சீட்டாடிண்டு இருக்கவுமே யொழிய -"

"அம்மா, தாயே -"

"நீங்கள் என்ன வேணுமானாலும் சொல்லலாம். நீங்கள் சொன்னாலும் சொல்லாட்டாலும் நான் தாய் தான்—நானும் கலம் பெத்தாயிடுத்து!"

"ஐயோ, நம்ம வம்சாவளி யெல்லாம் இங்கே வந்து கூடவா படிக்கவேண்டும்!"

"ஏன் இப்படி -"

இல்லை, மற்றதொன்றும் கேட்கவில்லை. வண்டியின் ஊதல் எல்லாச் சத்தத்தையும் அடக்கிவிடுகிறது.

தடக் - தடக் - தடக் -

வண்டி விழுங்கவிழுங்க,தண்டவாளம் திரௌபதியின் துகில்போல் நீண்டுகொண்டே போகிறது. அது வளைந்து சுழன்று மறுபடியும் வெறித்துச் செல்லும் ரீதியைப் பார்க்கையில் அதுவும் காலத்தைப்போல் எல்லையே அற்றது போலிருக்கிறது. எங்கெங்கெல்லாம் எப்படியெல்லாம் போகிறது! ஓர் இடத்தில் தாபத்தால் உடைந்த இதயம்போல், பூமி பளார் பளார் என்று அங்கங்கே, தண்ணீரே காணுமல் வெடித்திருக்கிறது. இன்னோர் இடத்தில், துக்கம் நிறைந்த உள்ளத்தினின்று பிழியும் கண்ணீர்போல் சதுப்பு நிலத்தில் ஜலம் கசிகிறது. இன்னொரு சமயம், பாலத்தினடியில் இரு மருங்கிலும் கண்ணுடித் தகடு வார்த்தாற் போல் ஏரியில் தண்ணீர் விளிம்பு கட்டி அசைவற்று நிற்கிறது.

ஒரு சமயம், கோபத்தில் வெதும்பும் மனம் போல், வானத்தில் மேகங்கள், கறுத்தும் வெளுத்தும் புழுங்குகின்றன. இன்னொரு சமயம் ஆகாயம் பிரேதம்போல் ஒரே நீலமாய்ப் பூரித்திருக்கிறது.

ஒரு சமயம், மாலை வேளையில் மலரும் மலர்களின் மணம், மனத்தை மயக்குகிறது. மறுசமயம் ஜதையில் வேகும் பிணத்தின் நிணம் மூக்கைப் பொசுக்குகிறது. வண்டி ஒரு மூலையில் திரும்பியதும் அதோ சவுக்கந் தோப்புக்கப்பால், சுடுகாட்டினின்று எழும் ஜ்வாலைகளே தெரிகின்றன.

வேளை முதிர முதிரக் கவியும் இருளில், ஒரு விளக்கு வெளிச்சம் மினுக்கென்று தோன்றுகிறது. கண்மூடி வழிகாட்டும் லட்சணம்போல், எட்டியும் கிட்டியும் நிலையற்று எரிகிறது.

ரயிலில் பெஞ்சோரத்தில் ஒருத்தி இத்தனை பேரிடையிலும் தன்னந் தனியாய்ப் பதுங்கிக் கிடக்கிறாள். பாம்பின் கண் பட்ட இரைபோல் பார்வை நிலைதவறி, ஒரே குத்தலில் விறைத்திருக் கிறது. மார்த்துணி சரிந்திருப்பதுகூட அவளுக்குத் தெரியவில்லை. வண்டி அலறும் போதெல்லாம், அவள் கைகள் அவளை அறியாமலே அடி வயிற்றைப் பிட்டாய்ப் பிசைகின்றன.

அவள் போய்ச் சேரும் இடத்தில் என்ன காத்திருக்கிறதோ அவளுக்கு! 'வண்டி இவ்வளவு சீக்கிரம் பிரயாண முடிவை நெருங்குகிறதே' எனும் பயங்கரம் ஒரு பக்கம்;'ஐயோ! இந்தச் சங்கடத்தைச் சகிக்க முடியவில்லையே! ஒரே வழியாய்ச் சுருக்கப் போய்ச் சேர்ந்துவிட மாட்டோமா!' எனும் உள்ளப் பதைப்பில், உயிரே ஊசலாடுகிறது.

**"ஐயோ நான் படும்பாடு சிவனே—உலகோர் நவிலும்**
**பஞ்சுதான் படுமோ—சொல்லத்தான் படுமோ!—"**

"இதென்ன கஷ்டம்! நாம் இடமில்லாமல் படும் கஷ்டம் போதாதென்று பிச்சைக்காரர்களின் உபத் திரவம் வேறேயா? இந்தக் கும்பேனிக்காரன் எல்லாத் துக்கும் ஒரு வரி போடறானே, இவாள் மேலே ஒண்ணு போடப்படாதோ?"

"ஏன் ஸ்வாமின்னு, உங்களுக்கு அவ்வளவு தயாளம்! அவன் வயிற்றுக்கொடுமை; ஏதோ கத்தி விட்டுப்போறான்."

"ஏதேது அவனுக்குக்கூட வராத கோபம் பெரிய வாளுக்கு வராப்போலேயிருக்கு! பெரியவா ஏதே னும் வாரிசோ?"

"வாரிசு என்ன சுவாமி? பார்க்கப்போனால் உலகத்திலே எல்லாருமே பிச்சைக்காராள்தானே! நான் ஒரு பிச்சைக்காரன், நீரும் ஒரு பிச்சைக் காரன்--"

"என்னடா சொன்னாய் என்னை! நீ வேணுமானால் பிச்சைக்காரனாயிரு - என்னை - பல்லை - "

"சீச்சீ - "

"சூ - சூ - "-இது ஒரு சமாதானக்காரர்.

வண்டி முழுதும் ஏகக் கூச்சல்; களேபரம்.

'தடக் - தடக் - தடக்' - இது வண்டி.

"என்ன சிரிக்கிறேள்?"

"என்னத்துக்கு அழவேண்டும் என்றுதான் சிரிக்கிறேன் - "

"என்ன புதிர் போட ஆரம்பிச்சுட்டேளே?"

"புதிரேயில்லை. எல்லாம் வெட்ட வெளிச்சம் தான். எல்லாம் கண்ணெதிரே நடக்கிறதுதான். ஒரு சிமிழுக்குள்ளேயே உலகம் அடங்கி யிருக்கிறது. உனக்கு ஒரு பெரிய விந்தையா யில்லையா?—"

"இந்த மாதிரி எல்லாம் பேசினால் எனக்குப் புரிஞ்சுடுமோ?—"

"சொல்கிறேன், கேள்: அக்காவை விரட்டிக் கொண்டு ஜன்னலின் வெளியே வேடிக்கைபார்க்கும் சின்னப் பையனாய் நான் இருந்திருக்கிறேன். இன்னமும் மாப்பிள்ளைக் கருக்கழியாமல், வண்டியே தனக்காகத்தான் ஓடுகிறதென்று நினைத்துக் கொண்டிருக்கும் வயசுப் பிள்ளையாகவும் இருந்திருக்கிறேன். ஏண்டாப்பா இத்தனை பெரிய குடும்பத்தைப் படைத்தோம் என்று ஏங்கும் அந்தச் சம்சாரியாகவும் இருந்திருக்கிறேன்—"

"உங்கள் எண்ணத்தின் கடுப்புத்தானோ என்னவோ, அஞ்சும் பெத்து, வளத்து வயசுவந்த பிறகு ஒண்ணொண்ணாய்ப் பறிகொடுத்தோம்!"

"அதுவும் சரிதான்—நீயும் ரொம்பக் கஷ்டப் பட்டுவிட்டாய்; இல்லையென்று சொன்னேன்? ஏதோ

நீ பட்டதில் பாதியாவது நான பட்டிருக்க மாட்டேனு? உனக்கு இருந்தது எனக்கும் இருந்திருக்காதா?—"

"இப்பொ என்னத்துக்கு அதெல்லாம்?—"

"அதைத்தானே சொல்ல வந்தேன்!—உப்புமில்லே, புளியுமில்லாததற்கெல்லாம். உறுமிக்கொண்டும், கருவிக்கொண்டும், குலாவிக்கொண்டும் கொக்கரித்துக்கொண்டும் இருந்திருக்கிறேம் — இருக்கிறேம்—ஆனல் இப்போ..."

"என்ன, டக்குனு நிறுத்திட்டேள்?—"

"இப்போது, நமக்கும் வயசாகிவிட்டது. நீ முந்திக் கொள்கிருயோ, நான் முந்திக் கொள்கிறேனே—எல்லாம் பட்டாய்விட்டது. சந்தோஷப்படவும் அலுப்பா இருக்கிறது—துக்கப்படவும் தெம்பில்லே. என்னவோ போகிறேம், வருகிறேம் எங்கே போகிறேம், எதற்காக என்னும் அக்கறையும் அதிகமில்லே. இந்த மாதிரி சமயங்களில்—உலகத்தைவிட்டு நாம் ஒதுங்கி நின்று, அதன் வேடிக்கையைக் கவனிக்கும்போது மனதிற்கே ஒரு நிம்மதி பிறக்கிறது. ஏதோ சந்தேகம் தெளிந்தாற்போல் ஒரு கனம் குறைகிறது—இதைச் சரியாய் வெளியில் சொல்லக்கூட முடிகிறதில்லே. மனதுக்கு மனதுதான்.

"அதே சமயத்தில் உலகத்தில் இருக்கும் சுகதுக்கங்களுக்கும் குறைவில்லே. உலகம் மாத்திரம் சுழன்று கொண்டுதான் இருக்கிறது. காலமும் கடந்து கொண்டிருக்கிறது, இத்தனையையும் ஏந்திக்கொண்டு இந்த வண்டி போகிறமாதிரி. பார், இதுவும் உலகத்தின் நடுநாடி போல், அடித்துக் கொள்கிறது ஒரே நிதானமாய்—தடக்—தடக்—"

தடக்—தடக்—தடக்—தடக்—



